ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வாரருளிச் செய்த

# திருவாய்மொழி - ஆரும்பத்து.



ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியது.

(இரண்டாம் பதிப்பு.)

ஸ்ரீஸ்வாமியின்

ஷஷ்ட்யப்த பூர்த்தி நினைவு மாலையின்

பதினைந்தாவது மலராக வெளியிடப்பட்டது.

கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

—:O:—

விலை 2—6—0

1953

ஸ்ரீ

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நம்மாழ்வார்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழி

## ஆறாம்பத்து முதல் திருவாய்மொழி — வைகல்பூங்கழிவாய்

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யார்த்த தீபிகையோடு கூடியது.

—:o:—

அவதாரிகை:—கீழ் ஐந்தாம்பத்தில் * நோற்ற நோன்பு என்கிற திருவாய்மொழி தொடங்கி நான்கு திருவாய்மொழிகளிலே ஆழ்வார் அடுத்தடுத்து எம்பெருமான் திருவடிகளிலே சரணாகதி செய்தார். பலன் கொடுத்தே தீரக்கடவதான அந்த சரணாகதியும் பலிக்கவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால் நம்முடைய பாக்யமே யாகும். ஆழ்வாருடைய திருவாக்கில் நின்றும் இன்னமும் பாசுரங்களை வெளியிடுவித்து உலகத்தை வாழ்விக்கத் திருவுள்ளம் பற்றின எம்பெருமான், நமக்காகவே ஆழ்வாருடைய சரணாகதியையும் நிஷ்ப்பலமாக்கினான்.

கீழே * பிறந்தவாறும் என்கிற திருவாய்மொழியிலே, * உன்னையென்று கொல் சேர்வதுவே என்றும் * உன்னையென்று தலைப்பெய்வனே என்றும் * உன்னையென்று கொல்கூடுவதே என்றும் இங்ஙனே பலவாறு கதறி எம்பெருமான் பக்கலிலே கடுகச் சேரவேணுமென்று பாரித்த ஆழ்வார், அவ்வெம்பெருமான் திருவண்வண்டூர் என்கிற மலைநாட்டுத் திருப்பதியிலே ஸந்நிதி பண்ணியிருக்கும்படியை நோக்கி அங்கே தாம் சென்று சேரமாட்டாதே தம்முடைய தசையை அப்பெருமானுக்குத் தெரிவிக்கும்படி தூதுவிடுகிறார் இத்திருவாய்மொழியில். அதாவது—ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து பெண்பாவனை பெற்றுச் சில பக்ஷிகளை எம்பெருமான் பக்கலிலே போகவிடுகிறார். பகவத் விஷயத்தில் அந்வயிப்பிக்குமவர்களைப் பக்ஷிகளாக ப்ரதிபத்தி பண்ணுகிறதென்று ஸ்வாபதேசார்த்தமறிவது. பறவையானது இரண்டு சிறகுகளாலே எப்படி உயர்கதியை அடைகின்றதோ அப்படியே ஞான. அனுட்டானங்களினால் உயர்கதியை அடைகின்றவர்களான மஹான்களே பக்ஷிகளாக மறைத்துப் பேசப்படுகின்றார்கள். ஆசார்யர்களென்ன, உடன் கல்வி பயின்றவர்களென்ன, புத்திரர்களென்ன, சிஷ்யர்களென்ன ஆகிய இவர்கள் தூதுவிடப்படுகின்றவர்களாக ஆங்காங்கு ஸந்தர்ப்பத்திற்குத் தக்கபடி கொள்ளக்கடவது.

திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்கள் நான்கு:—(க) அஞ்சிறையமடநாராய் (2) இத்திருவாய்மொழி. (ங) பொன்னுலகாளீரோ. (ச) எங்கானலகங்கழிவாய். எம்பெருமானுடைய வியூஹநிலையை நோக்கி முதல் தூதுவிடப்பட்டதென்றும், விபவாவதாரத்தை நோக்கி இரண்டாந் தூது விடப்பட்டதென்றும், பரத்துவத்தையும் அந்தர்யாமித்வத்தையும் நோக்கி மூன்றாந்தூது விடப்பட்டதென்றும், அர்ச்சாவதாரத்தை நோக்கி நான்காந்தூது விடப்பட்டதென்றும் ஆசாரியர்கள் நிரூபித்துக்காட்டுவார்கள். "தம் பிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டைவாஸமும் மறப்பித்த க்ஷமாதீக்ஷாஸாரஸ்ய ஸௌந்தர்யங்களையுணர்த்தும் வ்யூஹவிபவபரத்வத்வயார்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்" (156) என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் அவ்விடத்து வியாக்யானமும் இங்கு உணரத்தக்கன.

இத்திருவாய்மொழி விபவாவதாரத்தில் தூது விடுவதாகத் தேறுகின்றது. ஆனது பற்றியே மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் "வைகல் திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு" என்றருளிச்செய்தார். திருவண்வண்டூரிலே தூதுவிடுகிறபடியாலே 'இது அர்ச்சாவதாரத்தில் தூது' என்று நிர்வஹிக்கலாகாதோ வென்னில்; இதில் பத்தாவது

பாசுரத்தில் “மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே” என்று அமைந்திருக்கும்படியை நோக்கியும் அர்ச்சாவதாரத்தாநுபதிகம்வேறே ஒன்று இருப்பதை நோக்கியும் ஆசாரியர்கள் இங்ஙனே வகையிட்டருளினது மிகப்பொருந்தும்... ... ... ... ... *

வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங்குருகினங்காள் *
செய்கோள்செந்நெலுயர் திருவண்வண்டூருறையும் *
கைகொள்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
கைகள்கூப்பிச்சொல்லீர் வினையாட்டியேன்காதன்மையே. 1

| | |
|---|---|
| வைகல் | எப்போதும் |
| பூ கழி வாய் | அழகிய நீர்நிலத்திலே |
| வந்து மேயும் | வந்திருந்து இரைபண்ணுகிற |
| குருகு இனங்காள் | கொக்கின் கூட்டங்களே! |
| செய் கொள் செந்நெல் உயர் | கழனி நிரம்பிய செந்நெற்பயிர்கள் ஓங்கி வளர்ந்திருக்கப்பெற்ற |
| திரு வண் வண்டூர் உறையும் | திருவண்வண்டூரிலே நித்யவாஸம் பண்ணி நிற்பவனும் |
| கை கொள் சக்கரத்து | திருக்கையிலே திருவாழியாழ்வானைக் கொண்டவனும் |
| கனி வாய் | கனிபோன்ற திருவதரத்தையுடையவனுமான |
| என் பெருமானை | எம்பெருமானை |
| கண்டு | நேரில் பார்த்து |
| கைகள் கூப்பி | அஞ்ஜலிசெய்து |
| வினையாட்டியேன் காதன்மை சொல்லீர் | இங்ஙனே பிரிந்திருக்கும் பாவமுடையவளான என்னுடைய ஆவலைச் சொல்லுங்கோள். |

[வைகல் பூங்கழிவாய்] திருவண்வண்டூரிலே சென்று எம்பெருமானுக்கு என் அபிநிவேசத்தைத் தெரிவியுங்கோளென்று சில குருகுகளை நோக்கி இரக்கின்றாள் பராங்குசநாயகி. குருகினங்கள் வாழ்வது நீர்க்கரையிலேயாகையாலே “பூங்கழிவாய் வந்துமேயுங் குருகினங்காள்” என்று விளிக்கின்றாள். கடலையடுத்த நீர்ப்பரப்புக்குக் கழியென்று பெயர். பூங்கழியென்று—மநோஹரமாயிருக்குந்தன்மை சொல்லுகிறது. வாய்—ஏழனுருபு. கழியிலேயென்றபடி. வைகல் வந்து மேயும்—எப்போதும் நீங்கள் உங்களுடைய உணவை மாத்திரமேயோ நோக்குவது? பிறர்காரியமும் சிறிது செய்ய வேண்டாவோ? என்று காட்டுகிறபடி. எம்பெருமான் என் கைக்கு எட்டாதே போனானாகிலும் அவனைப்பெறுவிக்குமவர்களான நீங்களாவது எப்போதும் என் கண்வட்டத்திலே வாழாநின்றீர்களே, எனக்கு இதுவொரு ஸந்தோஷம் என்று காட்டுகிறபடியுமாம். குருகினங்காள் = “தூவிரியமலருழக்கித் துணையோடும் பிரியாதே” என்கிறாப்போலே நீங்கள் துணைபிரியாதே வாழ்கிற இவ்வாழ்ச்சி என் காரியம் செய்வதற்காகவேயென்றிருக்கிறேன் என்று தெரிவிக்கிறபடி.

‘குருகினங்காள்’ என்று விளித்தவாறே, இப்பிராட்டி நம்மைவிளிப்பது எங்கேனும் தூதுபோகவிடுகைக்கேயாமென்று உணர்ந்த அவை ‘இப்போது நாங்கள் எங்கே போகவேணும்?’ என்ன; திருவண்வண்டூர்க்குப் போகவேணுமென்கிறாள் இரண்டாமடியில். உங்களுக்கு வேண்டிய உணவு அங்கும் கொள்ளை கொள்ளையாகக் கிடைக்குங்காணும் என்பாள் போன்று ‘செய்கோள் செந்நெலுயர்’ என்று அடைமொழி கொடுக்கின்றாள். அங்கு எம்பெருமானை நாங்கள் எவ்வடையாளங்கொண்டு தெரிந்து கொள்வதென்ன. இரண்டு அடையாளங்கள் கூறுகின்றாள்—[கைகோள் சக்கரத்து என் கனிவாய்ப் பெருமானை] கீழ்த்திருவாய்மொழியிலே “பிறந்தவாறும்” என்று ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தை அநுஸந்தித்து மோஹித்தவளாகையாலே அவ்வவதாரந்தன்னில் (ஜாதோஸி தேவதேவேச சங்கசக்ரகதாதர) என்னும்படியாகக் கையும் திருவாழியுமாக அவதரித்த வாறு திருவுள்ளத்திலே ஊற்றிருக்கையாலே முதலில் அவ்வடையாளத்தைக் கூறுகின்

ருள். பிறகு 'வளர்ந்தவாறும்' என்று கோகுலத்திலே வளர்ந்தபடியை அநுஸந்தித்தவளா கையாலே * அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்க் கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்தபடிகளெல்லாம் திருவுள்ளத்திலே நிழலிட்டுத் தோற்றியிருக்கையாலே கனிவாய் என்கிற அடையாளத்தைக் கூறுகின்றாள்.

கைகள் கூப்பிச் சொல்லீர் = அப்பெருமான் இங்கே எம்பக்கலிலே வந்தவையுங் காலத்து 'அடியேன் குடியேன்' என்று கள்ளக் குழைச்சல்களை காட்டித் தன்னுடைய சௌசீல்யம் தோற்றவிருந்து, இப்போது பிரிந்து சென்றவாற்றை பரத்வம் பாராட்டி நிற்கையாலே அதற்கு ஏற்றபடி அஞ்ஜலிபண்ணிக்கொண்டு விஜ்ஞாபனம் செய்யுங் கோளென்கிறாள். எதை விஜ்ஞாபிப்பது? என்ன ; [வினையாட்டியேன் காதன்மை] என் கிறாள். பராங்குச நாயகியின் காதல் என்றால் அது ஸாமான்யமாக இருக்குமோ? லோக விலக்ஷணமாக இருக்குமன்றோ. இன்னாள் உம்மை ஆசைப்பட்டிருக்கிறாளென்று தெரி வித்தால் போதுமென்கிறாள். இங்கே நம்பிள்ளையீடு :— "வன்னெஞ்சர் காதல்போலன் றிறே மென்னெஞ்சர் காதல்; மெல்லியலார் காதலளவல்லாத என் காதல் சொல்லீர்; சொல்லுவார் தாழ்வே; வரவு தப்பாதென்றிருக்கிறாள்." *

தங்களைப்பிரியில் தரியாத ப்ரேமமுடைய ஶிஷ்யர்களுடனே கூட மனத்துக் கினிய காலக்ஷேப கூடங்களிலேசென்று பகவதநுபவம் பண்ணுகின்ற சத்தஸ்வ பாவரான ஆசார்ய ரொருவரை விளித்து எனக்கு பகவத்ஸம்ஶ்லேஷம் பண்ணுவிக்க வேணுமென்று ப்ரார்த்தித்தல் இதற்கு உள்ளுறை பொருள். ஆசார்யஹ்ருதயத்திலே "ஆசறுதூவி யென்னும் பாஹ்யாப்யந்தரசுத்தியோடே" இத்யாதி சூர்ணையின் வியாக் கியானத்திலே ஸ்வாபதேசார்த்த விரிவு காண்க. ... ... 1

காதல்மென்பெடையோடு உடன்மேயுங்கருநாராய்! *
வேதவேள்வியொலிமுழங்கும் தண்திருவண்வண்டூர் *
நாதன்ஞாலமெல்லாமுண்ட நம்பெருமானைக் கண்டு! *
பாதங்கைதொழுதுபணியீர் அடியேன்திறமே. 2

| | | | |
|---|---|---|---|
| காதல் மென் பெடையோடு | காதலையே நிருபகமாக வுடைய அழகிய பேடையோடு கூட | நாதன் ஞாலம் எல்லாம் உண்ட | ஸர்வேச்வரனும் (ப்ரளயகாலத்தில்) ஸகலஜகத்தையும் விழுங்கினவனுமான |
| உடன் மேயும் கரு நாராய் | இரை தேர்கின்ற நல்ல வர்ணமுடைய நாரையே! | நம்பெருமானை கண்டு | எம்பெருமானை நேராகக் கண்டு |
| வேதம் வேள்வி ஒலி முழங்கும் | வேதகோஷமும் வைதிகக் கிரியைகளின் கோலாஹலமும் முழங்கப் பெற்ற | பாதம் கை தொழுது | அவனது திருவடிகளை நோக்கி அஞ்ஜலி பண்ணி |
| தண் திருவண்வண்டூர் | குளிர்ச்சி பொருந்திய திருவண்வண்டூரிலே | அடியேன் திறம் பணியீர் | அடியேன் விஷயமாக ஒருவார்த்தை சொல்ல வேணும். |

* * * —— ஆர்த்தர்களுக்கு ஆர்த்தியைப் பரிஹரித்து ரக்ஷணம் செய்வதிலேயே தீக்ஷை கொண்டிருக்கிற எம்பெருமான் திருவண்வண்டூரிலே வேதவொலியையும் வேள்வியொலியையும் காதாரக் கேட்டுக்கொண்டு தன்னுடைய ஆர்த்தரக்ஷண தீக்ஷையையும் மறந்து அங்கே தங்கிக்கிடக்கிறான்; அவனுடைய பாதாரவிந்தங்களிலே சென்று அஞ்ஜலிபண்ணி நின்று என் விஷயமாகச் சில வார்த்தைகள் சொல்லவேணு மென்று நாரையை இரக்கிறாள்.

கருநாராய்! = நாரைக்கு வெண்மை நிறம் ப்ரஸித்தமாயிருக்க 'கருநாராய்' என் றது எங்ஙனே? என்று சங்கிக்கவேண்டா. உடம்பிலே வைவர்ணிய முண்டானால் "உடம்பு வெளுத்துப்போயிற்று" என்று சொல்லுவதுண்டு; அப்படிப்பட்ட வெண்மை

யின்றிக்கே மேனி புகர் பெற்றிருக்கிறபடியைச் சொல்லுகிறதத்தனை. "பிரிவுக்கு ப்ரஸங்கமில்லாமையாலே தன்னிறம்பெற்றிருக்கிறபடி: பிரிந்தவன்வடிவுக்கு ஸ்மாரகமாயிருக்கிறபடி" என்பது இருபத்தினாலாயிரம். "கூடத்திரிகையாலே நரைதிரை நீங்கி வடிவுபுகர்த்தபடி: பிரியாதார்க்கு உடம்பு வெளுக்கத்தாகாதே; தான் உடம்பு வெளுத்துக்கிடக்கிறாளிறே." என்பது ஈடு முப்பத்தாறாயிரம். "காதல் மென்பெடையோடுடன் மேயும்" என்றதனால் ஸ்வாபதேசத்தில் ஆழ்வான் அனந்தாழ்வான் போன்ற க்ருஹஸ்தாச்ரமிகளின் பெருமை தெரிவிக்கப்படுகிறது. அன்றியே, சிஷ்யர்களோடு கூடி பகவத்குணாநுபவம் பண்ணுகின்ற ஆசார்யர்களைச் சொல்லிற்றாகவுமாம்.

வேதவேள்வியொலிமுழங்கும் = ஸ்ரீசக்ரவர்த்திதிருமகன் காட்டுக்கெழுந்தருளின பின் அயோத்திமக்கள் புலம்புகையில் * தாகயஜ்ஞவிவாஹைச ஸமாஜைச மஹத்ஸுச, ந த்ரக்ஷ்யாம: புந: ஜாது தார்மிகம் ராமமந்தரா." என்கிறார்கள். இதனால் வேதவேள்விமொலி முழங்குமிடங்களிலெல்லாம் இராமபிரான்வந்து நின்று ஸேவைஸாதிப்பனென்று காட்டப்பட்டது. இது எம்பெருமானுடைய தன்மையாதலால் திருவண்வண்டூரிலே அந்த முழக்கத்திலே கால்தாழ்ந்து தன்னைமறந்தொழிந்ததாகப் பராங்குசநாயகி கருதுகின்றாளென்க. இவ்விடத்தில் ஈட்டில்—"வேதகோஷமும் யாகத்தில் சஸ்த்ராதிகோஷமும் ஸமுத்ரகோஷம்போலேயிருக்கிற ச்ரமஹரமான ஊர்" என்றுள்ளது. யாகத்தில் சஸ்தராதிகோஷமாவது — பசுவிசஸநம பண்ணுகைக்காகப் பிரயோகிக்கப்படுகிற சஸ்த்ரங்கள [கத்திகள்] முதலானவற்றின் கோஷம என்று சிலர் ப்ரமித்துக் கூறுவதுண்டு. அது பொருளன்று. *ஸ்துதசஸ்த்ரே* என்று வேதத்தில் சொல்லியிருக்கிறபடி சஸ்த்ரமென்பது மந்த்ரவிசேஷம். வேதார்த்தஸங்க்ரஹ தாத்பர்யதீபிகையில் (பக்கம் 362ல்) ஸ்தோத்ரம்—காநவிசிஷ்ட மந்த்ரோச்சாரணம்; சஸ்த்ரம்—காநரஹிதம் ஏகச்ருதிருபோச்சாரணம்* என்றது காண்க.

'திருவண்வண்டூர் நாதன்' என்றவாறே அறப் பெரியான் பக்கலிலே நாங்கள் சென்று கிட்டப்போமோ? என்று பறவைகளுக்குச் சங்கையாக, அவனுடைய நீர்மைக் குணத்தை யெடுத்துக்காட்டுகிறாள் "ஞாலமெல்லாமுண்ட" என்று. ஆபத்துவருவதற்கு முன்னே ரக்ஷிக்கையை இயல்வாகவுடையவனாகையாலே அவனருகிற் செல்லக் கூச வேண்டா என்று காட்டினவாறு. அடியேன் திறம் பணியீர் = இங்கே ஈடு—; "அவன் திறம் போலன்று; என்னிடையாட்டத்தைச் சொல்லுங்கோள். சொல்லில் ஒரு மஹாபாரதத்துக்குப் போருமாகாதே." ... ... ... ... 2

திறங்களாகியெங்கும் செய்களூடுழல்புள்ளினங்காள்! *
சிறந்தசெல்வம்மல்கு திருவண்வண்டூருறையும் *
கறங்குசக்கரக்கைக் கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
இறங்கிநீர்தொழுதுபணியீர் அடியேனிடரே. 3

| | | | |
|---|---|---|---|
| திறங்கள் ஆகி | திரள்திரளாக | கறங்கு சக்கரம் கை | சுழன்று வருகிற திருவாழியைக் கையிலேயுடையவனும் |
| எங்கும் | பார்த்தவிடமெல்லாம் | | |
| செய்களூடு | விளைநிலங்களிலே | | |
| உழல் | உலாவுகின்ற | கனி வாய் | கனிபோன்ற அதரத்தையுடையவனுமான |
| புள் இனங்காள் | பறவைக் கூட்டங்களே! | | |
| சிறந்த செல்வம் மல்கு | உயர்ந்த ஐச்வரியம் விஞ்சியிருக்கிற | பெருமானை கண்டு நீர் | எம்பெருமானை ஸேவித்து நீங்கள் |
| திருவண்வண்டூர் உறையும் | திருவண்வண்டூரிலே நித்யவாஸம் பண்ணுமவனும் | இறங்கி தொழுது அடியேன் இடர் பணியீர் | தாழ்ந்து தொழுது அடியேன் படுகிற கஷ்டத்தை சொல்லுங்கள். |

* * *பக்ஷிகள் கூட்டங்கூட்டமாக உலாவுவது வழக்கம். அங்ஙனே கூட்டமாகஅவை இருப்பது தன் காரியம் செய்தற்காகவேயென்று பராங்குச நாயகியின்

கருத்துப் போலும். அவை செய்களூடு உழல்வது தங்கட்கு இரை தேடுகைக் காகவாகிலும், தலைவி தான் ஈடுபட்டிருக்கிற எம்பெருமானைத் தேடிக்கொண்டு அவை உழல்கின்றனவாகக் கருதி, பறவைகாள்! செய்களூடு எதற்காக உழல்கின்றீர்கள்? எனக்காக நீங்கள் தேடும் எம்பெருமான் திருவண்வண்டூரிலன்றோ உறைகின்றான் என்கிறாள்.

அவன் உன்னைமறந்து அங்கே உறைவதற்கு யாதுகாரணம்? என்று பறவைகட்கு நினைவாக, "சிறந்த செல்வம்மல்கு திருவண்வண்டூர்" என்கிறாள். அத்தலத்துள்ள செல்வச்சிறப்பானது அவனை அங்கே கால்தாழப்பண்ணிற்று என்றவாறு.

[கறங்கு சக்கரமித்யாதி.] விரோதிகளை நிரஸிக்கவேண்டின விரைவாலே சுழன்று வாராநின்றுள்ள திருவாழியைத் திருக்கையிலே உடையவனாய், புன்முறுவல்தோன்ற நின்ற அதரத்தையுடையவனான எம்பெருமானைக்கண்டு தாழவிழுந்து வணங்கி என்னுடைய விரஹ வேதனையைத் தெரிவியுங்கள். ... ... ... 3

இடரில்போகம்மூழ்கி இணைந்தாடும்மடவன்னங்காள் *
விடலில்வேதவொலிமுழங்கும் தண்திருவண்வண்டூர் *
கடலமேனிப்பிரான் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
உடலம்நைந்தொருத்தி உருகுமென்றுணர்த்துமினே. 4

| | | | |
|---|---|---|---|
| இடர் இல் போகம் மூழ்கி இணைந்து ஆடும் | பிரிந்துபடும் துக்கமில்லாத இன்பத்திலே அவகாஹித்து கலந்து வாழ்கின்ற | கடல மேனி | கடல்போன்ற திருமேனியை யுடையவனும் |
| மடம் அன்னங்காள் | மடமைதங்கிய அன்னங்களே! | பிரான் | மஹோபகாரகனும் |
| விடல் இல் வேதம் ஒலி முழங்கும் | இடைவீடில்லாத வேதகோஷம் நிரம்பிய | கண்ணனை | ஆச்ரித ஸுலபனுமான |
| தண் திருவண்வண்டூர் | குளிர்ந்த திருவண்வண்டூரிலே | நெடுமாலை கண்டு | ஸர்வேச்வரனைக் கண்டு |
| | | ஒருத்தி | ஒரு பெண்பிள்ளை |
| | | உடலம் நைந்து | சரீரம் தளர்ந்து |
| | | உருகும் என்று | உருகாநின்றாள் என்று |
| | | உணர்த்துமின் | அறிவியுங்கள்! |

* * * — ஒரு கொடிப்பொழுதும் பிரியாமே இடைவீடின்றிக் கலந்து வாழ்கின்ற அன்னப்பறவைகளை நோக்கி, திருவண்வண்டூரிலே நிரந்தரமாக நடைபெறும் வேதவொலியைத் திருச்செவி சாத்திக்கொண்டு அங்கே கால்தாழ்ந்து வர்த்திக்கிற கடலவண்ணனான பெருமானைக் கண்டு என்பேரைச்சொல்லாதே ஒருத்தி உடல்நைந்து உருகுகின்றாளென்று சொல்லுங்கோளென்கிறாள். ஓஃ என்னும் வடசொல் போகமெனத்திரிந்தது. போகத்திற்கு இடராவது இடையிடையில் விச்சேத ப்ரஸக்தியாம். அஃதிலவாத போகத்தில் மூழ்கியென்றது. ஸ்வாபதேசத்தில் இடைவிடாத பகவதனுபவத்திலே அவகாஹித்திருக்கிறபடியைச் சொன்னவாறு. * போகத்தில் வழுவாத புதுவையர்கோன * என்றாற்போல.

இணைந்து ஆடும் = "குருசிஷ்யக்ரந்த விரோதங்களைப் பரமதாதிகளாலே பரிஹரியாமல் செஞ்சொல் செந்தமிழ் இன்கவி பரவியழைக்குமென்று அந்யோந்யம் கொண்டாடிப் பேசுறதே பேசும ஏககண்டர்" என்று ஆசாரிய ஹ்ருதயத்திலருளிச் செய்தபடியே ஆசாரியர்களுக்குண்டான ஐகமத்யம் இதனால் தெரிவிக்கப்பட்டதாகும்.

'திருவண்வண்டூர் இருக்குமிடம் நாங்கள் அறியோமே; அவ்வூர்க்கு வழிதெரியாதே' என்று பறவைகட்கு நினைவாகக்கொண்டு * விடலில் வேத வொலிமுழங்கும் * என்கிறாள்: நீங்கள் புறப்பட்டவாறே வேதகோஷமே உங்களுக்கு வழிகாட்டுமென்றவாறு.

மூன்றாமடியில் "கடல்மேனிப்பிரான்" என்றே பாடம் வழங்கிவந்தாலும் இசையின்பம் நோக்கிக் "கடலின் மேனிப்பிரான்" என்று பாடமிருந்திருக்குமென்று கருதிச்

*சிலர் திருத்திப்பதிப்பித்துள்ளார்கள் : "கடல மேனிப்பிரான்" என்றிருக்கலாம். கடல —கடல் போன்ற என்றபடி. ஒருத்தியுருகுமென்று உணர்த்துமின் = "ஒருத்தி மதியெல்லா முள்கலங்கி மயங்குமாலென்னீரே" என்றதுபோலே. ... ... ... 4*

உணர்த்தலூடலுணர்ந்து உடன்மேயும்மடவன்னங்காள் *
திணர்த்தவண்டல்கள்மேல் சங்குசேருந்திருவண்வண்டூர் *
புணர்த்தபூந்தண்டுழாய்முடி நம்பெருமானைக்கண்டு *
புணர்த்தகையினராய் அடியேனுக்கும்போற்றுமினே. (5)

| | | | |
|---|---|---|---|
| ஊடல் உணர்த்தல் உணர்ந்து | (பிரிவு சிறிது உண்டானாலும்) ஊடலும் உணர்த்தலுமாகிற கிரமங்கள் சேருமென்றறிந்து | திருவண்வண்டூர் புணர்த்த பூ தண் துழாய் முடி | திருவண்வண்டூரிலே தொடுக்கப்பட்ட அழகிய செவ்வித்துழாய் அணிந்த திருவபிஷேகத்தையுடையவனான |
| உடன் மேயும் | எப்பொழுதும் விட்டுப்பிரியாமல் கூடவே திரிகின்ற | நம் பெருமானை கண்டு | எமது ஸ்வாமியைக் கண்டு |
| மடம் அன்னங்காள் | துவண்ட அன்னங்களே! | புணர்த்த கையினர் ஆய் | கைகூப்பினவர்களாய்க் கொண்டு |
| திணர்த்த வண்டல்கள் மேல் சங்கு சேரும் | கொழுத்த வண்டல் மணல்களின் மேலே சங்குகள் சேருமிடமான | அடியேனுக்கும் போற்றுமின் | அடியேனுக்காகவும் அத்தலைக்கு மங்களாசாஸனம் பண்ணுங்கோள். |

* * * — இப்பாட்டின் ஈட்டில்— "காம (போக) ப்ரகாரந்தான் மூன்று வகைப்பட்டாயிற்றிருப்பது; அவையாவன—* ஊடலுணர்தல் புணர்தலிவை மூன்றும், காமத்தாற்பெற்றபயன்*என்று மூன்றையும் பிரயோஜனமாகச் சொன்னார்கள் தமிழர்: இதிலே ஊடலாவது—எதிர்த்தலையோடே கூடினால் அஹேதுகமாக விளைவதொன்று. அதுதான் 'என்னையொழியக்குளித்தாய், என்னையொழியப் பூவைப் பார்த்தாய்; உன் உடம்பு பூநாறிற்று' என்னுமாற்போலே வருமவை. உணர்(த்)தலாவது— 'உனக்கென்று குளித்தேன்' என்கையும் 'உனக்கு ஆம்' என்று பார்த்தேன் என்கையும் 'உன்வரவுக்கு ஒப்பித்தேன்' என்னுமாற்போலே சொல்லுமிவை. இவையிரண்டின் அனந்தரத்தே வருவது கலவி" என்றருளிச்செய்யப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீஸூக்தியில் உதாஹரிக்கப்பட்டுள்ள தமிழ்ச்செய்யுள் திருவள்ளுவர் குறள். அது "ஊடலுணர்தல் புணர்தலிவை காமம்—கூடியார்பெற்றபயன்" என்னும் பாடமாகவே குறளிற் காண்கிறது. [புணர்ச்சி மகிழ்தல் என்ற அதிகாரத்தில் ஒன்பதாவது குறள் இது.] உணர்தல் என்பதற்கு—'தலைமகன் தன்னுடைய தவறில்லாமையைச்சொல்லி நாயகியினுடைய ஊடலை நீக்குதல்' என்று பொருளுரைக்கப்பட்டிருக்கின்றது. உணர்த்தல், உணர்தல் இவையிரண்டும் இங்குப் பரியாயமேயென்க. மூலத்தில் "உணர்த்தலூடலுணர்ந்து" என்றிருந்தாலும் பாடக்ரமத்திற்காட்டிலும் அர்த்தக்ரமம் வலிது என்ற நியாயத்தினால் "ஊடல் உணர்த்தல் உணர்ந்து" என்று அடைவுபடுத்திக்கொள்ளலாம். ஊடல் உண்டான பிறகே உணர்த்தல் நேருமாதலால் அதற்குச் சேர இங்ஙனம் கொள்ளக்கடவது. ஊடல் என்கிற பிரணயரோஷமும் அதற்குப்பரிஹாரமான உணர்த்தலும் நேருவதற்குப் பிரிவுகாரணமாகும்; பிரிவின்றிக்கே கூடியேயிருந்துவிட்டால் அவை நேரமாட்டா. ஆகவே, நாம் பிரியவும் வேண்டா, பிரிந்து ஊடலுணர்த்தல் ஆபாஸங்களை அனுபவிக்கவும் வேண்டா என்றுகொண்டு கூடியேயிருக்கின்ற அன்னங்களே! என்றதாயிற்று.

புணர்த்த பூந்தண்டுழாய்முடி யென்றது—அப்பெருமான் ஆச்ரிதரக்ஷணத்திற் கென்றே தனிமாலை முடிசூடியிருத்தலால் நீங்கள் கூசாதேசென்று காணலாமென்று காட்டுகிறபடி.

"அடியேனுக்கும் போற்றுமினே" என்கிற விப்பாசுரம் திவ்யதேச யாத்திரை செல்கின்றவர்களனைவரையும் நோக்கி அந்த பாக்கியமில்லாதவர்கள் சொல்லுதற்கு

உரியது. தேவரீர்கள் திவ்யதேசங்களிலே சென்று ஸேவிக்கும்போது அடியேனுக்காகவும் ஸேவிக்கவேணுமென்கிற பாவனை. ... ... ... ... 5

போற்றியானிரந்தேன் புன்னைமேலுறைபூங்குயில்காள் *
சேற்றில் வாளை துள்ளும் திருவண்வண்டூருறையும் *
ஆற்றலாழியங்கை அமரர்பெருமானைக்கண்டு *
மாற்றங்கொண்டருளீர் மையல்தீர்வதோருவண்ணமே. 6

| | | | |
|---|---|---|---|
| புன்னை மேல் உறை | புன்னைமரங்களின் மேலே வாழ்கின்ற | ஆற்றல் ஆழி அம் கை | சக்திமிகுந்த திருவாழியை அழகிய கையிலே உடையவனுமான |
| பூ குயில்காள் | அழகிய குயில்களே! | அமரர் பெருமானை கண்டு | தேவாதிதேவனைக் கண்டு |
| யான் | அடியேன் | மையல் தீர்வது ஒரு வண்ணம் | என்னுடைய வியாமோஹம் தீரும்படியான |
| போற்றி இரந்தேன் | துதித்து வேண்டுகின்றேன்; | மாற்றம் கொண்டு அருளீர் | ஒரு நல்வார்த்தை கொண்டு வந்து உதவவேணும். |
| வாளை | வாளை மீன்களானவை | | |
| சேற்றில் துள்ளும் | சேற்று நிலங்களிலே களித்து உகளப்பெற்ற | | |
| திருவண்வண்டூர் உறையும் | திருவண்வண்டூரிலே வாழ்பவனும் | | |

* * * — சில குயில்களைக்குறித்து திருவண்வண்டூரிலே சென்று எம்பெருமானைக்கண்டு எனக்குள்ள நிலைமையை அறிவித்து அத்தலையினின்றும் ஒரு வார்த்தை கொண்டுவந்து எனக்குரைத்து என் மையலைத் தீர்க்கவேணுமென்று இரக்கிறாள். போற்றி என்பதை "போற்றியாம் வந்தோம்" என்றவிடத்திற்போல வினையெச்சமாகக்கொண்டால் 'மங்களாசாஸனம் பண்ணி' என்று பொருளாய், மேலே இரந்தேனென்பதில் அந்வயிக்கிறது. அங்ஙனன்றிக்கே * அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி * என்றவிடத்திற்போலே கொண்டால் 'மங்களமுண்டாகுக' என்று பொருள்பட்டுத் தனிபேசிற்கும். வடமொழியில் 'ஸ்வஸ்தி' என்று முதலிட்டுப்பேச ஆரம்பிப்பது போலாமிது.

யான் இரந்தேன் = தூது போகவேணுமென்று இரப்பவன் அவனென்று ஸ்ரீராமாயணாதிகளில் ப்ரஸித்தமாயிருக்க, இப்போது நான் இரக்கும்படியாயிற்றே! என்கிற அவஸாதம் தோன்றும்.

புன்னைமேலுறை பூங்குயில்காள்! = "வளர்த்ததனால் பயன் பெற்றேன்" என்னும்படியாக ஆசிரியர் பக்கலிலேயே வளருமவர்கள் (ஸ்வாபதேசத்தில்) குயிலாகச் சொல்லப்படுவார்கள். "வநப்ரிய: பரப்ருத: கோகில: பிக:" என்கிற அமரகோசத்தின்படி குயில்களுக்கு வடமொழியில் பரப்ருத மென்றுபெயர்; காக்கையின் கூட்டிலே கொண்டுவிடப்பெற்று அவற்றால் போஷிக்கப்பட்டு வளருமவையென்றபடி. அதுபோலே பரனான ஆசார்யனால் போஷிக்கப்பட்டு வளரும் குருகுலவாஸிகளைச் சொல்லிற்றாகிறது.

"புன்னை மேலுறை" என்றது புன்னையின் மேலுறை என்றபடி. இதில் ஒரு விசேஷார்த்தமுண்டு. நம் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஒருமிடறாக ஈடுபட்டதலமாகிய திருவரங்கம் பெரிய கோயிலிலே திருப்புன்னைமரம் நெடுநாளாக ஸுப்ரஸித்தம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே * புந்நாகதல்லஜமஜஸ்ரஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்ய நிஜஸௌரபமாமநாம: * என்று அந்தத்திருப் புன்னையை வருணிக்கின்றார். முன்புள்ள நம் முதலிகளெல்லாரும் அந்தத்திருப்புன்னையின் கீழேயிருந்து பகவத் விஷயார்த்த விசாரங்கள் செய்தவர்களென்று நன்கு தெரிகின்றதனால் இங்கு ஆழ்வார் அன்னவர்களையே விளிக்கின்றாரென்று கொள்ளத்தகும். அன்றியும், பெரிய திருமொழியில்

திருமங்கையாழ்வார், * மாம்பொழில் தளிர்கோதிய மடக்குயில்வாயது துவர்ப்பு எய்தத் தீம்பலங்கனிதேன நுகர் * என்று குயில்களின் ஓர் இயற்கையை அருளிச்செய்கின்றார். முதலில் மாந்தளிர்களிலே வாய்வைத்ததனால் வாய் துவர்த்துப்போக, அந்தத்துவர்ப்பு தீர்ந்ததற்காகப் பலாப்பழத் தேனைப் பருகுவதாகச் சொல்லுகிறவிதனால், முதலில் ஸாமாந்ய சாஸ்திரங்களிலே வாய்வைத்துப் பிறகு விசேஷ (அத்யாத்ம) சாஸ்திரங்களிலே இன்பமாகப் போதுபோக்கும்படியைச் சொல்லிற்றாகிறது. அப்படிப்பட்ட ஆசிரியர்களும் குயிலாகக் கூறப்படுவார்கள்.

“ஆற்றலாழியங்கையமரர் பெருமானை” என்ற மூன்றாமடியில் ஆற்றல் என்பது ஆழிக்கும் அடைமொழியாகலாம், பெருமானுக்கும் அடைமொழியாகலாம். ஆறாயிரப்படியில் ‘ஆச்ரிதர்க்கு ஆத்மதானம் பண்ணினாலும் ஒன்றும் செய்யாதானாயிருக்கும் ஸ்வபாவனை” என்றருளிச் செய்தது ஆற்றலென்பதைப் பெருமானுக்கு விசேஷணமாக்கி யென்க. இப்போது ஆற்றலாவது நோவுபாடு. திருவாழிக்கு விசேஷணமாகில் மிடுக்கென்றுபொருள்.

மையல் தீர்வதோருவண்ணம் மாற்றம் கொண்டருளீர் = எம்பெருமான் பக்கலிலிருந்து ஏதேனுமொரு வார்த்தை கொணர்ந்து அருளினாலல்லது என்னுடைய வ்யாமோஹம் தீரமாட்டாதென்றபடி. பொதுவிலே மாற்றம் என்றுள்ளதேயன்றி இன்ன மாற்றமென்றதில்லை; இதனால், அநுகூலமாகவுமாம், ப்ரதிகூலமாகவுமாம்; அத்தலையில் வார்த்தையென்று ஏதேனுமொரு வார்த்தை கிடைத்தால்போதுமென்பது காட்டப்பட்டது; * பாவி நீயென்று ஒன்று சொல்லாய் பாவியேன் காணவந்தே * மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி விடைதான் தருமேல் மிகநன்றே * என்ற பாசுரங்கள் இங்கே நினைக்கத்தக்கன.

... ... .... ... 6

ஒருவண்ணஞ் சென்றுபுக்கு எனக்கொன்றுரையொண்கிளியே*
செருவொண்பூம்பொழில்சூழ் செக்கர்வேலைத்திருவண்வண்டூர்*
கருவண்ணஞ்செய்யவாய் செய்யகண்செய்யகைசெய்யகால்*
செருவொண்சக்கரஞ்சங்கு அடையாளம்திருந்தக்கண்டே. 7

| | |
|---|---|
| ஒண் கிளியே | அழகிய கிளியே! |
| செரு | ப்ரணயகலஹத்தால் பதமான |
| ஒண் பூ பொழில் சூழ் | அழகிய பூஞ்சோலைகளாலே சூழப்பட்டதும் |
| செக்கர் வேலை | செந்நிறமான பக்கப் பிரதேசங்களையுடையதுமான |
| திருவண்வண்டூர் | திருவண்வண்டூரிலே |
| ஒரு வண்ணம் சென்று புக்கு | ஒருவிதமாகச்சென்று புகுந்து |
| கரு வண்ணம் | கரிய வடிவமும் |

| | |
|---|---|
| செய்ய வாய் | சிவந்த அதரமும் |
| செய்ய கண் | சிவந்த திருக்கண்களும் |
| செய்ய கை | சிவந்த திருக்கைகளும் |
| செய்ய கால் | சிவந்த திருவடிகளும் |
| செரு ஒண் சக்கரம் சங்கு | போர்க்களத்திலே ஒண்மை பெற்று விளங்குகிற சக்கரமும் (கையை விட்டு அகலாத) சங்குமான |
| அடையாளம் | லக்ஷணங்களை |
| திருந்த கண்டு | நன்றாகப் பார்த்து |
| எனக்கு ஒன்று உரை | எனக்காக வொரு வார்த்தை சொல்லு. |

* * * — ஒரு கிளியை விளித்து அவனுடைய அடையாளங்களைச் சொல்லி இவ்வடையாளப்படியே அவனை அழகிதாகக்கண்டு எனக்காக அவனுக்கொரு வார்த்தை அறிவியுங்கோளென்கிறாள்.

ஒரு வண்ணம் சென்றுபுக்கு = இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி :— “இதுக்கு இரண்டு படியாக அருளிச்செய்வர் : இத்தலையில் தனிமை நினையாதே போய் நிற்கையாலே போர முதலிகளாயிருப்பர் : பேன்மேலெனப் பிரம்புகள்விழும்; அத்தைப் பொறுத்துப் போய்ப் புகுங்கோள். அன்றியே, வழி நெஞ்சையபஹரிக்கும் போக்யதையையுடைத்து ; அதில் கால்தாழாதே வருந்தி ஒருபடி சென்றுபுக்கு.” என்பதாம்.

எம்பெருமான் ஸௌசீல்யமே வடிவெடுத்தவனாயினும் பரத்வம் பாராட்டி நிற்பதுமுண்டாகையாலே அதற்கேற்ப அருகே அணுகவொண்ணாதபடி நேரவுங்கூடும். அப்படி நேர்ந்தாலும் அதை ஒருவாறு ஸஹித்துக்கொண்டு உள்ளே புகுங்கோள் என்பது முதற்பொருள். மலைநாடாகையாலே வழியெல்லாம் பூவியல் பொழிலும் தடமுமாயிருக்கும்; அவற்றிலே கண் செலுத்தினால் ஆங்காங்கு லயிக்கவேண்டிற்றாகுமேயல்லது எம்பெருமானிடம் சென்று சேரமுடியாது; ஆகவே வழியில் கண் செலுத்தாதே ஒருவாறு வழியைக் கடந்துபோங்கள் என்பது இரண்டாவது பொருள்.

செருவொண்பூம் பொழில்=செரு—யுத்தம்; பொழில்களிலே யுத்தமாவது பறவைகளும் ப்ரணயரோஷத்தாலே சீறுபாறென்றிருத்தல். சேக்கர் வேலை = பொழிலில் உதிர்ந்த தாதுகளாலே சிவந்த பக்கங்களையுடையது; அன்றியே கடற்கரையாகையாலே சிவந்த மணலிட்டையுடையது. திருவண்வண்டூரிலுள்ள எம்பெருமான் கரியதிருமேனிக்குப் பரபாகமாக வாய் கண் கை கால் ஆகிய அவயவங்கள் சிவந்து கையுந் திருவாழியுமாக இருப்பன்; அவ்வடையாளங்கொண்டு அவனைக்கண்டுபிடித்து எனக்காக ஒருவார்த்தை சொல்லவேணுமென்றாளாயிற்று. “சொல்லிற்றுச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை” என்னுமாபோலே * முன்னோர் மொழிந்தமுறை தப்பாமற் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப்பேசும் ஏககண்டர்களான ஆசிரியர்களைக் கிளி யென்கிறது.

திருந்தக்கண்டெனக்கொன்றுரையாய் ஒண்சிறுபூவாய் *
செருந்திஞாழல்மகிழ் புன்னைசூழ் தண்திருவண்வண்டூர் *
பெருந்தண்டாமரைக்கண் பெருநீண்முடிநால்தடக்தோள் *
கருந்திண்மாமுகில்போல் திருமேனியடிகளையே. 8

| | | | |
|---|---|---|---|
| ஒண் சிறு பூவாய் | அழகிய சிறிய வடிவையுடைய பூவையே ! | நால் தட தோள் | நான்கு தடக்தோள்களையுடையவரும் |
| செருந்தி ஞாழல் மகிழ் புன்னை சூழ் | சுரபுன்னை, ஞாழல், மகிழமரம், புன்னைமரம் ஆகிய இவற்றால் சூழப்பட்ட | கரு திண் மா முகில் போல் திரு மேனி | கறுத்துத் திண்ணிய மஹா மேகம் போன்ற திருமேனியையுடையவருமான |
| தண் திருவண்வண்டூர் | குளிர்ந்த திருவண்வண்டூரிலே (எழுந்தருளியிருக்கின்ற) | அடிகளை | ஸ்வாமியை |
| பெரு தண் தாமரை கண் | பெரிய தண்டாமரை போன்ற திருக்கண்களையுடையவரும் | திருந்த கண்டு | நன்றாக ஸேவித்து |
| பெரு நீள் முடி | மிகப்பெரிய திருவபிஷேகத்தையுடையவரும் | எனக்கு ஒன்று உரையாய் | எனக்கொரு வார்த்தை சொல்லவேணும். |

* * * [திருந்தக்கண்டு.] திருவண்வண்டூரிலேசென்று அங்குறையும் எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தை நன்றாகக்கண்டு மீண்டுவந்து எனக்கொன்று சொல்ல வேண்டுமென்று பூவைப்பறவையைக்குறித்துச் சொல்லுகிறாள். காண்பது இரண்டுவிதம்; தன் மனத்துக்கு மாத்திரம் தெரிந்ததாம்படி காண்கை ஒன்று; பிறர்க்கும் விசதமாகச் சொல்லலாம்படி காண்கை மற்றொன்று. இங்கே திருந்தக்கண்டு என்றது—ஏதோ சாதாரணமாகக் கண்டு விடுகையன்றிக்கே எனக்கு விசதமாகச் சொல்லலாம்படி காணவேணுமென்றவாறு.

எதைக்காண்பது? என்ன; திருக்கண் திருவபிஷேகம் திருத்தோள்கள் திருமேனி ஆகிய இவற்றைக் கண்டு அவற்றிலுள்ள அதிசயங்களை வந்து சொல்லவேணுமென்கிறாள். தூதர் செய்யவேண்டிய காரியங்களில் இதுவும் ஒன்றேயாம்; இதனாலும் தலைவிக்குத் தரிப்பு உண்டாகுமென்க. அடிகள் என்று ஸ்வாமிக்கு வாசகம். 8

அடிகள்கைதொழுது அலர்மேலசையுமன்னங்காள் *
விடிவைசங்கொலிக்கும் திருவண்வண்டூருறையும் *
கடியமாயன் தன்னைக் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
கொடியவல்வினையேன் திறம் கூறுமின்வேறுகொண்டே. 9

| | |
|---|---|
| அலர் மேல் அசையும் அன்னங்காள் | பூவின்மேலேயிருந்து உலாவுகின்ற அன்னங்களே! |
| விடிவை | ஸுப்ரபாதகாலத்திலே |
| சங்கு ஒலிக்கும் | சங்கு முழக்கப்பெற்ற |
| திரு வண்வண்டூர் | திருவண்வண்டூரிலே |
| உறையும் | எப்போதும் வாழ்கின்ற |
| கடிய மாயன் தன்னை | கடுமையான மாயச்செயல்களையுடையனும் |
| கண்ணனை | அடியார்களுக்கு விதேயனும் |
| நெடுமாலை | அடியார்பக்கலிலே மிகவும் வியாமோஹ முடையனுமிருக்கிற எம்பெருமானை |
| கண்டு | சேவித்து |
| அடிகள் கை தொழுது | திருவடிவாரத்திலே அஞ்ஜலி பண்ணி |
| கொடிய வல் வினையேன் திறம் | மிகக்கொடிய பாபத்தையுடையேனான என் விஷயமாக |
| வேறு கொண்டு | ஏகாந்தமாக |
| கூறுமின் | புருஷகாரமான வார்த்தைகளைச் சொல்லுங்கள். |

* * * [அடிகள் கைதொழுது] சில அன்னப்பறவைகளை நோக்கி 'திருவண்வண்டூரெம்பெருமானிடத்துச் சென்று ஏகாந்தமாக என்விஷயம் விஜ்ஞாபிக்கவேணும்' என்று இரக்கிறாள். 'திருவடிகளைச் சிக்கனப்பிடித்துக்கொண்டு' என்று சொல்லவேண்டிய ஸ்தானத்திலே அடிகள் கைதொழுது என்கிறாள். இது உபசாரோக்தி. "அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்" என்றபடி திருவடிகளைப் பிடித்துக் கொண்டால் மறுக்கப் போகாதாகையாலே அந்த உபாயத்தை உபதேசித்தபடி.

கடியமாயன் = ஆச்ரிதவிரோதிகளை அழியச் செய்யுமிடத்தில் கண்பாராத ஆச்சரியச்செயல் செய்பவன். கண்ணன்—ஆச்ரிதர்க்குத் தான் கையாளாக நின்று தன்னைக் கொடுக்குமவன். நெடுமால்—இத்தனையும் செய்தும் 'அந்தோ! ஒன்றும் செய்யப்பெற்றிலோமே!' என்று குறைபடும்படியான வியாமோஹமுடையவன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை கோஷ்டியாக இருக்கிற சமயத்திலே சென்று கிட்டாமல் ஏகாந்தமாயிருக்கிற ஸமயத்திலே சென்று கிட்டி, காட்டார்படியல்லாத பாபத்தைப்பண்ணின என்னுடைய செய்தியைச் சொல்லுங்கோளென்கிறாள். வேறு கொண்டு என்றது—ஏகாந்தத்திலே என்றபடி. பிராட்டியும் தானுமாயிருக்கிற இருப்பிலே என்கை. 9

வேறுகொண்டும்மையானிரந்தேன் வெறிவண்டினங்காள் *
தேறுநீர்ப்பம்பை வடபாலைத்திருவண்வண்டூர் *
மாறில்போரரக்கன் மதிள் நீறெழச்செற்றுகந்த *
ஏறுசேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே. 10

| | |
|---|---|
| வெறிவண்டு இனங்காள் | பரிமளம் மிக்க வண்டினங்களே! |
| உம்மை வேறு கொண்டு | உங்களிடத்திலே விலக்ஷண ப்ரபத்தி பண்ணி |
| யான் இரந்தேன் | அடியேன் ஒன்று வேண்டுகின்றேன்; |
| தேறு நீர் பம்பை வடபால் திரு வண் வண்டூர் | தெளிந்தநீரையுடைய பம்பையாற்றின் வடபக்கத்திலுள்ளதான திருவண் வண்டூரிலே (எழுந்தருளியிருக்கின்ற) |
| மாறு இல் போர் அரக்கன் | நிகரற்ற யுத்தம் செய்வதில் வல்லவனான இராவணனுடைய |
| மதிள் | மதிள்முதலிய யாவும் |
| நீறு எழ | பொடிபொடியாம்படி |
| செற்று | இலங்கையையழித்து (அதனால்) |
| உகந்த | திருவுள்ளமுவந்த |
| ஏறு சேவகனார்க்கு | மஹாவீரனான ஸ்ரீராமபிரானிடத்திலே |
| என்னையும் உளள் என்மின்கள் | ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தி இருப்பதாகச் சொல்லுங்கோள் |

* * * — சிலவண்டுகளைக் குறித்துக் கூறுகின்றாள். "எமது தலைவர் பெண் பிறந்தார் காரியமெல்லாம் செய்து தலைக்கட்டிவிட்டோமென்றிருப்பர்; அப்படி யன்றிக்கே, ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தி யிருக்கின்றதாகச் சொல்லுங்கோள்" என்கிறாள்.

கீழே பலபறவைகளையும் நோக்கித் தூதுபோம்படி நான் இரந்ததுண்டாகிலும் இப்போது, வண்டுகளான உங்களை இரப்பது ஸாமான்யமானதன்று; தனிப்பட்ட ப்ரதிபத்தியோடே உங்களை இரக்கிறேனென்பாள் "வேறு கொண்டும்மையானிரந்தேன்" என்கிறாள். "திக்குக்கள்தோறும் முதலிகளைப் போகவிடாநிற்கச் செய்தே திருவடி கையிலே திருவாழிமோதிரம் கொடுத்துவிட்டாப்போலே காணும்" என்பது ஈடு. *விசேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவான், ஸ ஹி தஸ்மிந் ஹரிச்ரேஷ்டே நிச்சிதார்த்தோர்த்தஸாதநே* என்ற வால்மீகிவசனமும் நோக்கத்தக்கது.

இப்பாசுரத்தில் "அரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு" என்றதை அடியொற்றியே இத்திருவாய்மொழி விபவத்தில் விட்ட தூது என்று ஆசாரியர்கள் நிர்வஹித்தருள்வது.

என்னையுமுளளென்மின்கள் = 'இன்னமும் பிழைத்திருக்கிறேனென்று சொல்லுங்கோள்' என்றும் பொருள் கொள்ளலாமாயினும் அப்பொருளில் சுவையில்லையென்பது எம்பெருமானார் திருவுள்ளம். ... ... ... 10

மின்கொள்சேர்புரிநூல்குறளாய் அகல்ஞாலங்கொண்ட *
வன்கள்வனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பண்கொளாயிரத்துள்ளிவைபத்தும் திருவண்வண்டூர்க்கு *
இன்கொள்பாடல்வல்லார் மதனர்மின்னிடையவர்க்கே. 11

| | | | |
|---|---|---|---|
| மின் கொள் சேர் புரிநூல் குறள் ஆய் | ஒளியை யுடைத்தாய், திருமேனிக்குச் சேர்த்தியான யஜ்ஞோபவீத மணிந்த வாமனமூர்த்தியாகி | பண் கொள் ஆயிரத்துள் | பண்மிகுந்த ஆயிரத்தினுள்ளே |
| அகல் ஞாலம் கொண்ட | விசாலமான பூமி முழுவதையும் அளந்து கொண்ட | திரு வண் வண்டூர்க்கு | திருவண்வண்டூர் விஷயமான |
| வன் கள்வன் | மஹாவஞ்சகனான எம்பெருமானுடைய | இன் கொள் பாடல் | பரமபோக்யமான பாடலான |
| அடிமேல் | திருவடிகள் விஷயமாக | இவை பத்தும் வல்லார் | இப்பத்துப்பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| குருகூர் சடகோபன் சொன்ன | நம்மாழ்வார் அருளிச்செய்த | மின் இடையவர்க்கு மதனர் | காமினிகளுக்குக் காமுகர் போல் எம்பெருமானுக்கு ஸ்ப்ருஹணீயராவர்கள். |

* * * [மின்கொள் சேர்.] இத்திருவாய்மொழி கற்பார் எம்பெருமானுக்கும் அவனடியார்கட்கும் விரும்பத்தக்கவராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. "மதனர்மின்னிடையவர்க்கு" என்றதில் இங்ஙனே பலச்ருதி காண்கிறதோ வென்னில்; அது உபமான மாத்திரத்தைச் சொன்னபடி. காமினிகளுக்குக்காமுகர் எப்படி விரும்பத்தக்கவர்களோ அப்படி என்றவாறு. திருநாட்டிலுள்ள திவ்யாப்ஸரஸ்ஸுக்களை மின்னிடையவர் என்றதாகக் கொள்ளவுமாம். "நிதியும் நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே" என்கிற உபசாரங்கள் செய்யப்பெறுவார் என்கை. "இன்கொள்பாடவல்லார்" என்ற பாடம் மறுக்கத்தக்கது. ... ... 11

ஆறாம்பத்து முதல் திருவாய்மொழியுரை முற்றிற்று.

—0—

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

# திருவாய்மொழி - ஆறும்பத்து - இரண்டாந் திருவாய்மொழி.

## மின்னிடைமடவார்கள்.

---

உரையவதாரிகை: — ஆழ்வாருடையபடி பலவகைப்பட்டிருக்கும். இத் திருவாய்மொழியின்படி விலக்ஷணமாயிருக்கும். * என்றுமொருநாளொழியாமை யானிரந்தால் ஒன்று மிரங்கார் உருக்காட்டார் * என்றும், * ஒருநாள் காணவாராயே * என்றும் இங்ஙனே பலகாலும் கூப்பிடா நின்ற ஆழ்வார்க்கு இப்போது உண்டான நிலைமை மிக வேறுபட்டிராநின்றது. எம்பெருமான் வந்து நிற்க, "இங்கே ஏதுக்கு வந்தாய்? உனது அந்தரங்க விருப்பத்திற்கு இலக்கானவர்கள் பக்கலிலே எழுந்தருளலாம்; இங்கே என்ன காரியமிருக்கிறது? கடுகச் செல்வாயாக" என்று சொல்லிக் கதவடைத்துத் தள்ளுகிற படியா யிருக்கிறது இத்திருவாய்மொழி. வடமொழியில் ப்ரணய கலஹமென்றும் தென்மொழியில் ஊடலென்றும் சொல்லப்படுவது இது. தம்பதிகள் பரிமாறுகின்றால் இங்ஙனே ப்ரணயகலஹம் நிகழ்ந்தேதீரும்.

எம்பெருமானோடு நமக்குள்ள ஸம்பந்தங்கள் ஒன்பதுவகையென்று சொல்லப்படும். *பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதிः, ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா ச ஆத்யமநூதிதः * என்கிற ச்லோகத்தில் அந்த நவவித ஸம்பந்தங்களும் காணத்தக்கன. அந்த ஸம்பந்தங்களுள் பர்த்ரு பார்யா ஸம்பந்தமும் ஒன்றாகையாலே, எம்பெருமான் பர்த்தாவாகவும் ஆழ்வார் பார்யையாகவும் பரிமாறுகிற முறை ஸ்வரூபாநுரூபமே யாதலால் இந்த ப்ரணய கலஹமும் அவர்ஜநீயமாயிற்று.

கீழ்த்திருவாய்மொழியில், ஆழ்வார் எம்பெருமானுடைய பிரிவுக்கு ஆற்றமாட்டாது தூதுவிட்டார். அந்த வ்யஸநத்தை யறிந்த எம்பெருமான் ஆனைக்கு உதவவந்தாப்போலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து ஆழ்வார்க்குக் காட்சிதரப் பார்த்தான்; அவ்வளவிலே ஆழ்வார் ப்ரணயரோஷம் தலையெடுக்கப்பெற்று "ஸ்வாமிந்! இங்கே உமக்குப் பணியில்லை; பணி போருமிடத்தேற எழுந்தருளீர்" என்று கதவடைத்துத் தள்ளுகிறார் இத் திருவாய்மொழியில்.

க்ருஷ்ணாவதாரத்திலே கண்ணபிரானோடு பரிமாறின கோபஸ்த்ரீகள் இங்ஙனே ப்ரணய ரோஷத்தாலே ஊடல் செய்தமையுண்டு. அவர்களுடைய பாவபந்தமே இப்போது ஆழ்வார்க்கும் ஆகி அவ்வநுகாரமே முற்றியிருக்கிறதாயிற்று. பெருமாள் திருமொழியிலே * ஏர்மலர்ப் பூங்குழல் என்கிற திருமொழியும், பெரிய திருமொழியிலே *காதில் கடிப்பிட்டு என்கிற திருமொழியும் இத்தசையிலே அவதரித்தவை யென்றுணர்க. ... ... ... .... ... (*)

---

மின்னிடைமடவார்கள் நின்னருள்சூடுவார் முன்புநான தஞ்சுவன் *
மன்னுடையிலங்கை அரண்காய்ந்த மாயவனே! *
உன்னுடையசுண்டாயம் நானறிவன் இனியது கோண்டு செய்வதேன்? *
என்னுடையபந்துங்கழலும் தந்துபோகுநம்பீ! *

| | |
|---|---|
| மன் உடை இலங்கை | அரசனையுடைத்தா யிருந்த லங்காபுரியினுடைய |
| அரண் | கோட்டைகளையெல்லாம் |
| காய்ந்த | சிதியழித்த |
| மாயவனே | ஆச்சரியசேஷ்டிதங்களை யுடையவனே! |
| நம்பீ | ஸகலகுணபரிபூர்ணனே! |
| நின் அருள் சூடுவார் | உனது கிருபையை அநுபவிப் பவர்களான |
| மின் இடை மடவார்கள் முன்பு | மின்னற்கொடிபோன்ற இடை யை யுடையவர்களான மாதர்களின் முன்னிலையில் |
| நான் அது அஞ்சுவன் | நான் அதைப்பற்றி அஞ்சாநின் றேன்; (அவர்கள் உன்னை உபேக்ஷிக்க நேருமென்பது பற்றி அஞ்சுகின்றே னென்கை.) |
| உன்னுடைய சுண்டாயம் நான் அறிவன் | உன்னுடைய க்ருத்ரிமமெல் லாம் நானறிவேன்; |
| இனி அது கொண்டு செய்வது என் | உனக்கும் எனக்கும் ஸம்பந்த மற்றபின்பு உன்னுடைய க்ருத்ரிமத்தால் உனக்கு ஸாத்யமானது என்ன இருக்கிறது? |
| என்னுடைய பந்தும் கழலும் தந்து | எனது பந்தையும் அம்மானை யும் திருப்பிக் கொடுத்து விட்டு |
| போகு | உனக்கு விருப்பமானவிடத்தே போய்ச் சேர். |

* * * [மின்னிடைமடவார்கள்.] இப்பாசுரத்தில் "என்னுடைய பந்துங்கழலும் தந்துபோகுநம்பீ!" என்றிருக்கையாலே பந்தும் கழலுமாகிற சில லீலோபகரணங்கள் எம்பெருமான் கையில் இருப்பதாகவும் அவற்றைப் பராங்குச நாயகி அபேக்ஷிப்பதாக வும் தெரிகிறது. பந்துகழல்கள் எம்பெருமான் கையில் இருக்கக் காரணமென்னென் னில்; இதற்கு முன்னே இவளும் தானுமாக லீலைகள் செய்துகொண்டிருந்தார்கள். அப்படியிருக்கையில் திடீரென்று பிரிந்து போனான்; போனவன் சிறிதுகாலம் கழித்து மீண்டு வந்துநின்றான். அப்போது நாயகிக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்திருந்ததனால் பேசாதே கிடந்தாள். எப்படியாவது இவளைப் பேசச்செய்யவேணுமென்று கருதிய அவன் பல விலாஸ சேஷ்டிதங்கள் செய்து பார்த்தும் ஒன்றும் பலியாமையாலே, லீலோப கரணமாகக் கீழேவைத்திருந்த பந்து கழல்களையெடுத்துக்கொண்டு அவற்றி லேயே அளவுகடந்த அபிநிவேசம் காட்டினான் பந்தே! நாயகிதான் பேசாவிட்டாலும் நீயாவது என்னோடு பேசுவாயன்றோ; கழலே நாயகியின் கழல் எனக்குக் கிடைக்காவிட் டாலும் நீயாவது கிடைத்தாயன்றோ? என்றிப்படிப் பலவுஞ் சொல்லித் தன்னுடைய வ்யாமோஹாதிசயத்தை வெளிக்காட்டத் தொடங்கினான்; அப்போது நாயகி பேசா திருக்க முடியாமல் பேசத்தொடங்கி இங்ஙனே கூறுகின்றாளென்க.

பராங்குச நாயகியை நோக்கி "மின்னல்போலே இதொரு நுண்ணிய இடையழகு இருந்தபடி என்!" என்று வருணித்துப் பேசினான் பெருமான்; இதுகாறும் நம்மை மதியாதே இதர ஸ்த்ரீகளுடன் கலந்து போந்தவிவர் இப்போது இங்கே வந்து நம்மை வருணிப்பது நன்றாயிருக்கிறது! என்று சீறி, மின்னிடை மடவார் நானல்லேன்; நின்ன ருள் சூடும் மின்னிடை மடவார் வேறேயுண்டு என்கிறாள்.

முன்பு நான் அதஞ்சுவன் = நீ இங்கேவந்து செய்கின்ற பிரணய விலாஸ சேஷ்டி தங்கள் உன்னுடைய மின்னிடை மடவார்கட்குத் தெரிந்தால் அவர்கள் உன்னைமாத் திரம் தண்டியாதே என்னையும் சேர்த்து தண்டிப்பர்களே யென்று அஞ்சுகின்றே னென்றவாறு. மற்றும் பலவாறு கருத்துக்கூறலாம்.

மன்னுடை யிலங்கை அரண்காய்ந்த மாயவனே! = இங்கு 'மாயவனே' என்பது உயிரான விளி. * உண்ணாதுறங்காது ஒலிகடலை யூடறுத்துப் பெண்ணுக்கையாப்புண்டு தாமுற்ற பேது * என்று பெண்பிறந்தார் சொல்லும்படி ஸீதாபிராட்டிக்காக நீசெய்த செயலும் — இப்படி ஒரு செயல்செய்து பெண்களுக்குக் காரியம் செய்பவன்போல் ப்ரஸித்தி ஸம்பாதித்துப் பெண்களை வலையிலகப்படுத்திக் கொண்டு துடிக்க விடுதற்

காகச் செய்த செயலேயாதலால் அதுவும் மாயமே யென்றவாறு. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி :— "ஒரு துறையிலே ஒரு மெய்பரிமாறுவிடில் நமக்கு மேலுள்ளதெல்லாம் ஒரு தொகையில் அகப்படாது என்று செய்தாயத்தனையன்றோ : அபலைகளை அகப்படுத் திக்கொள்ள இட்டவழியன்றோ."

உன்னுடைய சுண்டாயம் நான் அறிவன் — சுண்டாயமாவது ஸ்வார்த்த பரத்வம். நீ செய்கிற காரியமெல்லாம் உன்னுடைய க்ருத்ரிமமான எண்ணங்களுக்கு இணங்கி யவையேயல்லது ருஜுவான எண்ணத்தோடு நீ ஒரு காரியமும் செய்பவனல்லை யென் பதை நான் அறிவேன் என்றபடி. நான் அறிந்தாலென்ன? அறியாவிடில் என்ன? இனி உனக்கும் எனக்கும் ஏதேனுமொரு தொடர்பு வைத்துக்கொள்வதாக இருந்தாலன்றோ இந்த விசாரம் - என்னுங் கருத்துத்தோன்ற இனி அது கொண்டுசெய்வதேன்? என்கிறாள்.

ஆகில் நான் போகிறேனென்று பந்துகழல்களோடு போகப் புறப்பட்டான்; போனால் போகிறானென்று இருக்கவல்லளோ இவள்? * ஆகிலும் கொடியவென் னெஞ்சம் அவனென்றே கிடக்குமெல்லே * என்கிறவளாகையாலே விடமாட்டாதே மீண்டும் வார்த்தைக்கு இடம் வைக்கிறாள் என்னுடைய பந்துங்கழலும்தந்து போகுநம்பீ என்று.— இவை உன்னுடையவை எப்படி? என்னுடையவையே யென்று அவன் பிணக்குச் செய்ய இடம் தந்தபடி. 1

போகுநம்பீ! உன்தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும் *
ஆகுலங்கள்செய்ய அழிதற்கே நோற்றோமேயாம் *
தோகைமாமயிலார்கள் நின்னருள் சூடுவார் செவியோசைவைத்தெழ *
ஆகள்போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே. 2

| | | | |
|---|---|---|---|
| நம்பீ போகும் உன் | பிரானே! அப்பால்போ; உன்னுடைய | நின் அருள் சூடுவார் | உனது அருளை அநுபவிக்கப் பிறந்த |
| தாமரை புரை கண் இணையும் | தாமரைபோன்ற கண்களிரண்டும் | தோகை மா மயிலார்கள் | தோகைவிரித்த நல்ல மயில் போன்ற கூந்தலையுடைய மாதர்கள் |
| செம் வாய் முறுவலும் | சிவந்த அதரத்தில் சின்றும் தோன்றுகிற சிரிப்பும் | ஓசை செவி வைத்து எழ | (வேணுகானத்தின்) ஓசை யைக்கேட்டு எழுந்து வரும் படியாக |
| ஆகுலங்கள் செய்ய | வீணாக எங்களை ஆகுலப் படுத்த | ஆகள் போக விட்டு | பசுக்களை மேய்க்கப் போக விட்டு |
| அழிதற்கே | அதனால் சிதிலப்பட்டுப் போவ தற்கே | போய் இருந்து | அங்கேபோய் போயிருந்து |
| நோற்றோமே யாம் | இட்டுப் பிறந்தவர்களன்றோ நாங்கள்; | குழல் ஊது | புல்லாங்குழலை ஊதிக் கொண்டிரு. |

* * * — கீழ்ப்பாட்டில் 'போகுநம்பீ' என்று சொல்லியிருக்க, மறுபடியும் 'போகுநம்பீ' என்கிறவிதற்கு ஒரு ப்ரஸக்திவேணுமே. போகு என்னச் செய்தேயும் அவன் போகாதே சில பிணக்குச்செய்து அணுகிவந்தான்; நங்காய்! என்னுடைய பந்தும் கழலும் என்றாயே; நீயோ ஸ்திரீயாயிரா நின்றாய்; உனக்கு ஸ்வாதந்திரிய மில்லை; உனக்கென்று தனியே ஒரு பொருளில்லை; இந்தப் பந்தையும் கழலையும் நீ ஏதே னும் காசுகொடுத்து வாங்கிற்றுண்டோ? என்னுடையவைகளை உன்னுடையவை களாக நீ சொல்வது வழக்கோ? என்று சில பேசிக்கொண்டு புன்முறுவல் செய்து கொண்டு அணுகிவந்தானாக, இங்ஙனே சொல்லுகிறாள்.

நங்காய்! உன்னிடத்தில் எவ்வளவோ அன்புகொண்டு அணுகி வந்திருக்கின்ற என்னை 'போகு' என்று சொல்லி அப்பால் தள்ளுகின்றனையே, இஃது உனக்குத் தருமமா? என்றான் கண்ணன். அதற்குப் பராங்குசநாயகி 'ஆமாம் என்மீது உனக்கு

அளவுகடந்த அன்புதான்: உன் அன்பை நீயேதான் மெச்சிக் கொள்ளவேண்டும்' என்றாள். அதற்குக் கண்ணபிரான் 'அம்மா! இப்படியும் சொல்லலாகுமோ? உன்னிடத்து எனக்கு அன்பு மிகமிகவுள்ளதென்பதில் இவ்வளவு ஸந்தேஹமா? எனது கண்ணிணையில் என் அன்பு முழுவதும் உனக்கு விளங்கவில்லையா?' என்று சொல்லிக்கொண்டே புன்முறுவல் செய்துகொண்டு அணுகிவந்தான்; அப்போது சொல்லுகிறாள் "உன் தாமரைபுரை கண்ணிணையும் செவ்வாய் முறுவலும் ஆரலங்கள் செய்ய அறிதற்கே தோற்றோமேயாம்" என்று. இங்ஙனே கண்ணழகையும் முறுவலழகையுங்காட்டி எம்மை அழிக்கிறாயத்தனை; இப்படி அழிவதற்கு நாங்கள் பெண் பிறந்தோமேயல்லது, உன்னை யநுபவிக்கப் பிறந்தோமல்லோங்காண் என்றபடி.

இப்படி பராங்குசநாயகி சொன்னவாறே அவன் மேன்மேலும் சில விலாஸ சேஷ்டிதங்களைச் செய்யப்புக, இவற்றுக்கு நாம் முகங்கொடுப்போமல்லோம் என்று முகத்தை மாறவைத்தாள்; அப்போது பின்புறத்து அளகபாரங்களைக் கண்டு கண்ணபிரான் "மயில்தோகை போலே இதுவொரு கூந்தல் கற்றை இருந்தபடியென்!" என்று சில வருணனைகளைப் பேசிக்கொண்டு, புல்லாங்குழலோசையாலே இவளை வசப்படுத்திக் கொள்வோமென்று பார்த்து வேணுகானம் பண்ணத் தொடங்கினான்; அதன்மேல் பின்னடிகள் கூறுகின்றாள்; அப்பா! நானன்று கூந்தலழகி; உன் திருவருளுக்குப் பாத்ரபூதைகளான கூந்தலழகிகள் திருவாய்ப்பாடியிலே பலருண்டுகாண்; அங்கே சென்று பசுக்களை மேயவிட்டுக்கொண்டு இந்த வேணுகானத்தை அங்கே செய்வாயாகில் அவர்கள் திருவுள்ள முகப்பார்கள்; அங்கே சென்று ஊதுகிடாய். என்றாளா 2
யிற்று.

போயிருந்துநின்புள்ளுவமறியாதவர்க்கு உரைநம்பீ! * நின்செய்ய
வாயிருங்கனியுங்கண்களும் விபரீதமிந்நாள் *
வேயிருந்தடந்தோளினார் இத்திருவருள்பெறுவார்யவர்கொல்? * 3
மாயிருங்கடலைக்கடைந்த பெருமானாலே.

| | | | |
|---|---|---|---|
| நம்பி | பிரானே! | | (இதற்குமேல் முகத்தை மாற வைத்துக்கொண்டு சொல்லுகிறாள்.) |
| போய் இருந்து | எங்களைவிட்டு அப்பால் போயிருந்து | மா இரு கடலை கடைந்த பெருமானாலே | அகாதமாய் விசாலமான கடலைக்கடைந்தவனான இப்பெரியோன் பக்கலிலே |
| நின் புள்ளுவம் அறியாதவர்க்கு உரை | உனது வஞ்சகங்களை அறியாதவர்களான சிலர் பக்கலிலே உன் மெய்போலும் பொய்களைச் சொல்லிக்கொண்டிரு; | இத் திரு அருள் பெறுவார் | இப்படிப்பட்ட திருவருளைப் பெறுமவர்களான |
| நின் செய்ய வாய் இரு கனியும் | உனது சிவந்த அதரமாகிற சிறந்த கனியும் | வேய் இரு தட தோளினார் யவர் கொல் | வேய்போன்ற பருத்த நெடிய தோள் படைத்தவர்கள் யாவரோ? |
| கண்களும் | திருக்கண்களும் | | |
| இந்நாள் விபரீதம் | இப்போது முன்போல் அல்லவிடாய்; | | |

* * * — கீழ்ப்பாட்டிலே "ஆகள் போகவிட்டுக் குழலூது போயிருந்தே" என்ற பராங்குசநாயகியை நோக்கிக் கண்ணபிரான் 'நங்காய்! நான் எங்கேயோ போயிருந்து குழலூதுவானேன்? காதலிகள் உள்ளவிடத்தேயன்றோ குழலூதத் தகுவது; என் காதலுக்கு முக்கியமான கொள்கலமாகிய நீயிருந்த இவ்விடத்தேயன்றோ நான் குழலூத வேண்டுவது' என்று சில வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு நெருங்கிவா, "போயிருந்து நின் புள்ளுவமறியாதவர்க்கு உரைநம்பீ!" என்கிறாள். உன் பொய்யிலே பழகின என் பக்கலிலே உன்பொய் விலை செல்லாதுகிடாய்; உன் பொய் அறியாதவர்களின் கோஷ்டியிலே போயிருந்து இத்தகைய வஞ்சக வார்த்தைகளைச் சொல்லிக்காணாய் என்றபடி.

அதுகேட்ட கண்ணபிரான் 'நங்காய்! உன்வாயமுதம் பருக என் செய்யவாய் துடிக்கிறபடி கண்டாயே; வாயமுதம் பருகக் கிடையாதொழினும் கண்களாரளவும் நின்று காணவாவது பெறலாமோ என்று என் கண்கள் துடிக்கிறபடி கண்டாயே' என்றான்; அங்ஙனம் சொல்லவே அவனது செய்யவாயையும் செந்தாமரைக் கண்களையும் உற்று நோக்கினாள் பராங்குசநாயகி. அவை பரம விலக்ஷணங்களாயிருந்தன. கீழ் நாட்களில் காணாத அழகு காணக்கிடைத்தது; அதுநோக்கி "நின் செய்யவாய் இருங்கனியும் கண்களும் விபரீதமிந்நாள்" என்கிறாள். விபரீதம் என்பதற்கு 'மாறுபட்டுவிட்டன' என்றும் பொருளாகலாம். 'விலக்ஷணமாயிருக்கின்றன' என்றும் பொருளாகலாம். விலக்ஷணமாயிருக்கின்றன வென்றது — பரம போக்யமாயிருக்கின்றன என்றபடி. ஊடலிலே இங்ஙனே சொல்லத் தகுதியில்லையாயினும் வடிவழகு பரவசப்படுத்திப் பேசுவித்தபடி. * அவசா꞉ ப்ரதிபேதிரே * என்ற கட்டளை. ஆறாயிரப்படியருளிச்செயல் காண்மின்;—"உன்னுடைய திருக்கண்களினுடையவும் திருப்பவளத்தினுடையவும் அழகு இருந்தபடி என்!, கண்டும் கேட்டுமறியாத தொருபடியான இவ்வழகு திருப்பாற்கடலிலே அம்ருதமதந ஸமயத்திலே அவதீர்ணையான .... பெரிய பிராட்டியோடு அன்று கலந்த கலவியாலும் பிறந்ததில்லை; இப்படி பெரிய பிராட்டியிற்காட்டிலும் உனக்கு அபிமதைகளாய் உன்னை புஜிக்கப் பிறந்தவர்கள் ஆரோ வென்கிறாள்" என்று.

முன்னிரண்டடிகள் எம்பெருமானை நோக்கி வ்யக்தமாகச் சொன்ன பாசுரமென்றும், பின்னிரண்டடிகள் அப்படி வெளிப்பாடாகச் சொல்லுகையன்றிக்கே ஹ்ருதயத்தினுள்ளே நினைத்துக்கொண்ட பாசுரமென்றும் கொள்ளத்தகும். இங்ஙனேயான வாயழகும் கண்ணழகும் பொலிந்த இப்பெருமானுடைய பரிபூர்ணாநுபவம் நமக்குக் கிடைக்கவில்லையே; இது கிடைக்கப்பெறும் புண்ணியவதிகள் யாவரோ! என்று உள்ளுக்குள்ளே விஸ்மயப்படுகின்றபடி.

மாயிருங்கடலைக் கடைந்த பெருமானாலே என்றது - பெரியபிராட்டியாரைப் பெறுதற்கு இவன் கடல்கடைதலாகிற மிகப்பெரிய காரியம் செய்தானுமே; அவளும் ஒரு பாக்யவதியே! என்ற கருத்தினாலாம். ... ... ... 3

ஆலிநீளிலையேழுலகுமுண்டு அன்றுநீகிடந்தாய் * உன்மாயங்கள்
மேலைவானவருமறியார் இனியெம்பரமே *
வேலினேர் தடங்கண்ணினார் விளையாடுசூழலைச் சூழவேநின்று *
காலிமேய்க்கவல்லாய் எம்மைநீகழறேலே. 4

| | | | |
|---|---|---|---|
| எழ் உலகும் உண்டு | ஸமஸ்த லோகங்களையும் பிரளயங் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து | வேலின் நேர் தடங்கண்ணினார் | வேல்போன்ற பெரிய கண்களையுடையவர்களான மாதர்கள் |
| ஆலின் நீள் இலை | ஆலமரத்தின் இளந்தளிரிலே | விளையாடு | விளையாடுமிடமான |
| அன்று நீ கிடந்தாய் | முன்பொரு காலத்தில் கிடந்தவனல்லையோ நீ; | சூழலை | விலாஸஸ்தானங்களை |
| உன் மாயங்கள் | உனது மாயச்செயல்களை | சூழவே நின்று | பற்றிக்கொண்டிருந்து |
| மேலை வானவரும் அறியார் | மேற்பட்டவர்களான நித்யஸூரிகளும் அறியார்கள்; | காலி மேய்க்க வல்லாய் | பசுக்களை மேய்க்கவல்ல பெருமானே! |
| இனி எம் பரமே | அப்படியிருக்க எம்மால் அறியப்போமோ? | எம்மை நீ கழறேல் | இந்தப் பொய்கள் எங்களுக்குச் சொல்லவேண்டா. |

* * * — கீழ்ப்பாட்டில் "நின்செய்யவாயிருங் கனியுங் கண்களும் விபரீதமிந்நாள்" என்றதைக்கேட்ட கண்ணபிரான் 'விபரீதமானது என்னிடம் யாதொன்றும் இருக்கவில்லாது; நான் செய்வது எதுவும் ருஜுவாக இருக்குமேயல்லது விபரீதமென்னும்படியாக என்னிடம் ஒன்றுமிருக்க ப்ரஸக்தியில்லை; விபரீதமோ மாயமோ

எல்லாம் உங்களிடத்தே யல்லது என்னிடம் ஒன்றுமில்லை' என்றான்; அதற்குக் கூறுகின்றாள் — "ஆலினிலை யேழுலகமுண்டு அன்று நீ கிடந்தாய், உன் மாயங்கள் மேலைவானவருமறியார் இனியெம்பரமே?" என்று. உலகங்களையெல்லாம் திருவயிற்றினுள் ஏகதேசத்தில்வைத்து ஓர் ஆலந்தளிரிலே துயில் கொள்பவனல்லையோ நீ; *பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு, ஆலிலையின் மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர் —ஆலன்று, வேலைநீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ, சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு * (முதல் திருவந்தாதி.) என்று மாஞானிகளும் அதிசயிக்கும்படியான இந்த மாயத்தை மேலையோரான வானவர்களும் அறியகில்லாதாராயிருக்க, நாங்களோ அறிகிற்போம்? உன் மாயத்தை நீயே அறியவேண்டுமத்தனை என்றபடி.

அதுகேட்ட கண்ணபிரான் 'நங்காய்! நான் இங்கே தாமதித்துவந்தேன் என்றவித்தனையே காரணமாகவன்றோ நீ இங்ஙனே பிறுக்குச்செய்வது. நான் தாய் தந்தையர்க்குப் பரதந்திரனல்லேனோ? அவர்கள் என் கையிலே கோலைக்கொடுத்துப் பசுமேய்த்து வா என்றால் நான் அங்ஙனமே சென்று மேய்த்து வரவேண்டாவோ? அதனால் சிறிது தாமதித்தால் அதற்காக இவ்வளவு சீறலாகுமோ?' என்று அநுநயமாகச் சில வார்த்தைகள் சொல்ல, "வேலினேர் தடங்கண்ணினார் விளையாடு சூழலைச் சூழவே நின்று காலிமேய்க்கவல்லாய்!" என்கிறாள் — பசு மேய்ப்பதென்று ஒரு வியாஜம் வைத்துக் கொண்டு, உனக்கு விருப்பமான கன்னுழிகள் விளையாடுமிடங்களிலே திரிவதன்றோ உன்பணி; இந்தச் சூது நாங்களறியோமோ? என்கிறாள்.

இவள் இங்ஙனே சொன்னவாறே 'இவள் நம்முடைய செய்தியை உள்ளபடியுணர்ந்து வெளியிட்டுவிட்டாளே!' என்கிற வருத்தத்தினால், அர்த்தமில்லாதபடி சில வார்த்தைகளை மிகைத்துச் சொல்ல ஆரம்பித்தான் கண்ணன்; அதற்கு 'எம்மைநீகழறேலே' என்கிறாள். நீ மேலிட்டு வார்த்தை சொல்லுமிடம் இதுவன்று; வேலினேர் தடங்கண்ணினார் விளையாடு சூழலிலே சென்று சொல்லாய் என்றபடி. ... ... 4

கழறேல்நம்பீ உன்கைதவம்மண்ணும்விண்ணும்நன்கறியும் * திண்சக்கர
நிழறுதொல்படையாய் உனக்கொன்றுணர்த்துவன்நான் *
மழறுதேன்மொழியார்கள் நின்னருள்சூடுவார் மனம்வாடிநிற்க * எம்
குழறுபூவையொடும் கிளியொடும்குழகேலே. 5

| | |
|---|---|
| நம்பீ கழறேல் | பிரானே! மேலிட்டு வார்த்தை சொல்வதை எங்களிடம் வைத்துக்கொள்ள வேண்டா! |
| உன் கைதவம் | உனது கபடங்களை |
| மண்ணும் விண்ணும் நன்கு அறியும் | உபய விபூதியும் நன்றாக அறியும்; |
| நிழறு | இவ்வடப்படி நடத்தப்பெறுகிற |
| திண் சக்கரம் தொல் படையாய் | திண்ணிய சக்கரமாகிற அநாதியான ஆயுதத்தை யுடையவனே! |
| உனக்கு நான் ஒன்று உணர்த்துவன் | உனக்கு நான் ஒரு விஷயம் அறிவிக்கக்கேளாய்; |
| நின் அருள் சூடுவார் | உனது க்ருபைக்குப்பாத்திர பூதைகளான |
| மழறு தேன் மொழியார்கள் | மழலைத் தேன்மொழியார்களான மாதர்கள் |
| மனம் வாடி நிற்க | நெஞ்சுகொதித்து நிற்கும்படியாக |
| எம் குழறு பூவையொடும் | அசகுர ரஸமாகப் பேசுகின்ற எமது பூவைப் பறவையோடும் |
| கிளியொடும் | கிளியோடும் |
| குழகேல் | லீலாரஸம் கொண்டாட வேண்டா நீ. |

* * * — கீழே 'எம்மை நீ கழறேலே' என்று மறுத்துக் கூறினவளவிலும் கண்ணபிரான், 'நங்காய்! பொய்யென்பதைக் கனவிலுமறியாத வென்னை நீ பச்சைப்

பசும் பொய்யனை என்னி இப்படி திரஸ்கரித்துத் தள்ளுவது தகுதியன்று; மத்தியஸ்தர்களை வைத்துக்கொண்டு நான் மெய்யனோ பொய்யனோ வென்பதை நிர்ணயிக்க வேண்டுமத்தனை' என்று சொல்லிக்கொண்டு மீண்டும் மேலிட்டு வார்த்தைசொல்ல; "கழறேல் நம்பீ! உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கறியும்" என்கிறாள். நிர்ணயம் பெறாத விஷயத்திற்கன்றோ மத்யஸ்தர்களை வைத்துக்கொண்டும் ஸாக்ஷிகளை விசாரித்துக்கொண்டும் தடுமாறவேண்டுவது; உன்னுடைய ஸங்கதி உபயவிபூதியிலும் ப்ரஸித்தமன்றோ? [கைதவமாவது—மாயச்செயல்; இது வடசொல்.] நீ வஞ்சகம் செய்வது இம்மண்ணுலகில் மாத்திரமேயோ? விண்ணுலகிலும் ப்ரஸித்தமன்றோ அது. "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவேயங்கு, ஓர்மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்போந்து இமிலேற்று வன்கூன் கோட்டிடையாடினைகூத்து அடலாயர்தம் கொம்பினுக்கே" என்கிற திருவிருத்தப் பாசுரத்தின் பொருள் இங்கே அநுஸந்திக்கத்தக்கது.

உன் க்ருத்ரிமத்தை உபய விபூதியும் நன்கறியும் என்றவாறே, கண்ணபிரான் "அந்தோ! இங்ஙனே அலர் தூற்றிவிடுவது ஒரு வார்த்தையோ? விவேகியான வொருவனை ஸாக்ஷியிட்டு ரூதலிக்கவேண்டாவோ?" என்று கூற, அப்படியா? ஸாக்ஷிகளுக்குக் குறையுண்டோ? ஸாக்ஷிகளை நாங்கள் தேடவேண்டுமோ? உன் கையிலேயே ஸாக்ஷி விளங்காநின்றானே; ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும் இங்ஙனேயாக நீ செய்த க்ருத்ரிமங்களுக்கு உடன்பட்டிருந்த திருவாழியாழ்வான் உன கையிலே உள்ளானன்றோ? அவனைக் கேட்கலாமே யென்கிறாள் — திண்சக்கரநிழறு தொல்படையாய் என்கிறாள்.

இவள் இப்படிச் சொன்னவாறே 'அந்தோ! இவள், நாம் வாயைத்திறந்து மறுமாற்றம் சொல்ல இடமில்லாதபடியாக இப்படி ஸாக்ஷியிட்டுவிட்டாளே; இனி நாம் என்செய்வது!' என்று கவிழ்ந்துநின்றான் கண்ணபிரான். அந்த தீனதசையைக்கண்டு 'பிரானே! கவிழ்தலை யிட்டிருக்கவேண்டா; நீ எம்மையே அடிபணிந்தாயாகில் நீ மறுமாற்றம் சொல்லிப் பிழைக்கவேண்டிய வகைகளை நாமே உனக்குச் சொல்லித்தருகிறோம் வா' என்றார்கள்.

ஸர்வஜ்ஞரான நமக்கும் இவர்கள் ஒன்று உணர்த்துவதாகச் சொல்லாநின்றார்களே!, இது என்ன அழகானபேச்சு! என்று உள்குழைந்த கண்ணபிரான் அந்தப் பேச்சின் இனிமையை எடுத்துரைத்துப் புகழத் தொடங்கினான் — "உங்களுடைய மொழி ஸாமான்யமாக இல்லையே, தேன்போலே இனிதாயிருக்கின்றதே!" என்றான்; அதற்குச் சொல்லுகிறார்கள்—அப்பா! தேன்மொழியார் நாங்கள் அல்லோம்; நின்னருள் சூடும் தேன்மொழியார்கள் வேறேயுளர்; எம்மை அவர்களாக ப்ரமிக்கிறாய்போலும்; அந்த ப்ரமம் வேண்டாகாண் என்றார்கள்; என்று சொல்லிவிட்டுத் தலைமறைய நின்றார்கள்; இவனோடு இந்த ஸம்பாஷணை தானும் போதுமென்று எண்ணி நின்றார்கள்; அவ்வளவிலே அங்கே சில பூவைகளும் கிளிகளுமிருந்தன; அவற்றோடே லீலாரஸம் கொண்டாட ஆரம்பித்தான் கண்ணபிரான்; அதுகண்டு "நின்னருள் சூடுவார்மனம் வாடி நிற்க எம் குழறு பூவையொடும் கிளியோடும் குழகேலே" என்கிறார்கள். நீ இங்கே வந்தது தெரிந்தாலே உன் காதலிமார்கள் வருந்துவார்கள்; அதற்குமேலே எம்முடைய ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலே நீ அபிநிவேசம் காட்டுகிறாயென்கிற இதுவும் தெரிந்தால் அவர்களுடைய வருத்தத்திற்கு அளவேயிராது. ஆகவே அவர்கள் மனம் வாடும்படியாக நீ இங்ஙனம் குழகவேண்டா என்றார்களாயிற்று.

பூவை என்று புஷ்பவிசேஷத்திற்கும் பக்ஷி விசேஷத்திற்கும் பெயர்; "பூவைப்பூவண்ணா" "பூவையுங் காயாவும் நீலமும் பூக்கின்ற" என்னுமிடங்களில் புஷ்ப விசேஷப்பொருளில் பிரயோகமும், "நீயலையே சிறுபூவாய்! நெடுமாலார்க்கென் தூதாய்" "பூவை பைங்கிளிகள்" "பூவைகள்காள் குயில்காள் மயில்காள்" என்னுமிடங்களில் பக்ஷிவிசேஷப் பொருளில் பிரயோகமும் காணத்தக்கன. ... ... ... 5

குழகியெங்கள்குழமணன்கொண்டு கோயின்மைசெய்துகன்மமொன்றில்லை *
பழகியாமிருப்போம் பரமேயித்திருவருள்கள் *
அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர் *
கழகமேறேல்நம்பீ! உனக்குமிளைதேகன்மமே. 6

| | |
|---|---|
| நம்பீ | பிரானே! |
| குழகி | லீலாரஸம் கொண்டாடி |
| எங்கள் குழமணன் கொண்டு | எங்களுடைய மரப்பாச்சியை யெடுத்துக்கொண்டு |
| கோயின்மை செய்து | கேட்பாரற்ற செயல்களைச் செய்வதனால் |
| கன்மம் ஒன்று இல்லை | உனக்கு ஒரு காரியம் வித்தித்ததாகாது; |
| யாம் பழகி இருப்போம் | நாங்கள் வெகுகாலமாகவே உம்மோடு பழகி உமது யோக்யதைகளைத் தெரிந்துகொண்டிருக்கின்றோம்; |
| இத் திரு அருள்கள் பரமே | உம்முடைய ஆசைப்பெருக்கான காரியங்களுக்கு நாங்கள் இலக்காகப் போருமோ |
| | [இவை எங்களால் தாங்க முடியா.] |
| இ உலகு மூன்றுக்கும் | இம் மூவுலகத்திலுள்ளும் |
| அழகியார் | அழகிற் சிறந்தவர்களாயும் |
| தேவிமை தகுவார் | உமக்குத் தேவிகளாயிருக்கத் தகுந்தவர்களாயுமுள்ள மாதர்கள் |
| பலர் உளர் | பலருண்டு; |
| கழகம் ஏறேல் | எங்கள் திரளிலே பலாத்காரமாகப் புகவேண்டா; |
| கன்மம் | இப்படிப்பட்ட செய்கையானது |
| உனக்கும் இளைது | உன்மனத்தால் பார்த்தாலும் பாஸ்ய லௌஸ்யமாகத் தோற்றக்கூடியதே. |

* * * — கீழ் "எம்குழறுபூவையொடும் கிளியோடும் குழகேலே" என்றார்கள். அந்தப் பூவைகளும் கிளிகளும் உயிருள்ளவையாகையாலே 'நாம் நமது தலைவிகளின் கருத்துக்கு இணங்க வர்த்திக்கவேணும்' என்று தெரிந்துகொண்டு கண்ணபிரான் கையில் பிடிகொடாமே அப்பால் சென்றுவிட்டன; அசேதனங்களான சில லீலோபகரணங்கள் அங்குக்கீழே விழுந்துவிட்டன; அவற்றைக் கண்ணபிரான் எடுத்துக்கொண்டு சில விலாஸ சேஷ்டிதங்களைச் செய்ய ஆரம்பித்தான்; அதற்குமேலே வார்த்தைகள் பெருகிச் சென்றன; "கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி" "பந்து பறித்துத் துகில்பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்யும்" என்னும்படியான கேட்பாரற்ற செய்கைகளைச் செய்யவும் தொடங்கினன்; அதுகண்டு "குழகியெங்கள் குழமணன் கொண்டு கோயின்மைசெய்து கன்மமொன்றில்லை" என்கிறார்கள்.

கோயின்மை=கோ+இன்மை; அரசனில்லாமை என்று சப்தார்த்தம்; அராஜகமான செய்கை என்பது கருத்து.

கன்மமொன்றில்லை=இதனால் உனக்கு யாதொரு லாபமும் இல்லை என்றபடி. நீ எவ்வளவு குறும்புகள் செய்தாலும் இது உனக்கு நிறக்கேடாகுமத்தனையல்லது நாங்கள் வசப்பட்டு வருவோமென்கிற ஆசைக்கு இடமில்லை என்றவாறு.

"கன்மமொன்றில்லை" என்றவாறே 'நங்காய்! இப்படியும் வெட்டிதாக வார்த்தை சொல்லலாமோ? நான் உன்னுடைய சரக்கன்றோ; உன்னைவிட்டால் எனக்குக் கதியுண்டோ? உன்னையேயன்றோ இரவும் பகலும் நான் சிந்தித்துக்கொண்டிருப்பது' என்றிங்ஙனே அநுபவித்து வார்த்தைசொல்ல "பழகி யாமிருப்போம்" என்கிறார்கள். அப்பா! உன்னுடைய பச்சைப்பசும் பொய்யுரைகளை நாங்கள் இன்று புதிதாகக் கேட்கிறோமல்லோம் கிடாய்; உன் பொய்யுரைகளிலேயன்றோ நாங்கள் பழகியிருப்பது என்றபடி.

இங்ஙனம் சொல்லக்கேட்ட கண்ணபிரான் 'என்னுடைய பொய்யுரைகளிலும் குறும்புச் செயல்களிலும் நீங்கள் பழகினவர்கள்தானே; சிலர் ஒன்றிலே பழகிவிட்டால் அது இல்லாமல் ஒரு நொடிப்பொழுதும் இருக்கமுடியாதன்றோ; என்னுடைய குறும்பு

களிலேயே பழகின வுங்களுக்கு என் குறும்புகள் இன்றியமையாதனவன்றோ ; பரம போக்யமாகவன்றோ இவை உங்களுக்கு இருக்கும்' என்று சொல்லிக்கொண்டே மிகைத்து அல்லல்படுத்த ஆரம்பித்தான் ; அதற்கு "பரமே யித்திருவருள்கள்" என்கிறார்கள். அவனுடைய குறும்பான செயல்களையே இங்குத் திருவருள்கள் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்கள், மேலே பத்தாம் பத்தில "என் கோவம்மான் திருவருள்கள்!" என்கிறாராழ்வார். அங்கு எம்பெருமானுடைய ஒரு வியாமோஹத்தையே திருவருளென்ற சொல் காட்டுகின்றது. அதுபோலவே இங்கும் அவனுடைய வ்யாமோஹபரீவாஹமான தூர்த்த க்ருத்யங்களையே திருவருள்களென்கிறது. பரமே இத்திருவருள்கள்! = உன்னுடைய இப்படிப்பட்ட குறும்புகளை எம்மால் பொறுக்கப்போமோ? என்றபடி. भरः என்னும் வடசொல் பரமெனத்திரிந்தது.

எங்களால் பொறுக்கப்போமோ? என்றவாறே 'பின்னையாரால் பொறுக்கப்போகும்' என்றான் கண்ணபிரான். அதற்கு உத்தரமாக "அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும் தேவிமைதகுவார் பலருளர்" என்கிறார்கள். த்ரிலோக ஸுந்தரிகளென்று பேர்பெற்று உனக்கேற்கும் தேவிமார்கள் பலருண்டுகாண் ; உனக்கு ஏற்காத குரூபிகளான நாங்கள் எதற்கு? என்றபடி. "தக்கார் பலர் தேவிமார்சாலவுடையீர்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் இங்கே நினைக்கத்தக்கது. 'உனக்கேற்ற அழகிய தேவிமார்கள் பலருண்டு' என்றவாறே கண்ணபிரான் "எனக்குஏற்ற தேவிகள் அழகிகள் நீங்கள்தவிர வேறில்லை ; உங்கள் கையில் ஆணையிட்டுத் தருகிறேன் காண்மின்" என்று சொல்லிக்கொண்டே உள்ளே புகத் தொடங்கினான் ; அதுகண்டு "கழகமேறேல் நம்பீ" என்கிறார்கள். நீ எத்தனைபேரைத் தீண்டி வந்திருப்பாயோ தெரியாது ; மேல்விழுந்து தீண்டாதேகொள் என்றவாறு. கழகம் - கோஷ்டி.

இங்கே பரமபோக்யமான ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் ;—"இவ்விடத்தே பட்டர் அருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு ; ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் உபய விபூதியுக்தனாய் ஸர்வாதிகனாய் ஸர்வநியந்தாவா யிருக்கிற ஸர்வேச்வரன் நாலிடைப்பெண்களிருந்தவிடத்தே புகவல்லது நிற்கமாட்டாத செல்லாமையைவிளைய, அவர்கள் நீ இங்குப் புகுராதேகொள் என்ன, விலங்கிட்டாப்போலே பேரவும் திரியவும்மாட்டாதே தடுமாறினான்னென்கிற ஸௌசீல்யம் தங்களையு மிவர்களையுமொழிய ஆரறிந்து கொண்டாட வ்யாஸாதிகள் எழுதியிட்டுவைத்துப் போனார்களோ? என்றருளிச்செய்வர், ஸர்வநியந்தாவானவன் சிலர்க்கு நியமிக்கலாம்படி எளியனானான் என்றால் இது மெய்யென்று கைக்கொள்ளுவாரைக் கிடையாதிறே. சாஸ்த்ரங்களெல்லாம் ஈச்சிதவ்ய விபாகம் பண்ணி ஒருங்க விடாநிற்க, அத்தலை யித்தலையாகச் சொல்லுகிறதிறே இது."

இவர்கள் 'கழகமேறேல்நம்பீ' என்றால் அதுகேட்டு அப்படியே வர்த்திப்பானோ அவன்? இவர்கள் தாம் உள்ளுறச்சொல்லுகிற வார்த்தையுமன்றே இது ; அவன் மேன்மேலும் உட்புகவேணும், தீம்புசெய்யவேணும் என்றன்றோ இவர்களும் உள்ளே எண்ணியிருப்பது. அவன் இஃதறிவானாகையாலே பிடிவாதமாகச் சில செய்யப்புகுந்தான் ; அதுநோக்கி 'உனக்குமிள்ளைதே கன்மமே' என்கிறார்கள். அப்பா! நீ செய்கிற இவ்வநீதியான செயல் நீசத்தனமானது என்று நாங்கள் சொல்லுகிறவளவேயோ? நீயே ஆலோசித்துப் பார்த்தால் இது மிகவும் நீசத்தனமென்னுமிடம் உன் மனதுக்கும் தெரியுமே என்றபடி. ... ... ... ... .... 6

கன்மமன்றேங்கள்கையில்பாவைபறிப்பது கடல்ஞாலமுண்டிட்ட *
நின்மலாநெடியாய் உனக்கேலும்பிழைபிழையே *
வன்மமேசொல்லியெம்மைநீவிளையாடுதி அதுகேட்கிலென்னைமார் *
தன்மபாவமென்னார் ஒருநான்றுதடிபிணக்கே. 7

| | | | |
|---|---|---|---|
| கடல் ஞாலம் உண்டிட்ட | கடல்சூழ்ந்த வுலகங்களை எல்லாம் ஒருகால் திரு வயிற்றி லுட்கொண்ட | வன்மமே சொல்லி | மருமமான வார்த்தைகளைச் சொல்லி |
| நின்மலா | விமலனே! | விளையாடுதி | விளையாடுகின்றாய்; |
| நெடியாய் | பெரியோனே! | என் ஐம்மார் | எங்களுடைய ஸஹோதரர்கள் |
| எங்கள் கையில் பாவை பறிப்பது | எங்கள் கையிலுள்ள லீலோபகரணங்களை வலியப்பிடித்திழுப்பதானது | அது கேட்கில் | இப்படியெல்லாம் நீ செய்தும் சொல்லியும் போருகிறாயென்பதைக் கேட்கப்பெற்றார்களாகில் |
| கன்மம் அன்று | செய்யத்தகுந்த காரியமன்று; | தன்மம் பாவம் என்னார் | நன்மை தீமையென்றுகூடப் பாரார்கள்; |
| உனக்கேலும் பிழை பிழையே | இது உனக்கு மிகப்பெரிய அவத்யமேயாகும்; (இதுவன்றியும்) | ஒரு நான்று தடி பிணக்கே | ஒருகால் உன்னைத் தடியிட்டுத் தகர்க்கும்படியாகவும் நேர்ந்துவிடும். |
| எம்மை | எங்களை நோக்கி | | |

* * * — கீழே "உனக்குமினேதே கன்மமே" என்னக் கேட்ட கண்ணபிரான் 'என்மேல் உங்களுக்கு இவ்வளவு வெறுப்பாகில் நீங்கள் சுகமாக இருங்கள், நான் போய்வருகிறேன், என்னுடைய வஸ்துக்களை நான் எடுத்துக்கொண்டுபோகிறேன்' என்று சொல்லிக்கொண்டே கீழேகிடந்த லீலோபகரணங்களை யெடுக்கப்பார்த்தான்; உடனே ஆய்ச்சிகள் அவற்றைத் தங்கள் கையிலே யெடுத்துக்கொண்டார்கள்; அவனை எளிதில் போகவொட்டுவார்களோ இவர்கள்தாம்; மேன்மேலும் பிணக்குக்கு இடம் கொடுக்கவேணுமென்றே இவர்களும் நினைத்திருக்கையாலே இந்த அற்ப வஸ்துக்களைக் கொண்டுபோனால் போகட்டும் என்றிராமே 'எங்கள் வஸ்துவை நீ எப்படியெடுத்துக் கொண்டு போவாய்?' என்று சிலுகிட்டு அவற்றைத் தாங்களே வாரியெடுத்துக்கொண் டார்கள்; 'இது நமக்குப் பெருநன்மையேயாயிற்று' என்று கொண்ட கண்ணபிரான் கைதீண்டிச் சண்டையிட அநுகூலமாகச் செய்தார்களே! என்று உகந்து அவர்கள் கைமேலே கையையிட்டு அவற்றைப் பறிக்கப் புகுந்தான்; அப்போது "கன்மமன்று எங்கள் கையில் பாவைபறிப்பது" என்கிறார்கள். 'கன்மமன்று' என்றதற்கு இவர்கள் நினைத்தது ஒருபொருள்: அவன் கொண்டது வேறொருபொருள். 'எங்கள் கையிலுள்ள பாவையைப்பறிப்பது நீ செய்யத்தகுந்த காரியமன்று' என்கிற பொருளையிட்டு இவர்கள் கன்மமன்று என்றார்கள். இதுஉன்னால் செய்யமுடியும்படியான காரியமன்று என்று இவர்கள் சொல்லுவதாக அவன் கொண்டு, 'எனக்கு அசக்யமானது மொன்றுண்டோ, என்னை ஆரென்று நினைத்திகோள்? *பாலகனென்று பரிபவஞ்செய்யேல், பண்டொருநாள் ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்* என்று என்தாய் பலகாலும் சொல்லுமே கேட்டறியீர்களோ? கடல்ஞாலமுண்டிட்ட எனக்கு அஸாத்யமானது மொன்றுண்டோ? என்றான்.

பிரானே! உனக்கு அஸாத்யமானதொன்று இருப்பதாக, நாங்கள் நெஞ்சிலும் நினைத்திலோமே; அப்படி நாங்கள் சொல்லவுமில்லையே; கடல்ஞால முண்டிட்டவனும் நீயே, நின்மலனும் நீயே; இதில் எமக்கு ஸந்தேஹம் இல்லைகாண்; இப்படிப்பட்ட நின்மலனான நீ தீமைகளைச்செய்வது உனக்குப் பிழை என்கிறோமத்தனை என்றார்கள். எனக்குமா இது பிழையாகும்? என்றான்; உனக்கேலும் பிழைபிழையே என்கிறார்கள்.

இவர்கள் இங்ஙனே சொன்னவாறே மேலே ஒன்றும் உத்தரமுரைக்கமாட்டாமல் காதோடே சில சொல்லுவதாகவந்து, சிறுபயல்கள் செவியிலே வந்து 'காகா குர்!' என்னுமாபோலே ஏதோ மருமமான வார்த்தைகளை வலிதாகச் சொன்னான்: அதனால், வன்மமே சொல்லி எம்மை நீ விளையாடுதி என்றார்கள்.

அதற்கு, 'நான் தப்பாக என்ன சொல்லிவிட்டேன்' என்று, தான் அவர்களுடைய காதிலே சொன்ன குறும்புவார்த்தையை உரக்கச் சொல்லவேணுமென்றுவாயெடுத்தான்; உடனே அவனுடைய வாயைப் புதைத்து "அதுகேட்கில் என்னைமார் தன்ம

பாவமென்னார்" என்றார்கள். அந்தக் குறும்பு வார்த்தையைத் தங்கள் வாயாலே அநுவதிக்கக் கூசி 'அது' என்கிறார்கள். தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "பேதை பாலகன் அதாகும்" என்றாற்போல. கண்ணா! அந்த அஸப்யமான வார்த்தையை எங்கள் செவியிலே சொன்னதுபோதும்; அதை நீ உரக்கச்சொல்லி, அது எங்கள் உறவினருடைய காதிலே விழுமாகில், பிறகு அவர்கள் பாவமென்றும் புண்ணியமென்றும் பாரார்கள்—என்றார்கள். (தன்மம் - தர்மம்.)

பாப புண்யங்களுக்கு அஞ்சாமல் என்ன செய்துவிடுவார்கள்? என்றான் கண்ணன்; ஒருநான்று தடிபிணக்கே = அது நாங்களறிவோமோ? ஆளுக்கொரு தடி எடுத்துக்கொண்டு, வந்து தகர்ப்பார்கள்கிடாய்; குத்தும் பூசலுமாயன்றோ தலைக்கட்டும் என்றபடி. ... ... ... ... ... ... 7

பிணக்கியாவையும்யாவரும் பிழையாமல்பேதித்தும்பேதியாததோர் *
கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிர்ஞானமூர்த்தியினாய் *
இணக்கியெம்மையெந்தோழிமார் விளையாடப்போதுமினென்னப்போந்தோமை *
உணக்கிநீவளைத்தால் என்சொல்லாருகவாதவரே. 8

| | | | |
|---|---|---|---|
| யாவையும் யாவரும் | அசேதனப் பொருள்களும் சேதனப் பொருள்களுமான ஸகலத்தையும் | கணக்கு இல் கீர்த்தி வெள்ளம் | அத்விதீய நிரவதிக கீர்த்தி ப்ரவாஹத்தையும் |
| பிணக்கி | ஸம்ஹார தசையிலே நாமரூப விபாகமில்லாதபடி ஒன்றாகப் பிசிறிவைத்து (பிறகு ஸ்ருஷ்டிகாலத்திலே) | கதிர் ஞானம் மூர்த்தியினாய் | ஸங்கல்பரூபஜ்ஞானத்தையும் வடிவாகவுடையவனே! |
| | | எம் தோழிமார் எம்மை இணக்கி | எமது தோழிமார்கள் எங்களை இசைவித்து |
| பிழையாமல் | ஒருவருடைய கருமமும் மாறிப் போகாதபடி | விளையாட போதுமின் என்ன | விளையாட வாருங்கோள் என்றழைக்க |
| பேதித்தும் | தேவயோனி மநுஷ்ய யோனி திர்யக்யோனி முதலிய பேதங்களைப் பண்ணினவிடத்தும் | போந்தோமை | (நீ இங்கிருப்பது அறியாமே) வந்த எங்களை |
| | | நீ உணக்கி வளைத்தால் | நீ செருக்கித் தகைத்தால் |
| பேதியாதது | அவற்றிலுள்ள தோஷங்களால் ஸ்வரூபத்துக்குச் சேதம் வாராதபடியான | உகவாதவர் என் சொல்வார் | வேண்டாதார் என்னதான் சொல்ல மாட்டார்கள்! |

* * * கீழ் 'ஒருநான்று தடிபிணக்கே' என்றதைக் கேட்ட கண்ணபிரான் 'நங்கைமீர்காள்! என்னைத் தடிகொண்டா அடிக்கப்போகிறீர்கள்? பரமஸந்தோஷம்! அப்படிப்பட்ட ஆண்புலிகளைத்தான் நானும் தேடிக்கொண்டு கிடக்கிறேன்; தடிபிணக்குக்காரர்கள் எத்தனைவர் வருகிறார்களோ வரட்டும்; எனக்கோ தடியும் வேண்டாம் தாம்பும் வேண்டாம்; 'மல்லரைமாட்டிய தேவாதிதேவன்நான்' என்பதை இன்று காட்டிவிடுகிறேனா இல்லையா பாருங்கள்; அப்படியா ஸமாசாரம்! என்னை யாரென்று நினைத்தீர்கள்? இடையர்கையில் உதைபட்டுப்போகிறவன் நானென்று பார்த்தீர்களோ? அதையுந்தான் ஒருகை பார்த்து விடுவோமே; என் சரக்கறியாதார்க்கு என்சரக்கை இன்று காட்டியே தீருகிறேன் பாருங்கள்' என்று, பெரிய ஆவேசங்கொண்டவன்போலப் படபடத்துப் பேசிநின்றான்; அது கண்ட ஆய்ச்சிகள், பிரானே! உன் சரக்கை நாங்கள் அறியாதவர்களல்லோங்காண்; உன்னுடைய ஜாதகம் முழுவதும் எமக்கு நன்கு தெரியுங்கிடாய்; உன் சரக்கை நாங்கள் அறியாதவர்களாகிலன்றோ இத்தனை ஆர்வாரம் நீ செய்யவேண்டும்; நீ அறிவிப்பதற்கு முன்னமே எல்லாம் நாங்களே அறிவோங்காண்; என்றார்கள்; அதுகேட்ட கண்ணபிரான் 'நீங்கள் நிர்த்தயிர்ந்தைச் சொல்லிக்காட்டுங்கள் பார்ப்போம்' என்றான்; உன்னுடைய மூலக்கந்தமே பிடித்து நாங்கள் அறிவோங்காண் என்று பீடிகையிட்டுக்கொண்டு அந்தச் சொல்லிக்காட்டுகிறார்கள்—

"பிணக்கி யாவையும் யாவரும்" என்று தொடங்கி, முன்னிரண்டடிகள் முழுவதும் வேதாந்தங்களிலே ப்ரஸித்தமான பகவச்சக்தி விசேஷத்தை வெளியிடுவன. ஸம்ஹார ஸமயத்திலே ஸகலசேதநாசேதநங்களையும் நாமரூப விபாக ரஹிதமாம்படி கலசி, ஸ்ருஷ்டி ஸமயத்திலே ஒருவர் கருமம் ஒருவர்க்குத் தட்டாதபடி பிரித்து ஸ்ருஷ்டித்தும் தனக்கொரு தோஷமின்றிக்கே யிராநின்ற ஸர்வஜ்ஞமூர்த்தி நீ என்று நாங்கள் அறிவோம் என்று காட்டினபடி. * ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி ஸதபோதப்யத ஸதபஸ்தப்த்வா இதம் ஸர்வமஸ்ருஜத யதிதம் கிஞ்ச * என்று உபநிஷத்து ஓதினபடியே ஸங்கல்பமாத்ரத்தாலே ஸ்ருஷ்டி ஸம்ஹாராதிகளை நிர்வஹிக்கவல்ல பரமசக்தன் என்றவாறு.

பிரளயந்திற்குப் பிறகு மீண்டும் ஸ்ருஷ்டிக்கிற காலத்தில் ஸகல ப்ராணிகளுடையவும் கருமங்களை அப்படியப்படியே நினைப்பில்கொண்டிருந்து இறையும் மாறுபாடின்றிக்கே அவரவர்களுடைய கருமங்களின்படியே கரணகளேபர ப்ரதானம்பண்ணி ஸ்ருஷ்டிக்கிறபடியை * பிழையாமல் * என்பது காட்டுகிறது. அந்த ஸ்ருஷ்டியானது பலவகைப்பட்டது என்பதைக் காட்டுகிறது * பேதித்தும் * என்பது. அவற்றின் தோஷங்கள் ஒன்றும் தன்னிடத்தில் தட்டாதபடியைக் காட்டுகிறது * பேதியாததோர் * என்பது.

"கணக்கில் கீர்த்தி வெள்ளக்கதிர்ஞானமூர்த்தியினாய்" என்ற விளியைக் காதாரக்கேட்ட கண்ணபிரான் 'கோவியர்காள்! என் பெருமையை நீங்கள் இங்ஙனம் உள்ளபடி தெரிந்து கொண்டிருந்தும் * ஒருநான்று தடிபிணக்கே * என்று கூசாமல் எங்ஙனம் கூறினீர்கள்? உங்களுடைய அறிவுக்கும் சொல்லுக்கும் ஒரு சேர்த்தியில்லையே! ஏன் இப்படிச் சொன்னீர்கள்?' என்றான். அதற்குஉத்தரமாம் பின்னடிகள்.

[இணக்கியித்யாதி.] உன்னுடைய ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலிய குணங்கள் எங்களுக்குத் தெரிந்திருந்தபோதிலும், நாங்கள் விளையாட்டுச் சிறுமிகளன்றோ? எங்கள் பக்கலிலே நீ நடந்துகொள்ளவேண்டிய முறை இதுவோ? நீ முறைதவறிப் பரிமாறினால் நாங்கள் 'ஒருநான்று தடிபிணக்கே' என்றால் இதில் என்ன குற்றம்? நீ பராத்பரனாயிருந்துவைத்து உன்னுடைய பரத்வத்திற்குத் தகுதியற்ற காரியங்களைச் செய்தால் விளையாட்டாக நாங்கள்சொன்ன வார்த்தை பிசகோ? என்றார்கள்.

அதற்குக் கண்ணன் நீங்கள் உங்களுக்கு அஸாதாரணமான விடங்களிலேயிருந்து விளையாடலாகாதோ? எனக்கும் உரித்தான இடத்தில் நீங்கள் வந்தது ஏன்?' என்றான்

பிரானே! நாங்களாக வரவில்லை; இங்கே வரமாட்டோமென்றே நாங்கள் சொல்லிக்கிடந்தோம்; ஆனாலும் எம் தோழிமார் சிலர் பலவாறு நிர்ப்பந்தப்படுத்தவே நாங்கள் இணங்கிவரவேண்டியதாயிற்று; அவர்களும் விளையாடவாருங்கோள் என்றழைக்கவே நாங்கள் விளையாடவந்தோமத்தனை; உன்னுடைய விளையாட்டு வேறு எங்களுடைய விளையாட்டு வேறு. * அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே * என்றும் * நளிர்மாமலருந்தி வீட்டைப்பண்ணி விளையாடும் * என்றுஞ் சொல்லுகிறபடியே ஜகத்ஸ்ருஷ்டி முதலியவை உன்னுடைய விளையாட்டு. பந்துங் கழலுங்கொண்டு போது போக்குவது எங்களுடைய விளையாட்டு. உன் விளையாட்டு வைதிகம்; எம் விளையாட்டு லௌகிகம்: உனக்கும் எமக்கும் என்ன சேர்த்தியுண்டு? உன் காரியத்தை நீ பாராய்; எம் காரியத்தை நாங்கள் பார்க்கிறோம்—என்று சொல்லிப் பராமுகங்காட்ட ஆரம்பித்தார்கள் கோபிமார்கள்.

அதற்குமேலே கண்ணபிரான் வளைக்கத் தொடங்கினான்; வழிமடக்குவதும் குறுக்கே படுத்துக்கொள்வதுமான செயல்களைச் செய்தான்; அதுநோக்கி 'உணக்கி நீ வளைத்தால் என் சொல்லாருகவாதவரே' என்கிறார்கள். இதுதான் ரஸமே வடிவெடுத்த பேச்சு. உன்னை உகந்திருக்குமெங்களுக்கு இவ்வளைப்பு பரமபோக்யமே; இதற்கு எங்கள் உள்ளம் மெய்யே குழைகின்றதுகாண்; உகவாத பாவிகள் இதைக்கண்டால்

* அதுகண்டிவ்வூர் ஒன்று புணர்க்கின்றதே * என்னுமாபோலே எதையேனும் தொடுப்பர்கள் என்றுதான் அஞ்சுகின்றோம் என்றவாறு. ... ... ... 8

உகவையால்நெஞ்சமுள்ளுருகி உன்தாமரைத்தடங்கண்விழிகளின் *
அகவலைப்படுப்பான் அழித்தாயுன் திருவடியால் *
தகவுசெய்திலையெங்கள்சிற்றிலும் யாமடுசிறுசோறுங்கண்டு * நின்
முகவொளிதிகழ முறுவல்செய்துநின்றிலையே. 9

| | |
|---|---|
| உகவையால் நெஞ்சம் உள் உருகி | அந்தரங்கப்ரீதியாலே நெஞ்சு உள்ளேயுருகி |
| உன் தாமரை தடம் கண் விழிகளின் வலை அகப்படுப்பான் | உன்னுடைய தடத்தாமரைக் கண்களாகிற வலையிலுள்ளே நாங்கள் அகப்படும்படி பண்ணுவதற்காக |
| உன் திருஅடியால் அழித்தாய் | உன் திருவடியாலுதைத்து சொருக்கித் தள்ளினாய்; |
| எங்கள் சிற்றிலும் | நாங்கள் இழைக்கின்ற சிற்றிலையும் |
| யாம் அடு சிறு சோறும் கண்டு | நாங்கள் சமைக்கிற சிறு சோற்றையுங்கண்டு |
| நின் முகம் ஒளி திகழ | உன்னுடைய திருமுகமண்டலம் நன்கு ப்ரகாசிக்கும்படியாக |
| முறுவல் செய்து நின்றிலை | சிரித்துக்கொண்டே பார்த்துக்கொண்டிருக்க வேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல் திருவடியாலும் அழித்தாயே; |
| தகவு செய்திலை | இரக்கமான காரியம் செய்தாயல்லை. |

* * * கீழ்ப்பாட்டில் * உணக்கி நீவளைத்தால் * என்றபடியே அவன் வளைப்பிட்டுக்கிடக்கச் செய்தேயும் இவர்கள் அந்யபரதை பாவிக்கவேண்டி அவனையொரு பொருளாகமதியாதே தோழிமாரோடுகூடச் சிற்றிலிழைத்துச் சிறு சோறு அட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். இவன்றான் இவர்களுடைய கடாக்ஷமல்லது தனக்கு வேறொரு தாரகமில்லையென்று துணிந்திருப்பானொருவனாகையாலே எப்படியாவது இவர்கள் தன்னைக் கடாக்ஷிக்கும்படி செய்துகொள்ளவேண்டுமென்று நினைத்து, அவர்கள் இழைக்கும் சிற்றிலையும் சமைக்கும் சிறு சோற்றையும் தன்னுடைய திருவடிகளாலே உதைத்தொழித்தான்; அவனது திருவுள்ளக்கருத்தையறிந்த இவர்கள் அவனுடைய திருமுகத்தைப்பார்த்துப் பேசுகின்றார்கள்;

உன்பக்கலுள்ள ப்ரேம விசேஷத்தாலே நாங்கள் நெஞ்சு உருகி தாமரைத்தடங்கண் விழிகளாகிற வலையிலே அகப்படுகைக்காக எங்கள் சிற்றிலையும் யாம் அடுகின்ற சிறு சோற்றையும் உன் திருவடியால் அழித்தருளினாய்; நாங்கள் விளையாடுகிறபடியைக் கண்ணாரக் கண்டுகொண்டு மகிழ்ந்து நிற்கையன்றோ உனக்கு அழகு; அந்தோ! அது செய்யமாட்டிற்றிலையே; கால்படைத்த ப்ரயோஜனம்பெற்றாயே யல்லது கண்படைத்த ப்ரயோஜனம் பெற்றாயல்லையே; கண்ணுடையாரில் நீ தலைவனாயிருந்துவைத்து இங்ஙனே கண்ணற்ற காரியம் செய்யவடுக்குமோ? என்கிறார்கள்.

சிற்றிலிழைப்பதும் சிறுசோறு சமைப்பதும் சிறுமிகளின் பணிகளாம். நாச்சியார் திருமொழியில் * நாமமாயிரமேத்தநின்ற * என்ற பதிகத்திலே இது விசதமாகக் காணத்தக்கது. மண் விளையாட்டுக்களிற் சேர்ந்தவை இவை. இவர்கள் சிற்றிலிழைப்பதாகவும் சிறுசோறு சமைப்பதாகவும் சொல்லுவதன் கருத்து - பகவத்விஷயத்திற் கண் செலுத்தாதே உலகவியற்கைகளிலே கண்ணோட்டமாயிருந்தமையைக் கூறினபடி. பகவத்விஷயத்தில் ஈடுபட்டிருந்தால் ஒருநாழிகை ஸம்ச்லேஷமும் ஒன்பது நாழிகை விச்லேஷமுமாய் வருந்தவேண்டியிருக்கையாலே, அந்த ஈடுபாடும்வேண்டா, இந்த வருத்தமும் வேண்டா, உண்டுடுத்துத்திரிவாரோடே கூடிக்களித்துக் கிடப்போம் என்று அந்யபரராயிருக்கப் பார்த்தாலும் எம்பெருமானுடைய திருவடியழகு வலியப் பிடித்திழுத்துத் தன்னிடத்தே யீடுபடுத்திக்கொண்டு அந்த அத்யவஸாயத்தைக் குலைக்கின்றதென்பது இதற்கு உள்ளுறை பொருள்.

ஊடல்தீர்ந்து கண்ணபிரானோடே கூடல்நேரவேண்டிய ஸமயம் அணித்தாய் விட்டபடியால் அதற்குத் தகுந்தபடி பாசுரம் அமைகின்றது. “ அழித்தாய் உன் திருவடியால்” என்பதற்கு - எங்களுடைய சிற்றிலையழித்தாய் என்பதே முக்கியமான பொருளன்று; உன்னுடனே கூடோம் என்கிற எம்முடைய அத்யவஸாயத்தையழித்தாய் என்பதே முக்கியமான பொருள்.

நம்மை அகப்படுத்திக்கொள்வதற்கு இரண்டு வலைகள் உண்டு; * மாதரார் கயற்கணென்னும் வலையுள்பட்டு * என்று தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த வலை ஒன்று; * உன்தாமரைத்தடங்கண்விழிகளின்வலை * என்று இங்கே அருளிச்செய்யப்படுகிற வலை மற்றொன்று. இங்கே அகவலை என்றதனால், இது அந்தரங்க வலையென்றும் அது பஹிரங்கவலையென்றும் அறியத்தக்கது. .... ... 9

நின்றிலங்குமுடியினாய் இருபத்தோர்காலரசுகளைகட்ட *
வென்றிநீண்மழுவா வியன்ஞாலமுன்படைத்தாய் * -
இன்றிவ்வாயர்குலத்தைவீடுய்யத்தோன்றிய கருமாணிக்கச்சுடர் * 10
நின்றன்னால் நலிவேபடுவோமென்றுமாய்ச்சியோமே.

| | | | |
|---|---|---|---|
| நின்று இலங்கு முடியினாய் | நிலைநின்று விளங்குகிற திருவபிஷேகத்தை யுடையவனே! | இன்று இவ் ஆயர் குலத்தை வீடு உய்ய தோன்றிய | இப்போது இவ்விடைக்குலத்தை உஜ்ஜீவிக்கச் செய்வதற்காக அவதரித்த |
| இருபத்தோர் கால் | இருபத்தொரு தலைமுறையளவும் | கரு மாணிக்கம் சுடர் | கருமாணிக்கம் போன்ற திருநிறத்தை யுடையவனே! |
| அரசுகளை கட்ட | அரசர்களை வேர்ப்பறியாகப் பறித்த | ஆய்ச்சியோம் என்றும் | இடைச்சிகளான நாங்கள் எக்காலும் |
| வென்றி நீள் மழுவா | ஜயசீலமான பெரிய மழுப் படையை யுடையவனே! | நின் தன்னால் நலிவே படுவோம் | உன்னால் ஹிம்ஸைப்படுகிறவர்களேயன்றி லாபப்படுகிறவர்களல்லோம். |
| முன் வியல் ஞாலம் படைத்தாய் | முன்பு விஸ்தீர்ணமான ஜகத்தைப் படைத்தவனே! | | |

* * * ப்ரணயரோஷமென்பது நெடும்போது பெருகிச்செல்லமாட்டாது; அப்படி நெடுகிச் செல்லுவது ரஸிகர்களுடைய படியுமன்று. ஊடலானது கூடலிலே மூட்டி யல்லது நிற்காதாகையினால் இனிக் கூடல் தலைகாட்டத் தொடங்கிவிட்டது. பிரானே! நீதான் வெற்றிகொண்டாய், நாங்கள் தோற்றோம் என்று முடிக்கிறார்கள். இங்கே நட்டு அவதாரிகை காண்மின்: — “ காலால் அழித்தது சிற்றிலையன்றே; இவர்கள் நெஞ்சில் மறத்தையேயிறே. அந்த மறம் போனவாறே மேல்நோக்கிப் பாதாதிகேசமாகப் பார்த்தார்கள்; தங்களை ஜயிக்கையாலுண்டான ஹர்ஷம் வடிவிலே தோற்றும் படி நின்றான்; அவ்வடிவில்பிறந்த வேறுபாட்டைச் சொல்லுகிறார்கள்.”

திருவபிஷேகமணிந்து நிற்பது ஜயஸூசகமாகையாலே தங்களை ஜயித்துவிட்டானென்பதைக் காட்டிக்கொண்டு நின்றிலங்குமுடியினாய் என்கிறார்கள். பிரானே! இதற்குமுன்னே நீ திருவபிஷேகமணிந்தது வெறும் தலைச்சுமையேகாண்; எமது மறத்தைப் போக்கி எங்களை வெற்றிகொண்ட இன்று அணிவதுதான் ஏற்றது என்று சொல்விக்காட்டுகிறபடி.

[இருபத்தோர்கால் இத்யாதி.] கொழுத்துத் திரிந்து கொடுமை இயற்றிவந்த க்ஷத்ரியவம்சங்கள் பலவற்றை நாசஞ்செய்வதற்காக நாராயணமூர்த்தி பரசுராமாவதாரம் செய்திருந்தனர். [ஜமதக்நி முனிவர்க்குக் குமாரனாய்த் தோன்றிக் கோடாலிப்படையை ஒரு ஆயுதமாகக் கொண்டிருந்தனர்.] ஒருநாள் கார்த்தவீர்யார்ஜுநனும் அவனது குமாரர்களும் ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்தகாலத்து, அங்கே அம்முனிவு

னது ஹோமதேநுவானது வேண்டின வஸ்துக்களையெல்லாம் யதேஷ்டமாக அளித்துக் கொண்டிருப்பதைக்கண்ட இவர்கள் அப்பசுவைக் கொள்ளைகொள்ள விரும்பி அதனைக் கவர்ந்து அம் முனிவனையும் கொன்றிட்டார்கள். அதனால் அப்பரசுராமன் அந்த கார்த்தவீர்யார்ஜுனனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனாலேயே க்ஷத்ரிய வம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது அழித்திட்டனன் என்பது வரலாறு. இதனை இங்கு எடுத்துரைத்ததானது—மிடுக்கரான ராஜாக்களை வென்றவுனக்கு அபலைகளான எங்களை வெல்லுகை பெரியபணியோ என்று குறிப்பிட்டபடி.

வியன் ஞாலமுன்படைத்தாய் என்றதும் ஸாபிப்ராயம்; ப்ரளயத்திலே உருமாய்ந்துகிடந்த பூமியை உண்டாக்கினாப்போலேயன்றோ ப்ரணய ரோஷத்தாலேயழிந்த எங்களை யுண்டாக்கினபடி என்கை. ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தாப்போலேயன்றோ விரஹப்ரளயங்கொண்ட வெங்களை யெடுத்தபடி என்றுமாம்.

பழைய புராணங்களைச் சொல்லுவானேன்? 'எங்களை * அடியோங்களடிக்குடில் வீடு பெற்றுய்ந்ததுகாண் * என்னும்படியாக ஸகுடும்பமாய் உஜ்ஜீவனப்படுத்துவதற்காகவேயன்றோ நீ ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவில் ஒருத்திமகனாய் ஒளித்து வளர்வது என்கிறார்கள் மூன்றாமடியால். உன்னைப்பிரிந்து நாங்கள் பட்டபாடு உனக்குத் தெரியாதுகாண் என்பது ஈற்றடியின் கருத்து. நாங்கள் பெண்பிறந்தது ஒருநாளும் சுகப்படுவதற்கன்று, எந்நாளும் துக்கப்படுவதற்கே யென்று நிகமனம் செய்திருக்கிற விதனால் இப்போது ஸம்ச்லேஷ ருசி தலைகாட்டினமை விளங்கும். உன்னோடு கூடுவது மறுபடியும் பிரிந்து துக்கப்படுவதற்கே யாதலால் அந்த துக்கத்தை ஸஹித்துக் கொண்டு இப்போது கூடுகிறோமென்றபடி. ... ... ... ... ... 10

ஆய்ச்சியாகிய அன்னையால் அன்றுவெண்ணெய்வார்த்தையுள் * சீற்றமுண்டழு
கூத்தஅப்பன் தன்னைக் குருகூர்ச்சடகோபன் *
ஏத்தியதமிழ்மாலைஆயிரத்துள் இவையுமோர்பத்திசையோடும் *
நாத்தன்னால்நவிலவுரைப்பார்க்கு இல்லைநல்குரவே. 11

| | | | |
|---|---|---|---|
| அன்று | பண்டொருகாலத்தில் | ஏத்திய | ஸ்தோத்ரரூபமாகச் செய்த |
| வெண்ணெய் வார்த்தையுள் | வெண்ணெய் களவு ஸம்பந்தமான ப்ரஸ்தாவம் வந்தவளவிலே | தமிழ் மாலை ஆயிரத்துள் | தமிழ்த்தொடையான ஆயிரம் பாசுரங்களில் |
| ஆய்ச்சி ஆகிய அன்னையால் | இடைக்குலத் துதித்த யசோதையாகிய தாயாலே | இவையும் ஓர் பத்து | இப்பத்துப் பாசுரங்களை |
| சீற்றமுண்டு | சீற்றங்கொண்டு | இசையொடும் | இசையோடு கூட |
| அழு கூத்தன் | அழுகையாகிற கூத்தைச் செய்தவனான | நா தன்னால் நவில உரைப்பார்க்கு | நாவினாலே செறியச் சொல்லுமவர்களுக்கு |
| அப்பன் தன்னை | ஸ்வாமியைக் குறித்து | நல்குரவு இல்லை | பகவதநுபவம் ஸித்தியாமையாகிற தாரித்ரியம் இல்லையாம். |
| குருகூர் சடகோபன் | ஆழ்வார் | | |

*** இப்பதிகம் கற்றார்க்குப் பலனுரைத்துத் தலைக்கட்டுகிறது. 'எங்கள் கோஷ்டியிலே நீ சேரவரவேண்டா' என்று சொல்லிக் கதவடைத்தபோது கண்ணனுக்கு உண்டான துக்கமானது *மத்துறுகடை வெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு உரலினோடிணைந்திருந்து ஏங்கினபடிக்கு ஒக்கும் என்று காட்டுதற்காக 'ஆய்ச்சியாகிய வன்னையாலன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டழுகூத்தவப்பன்தன்னை' என்று விசேஷித்தது. அன்று யசோதைப்பிராட்டி அழப்பண்ணினதும் அதிஸ்நேஹகார்யம்; இன்று காதலிகள் அழப்பண்ணினதும் அதிப்ரணய கார்யம் என்க.

வெண்ணெய் களவுகண்டதற்காகக் கட்டியடிக்க அழுதான் என்னுமல் வெண்ணெய் வார்த்தையுள் அழுதானென்று மூலமமைந்திருக்கிற ஸ்வாரஸ்யத்தை நோக்கி சட்டிலே அருளிச்செய்கிறபடி பாரீர் ;—"ஊரிலே வெண்ணெய்களவு போயிற்று என்றார்கள், அவ்வளவிலே நாமிறே இதுக்கிலக்கு என்று அழப்புக்கான். மடம் மெழுகுவார் ஆர் ? என்ன, அச்ரோத்ரியன் என்றார்கள் ; இப் பரப்பெல்லாம் என்னாலே மெழுகப்போமோ என்றான், அதுபோலே."

ஒரு பெரிய சத்திரத்தைக் கண்டவளவிலே இவ்வளவு பெரிய சத்திரத்தை யார் மெழுகுவது? என்று வார்த்தை யுண்டாயிற்று ; எவனொருவொரு விதவா புத்ரன் மெழுகுகிறான் என்று பொதுவிலே ஒருவன் சொன்னான். அந்தத் திரளிலே மெய்யாகவே ஒரு விதவாபுத்திரன் இருந்து அவன் காதிலே இந்த வார்த்தை விழுந்தது ; ஐயோ ! இவ்வளவு பரப்பு என்னாலே மெழுகப்போமோ ? என்று அவன் அழுதானாம். அதனாலே தன்னுடைய அவத்யத்தைத் தானே வெளியிட்டுக்கொண்டானாயிற்று. அதுபோலே வெண்ணெய் களவு ப்ரஸங்கமாத்ரத்தில் அழுதகண்ணனும் தன்னுடைய களவைத் தானே வெளியிட்டுக்கொண்டானென்கை.

குருகூர்ச்சடகோபனேத்திய என்ற விசேஷணம் ஆயிரத்துக்குமாகலாம், இப்பத்துக்கு மாகலாம். இப்பதிகம் ஊடிப்பேசினதே யன்றி ஏத்தியதன்றே என்று நினைக்க வேண்டா ; ஏத்துதலில் இதுவும் ஒரு ப்ரகாரபேதமேயென்க. பக்தியானது ப்ரணயமாகமாறி ப்ரணயத்தின் பரீவாஹரூபமாகவன்றோ இது நிகழ்ந்தது.

இப் பதிகத்தை உரைக்குமவர்கட்கு நல்குரவு இல்லை—தாரித்ரியமில்லை ; சோறு கூறைகளெல்லாம் ஸம்ருத்தியாகக் கிடைக்கு மென்கிறதன்று ; * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன் என்றிருக்கிற இவர் திருவாக்கினாலே 'நல்குரவு இல்லை' யென்றால் பகவதநுபவத்தில் குறைபாடு உண்டாகாது என்பதன்றோ பொருளாகக் கடவது. ... ... ... ... .... 11

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி - ஆறும்பத்து - மூன்றாந் திருவாய்மொழி.

## நல்குரவுஞ் செல்வும்.

---

**உபோத்ய**வதாரிகை :— *வைகல் பூங்கழிவாயில் தூதுவிட்டும் தாமதித்துவந்த எம்பெருமான் பக்கலிலே பராங்குசநாயகிக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்து 'எங்கள் கோஷ்டியிலே நீ வந்து புகவேண்டா' என்று தள்ளிக் கதவடைப்பதாய்ச் சென்றது கீழ் : அதுதான் ஊடல் என்பது. ஊடலுக்கு அடுத்தபடியாகக் கூடல் நேர்ந்தே திருமாதலால் அந்தக்கூடல் நேர்ந்தபடியும் ஒருவாறு கீழ்த்திருவாய்மொழியிலே * நின்றிலங்கு முடியினாய் * என்கிற பாசுரத்தினால் ஸூசிப்பிக்கப்பட்டதாயிற்று. 'எவ்விதத்திலும் இவனோடு கூடலாகாது' என்று மிக்க வுறுதியுடனிருந்த நம்மைக் கூடும்படியாக்கிக் கொண்ட இவனுடைய வலிமை என்னே ! என்று விஸ்மயப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் தன்னுடைய அகடித கடநா ஸாமர்த்தியத்தை நன்கு காட்டிக்கொடுத்து அத்தன்மையனான தான் திருவிண்ணகரிலே நித்யஸந்நிதி பண்ணியிருக்கிறபடியையும் காட்டிக்கொடுக்க, ஆழ்வார் அதுதன்னைப் பேசி இனியராகிறார் இத்திருவாய்மொழியில்.

நல்குரவும்செல்வும் நரகும்சுவர்க்கமுமாய் *
வெல்பகையும்நட்பும் விடமுமமுதமுமாய் *
பல்வகையும்பரந்தபெருமான் என்னையாள்வானை *
செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே.

| | | | |
|---|---|---|---|
| நல்குரவும் செல்வும் | தாரித்ரியமும் ஐச்வரியமுமாய் | பல் வகையும் பரந்த பெருமான் | பலவகையாக விரிந்த விபூதியை யுடையனும் |
| நரகும் சுவர்க்கமும் ஆய் | நரகமும் ஸ்வர்க்கமுமாய் | என்னை ஆள்வானை | என்னை அடிமைகொண்ட ஸர்வேச்வரனை |
| வெல் பகையும் நட்பும் | எதிரியை வெல்லுகின்ற பகையும் (அதற்கு எதிர்த்தட்டான) ஸ்நேஹமுமாய் | செல்வம் மல்கு குடி | செல்வம் நிரம்பிய ஸந்நிதியான |
| விடமும் அமுதமும் ஆய் | விஷமும் அமிருதமுமாய் (ஆக இப்படி) | திரு விண்ணகர் கண்டேன் | திருவிண்ணகரிலே காணப்பெற்றேன். |

* * * — ஒன்றோடொன்று சேராதவற்றை யெல்லாம் தன்பக்கலிலே சேரவிட்டுக்கொண்டிருக்கிற பெருமானைத் திருவிண்ணகரிலே காணாநின்றேனென்கிறார். நல்குரவு-ஏழைமை; அதற்கு எதிரானது ஐச்வரியம்; இவையிரண்டுமாயிருக்கையாவது — இவை யிரண்டையும் அவரவர்களுக்கு உண்டுபண்ணவல்லனாயிருக்கை. குசேல முனிவனை தரித்ரனாக்கினதும் தானே; செல்வனாக்கினதும் தானே; பின்னையும் தரித்ரனாக்கியதும் தானே.

நரகும் சுவர்க்கமுமாய் = துக்கமே வடிவெடுத்த நரகத்திலே தள்ளுவதும் தானே; சுகமே வடிவெடுத்த சுவர்க்கத்திலே நிறுவுவதும் தானே. வெல்பகையும் நட்பும் = த்வேஷத்தை விளைப்பதும்தானே, ஸ்நேஹத்தை விளைப்பதும் தானே. தன் பக்கலில் த்வேஷமுடையவர்களை ஸ்நேஹிகளாக்கிக்கொள்ளவும் வல்லன், ஸ்நேஹ முடையவர்களை த்வேஷிகளாக்கிக் கொள்ளவும் வல்லன் என்றுமாம். மஹாத்வேஷியாயிருந்த கண்டாகர்ணனை ஸ்நேஹியாக்கிக்கொண்டான்; மஹாஸ்நேஹியாயிருந்த மாலிகனை த்வேஷியாக்கிக்கொண்டான்; * சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய் * என்ற பெரியாழ்வார் திருமொழி காண்க. வெல்பகை = 'ஸமாதானத்தாலே மீளுமதன்றியிலே வென்றேவிடவேண்டும் பகை' என்பது ஈடு.

விடமும் அமுதமுமாய் = அரனுக்கு விஷமளித்தவனும் தானே, அமரர்க்கு அமுதமளித்தவனும் தானே. * அமரர்தமமுதே அசுரர்கள் நஞ்சே !* என்கிறபடியே சிலர்க்கு அமிருதமாயும் சிலர்க்கு விஷமாயுமிருப்பவன் என்றுமாம். ஆகவிப்படி பல்வகையும் பரந்த பெருமானென்று அவனுடைய விபூதி விஸ்தாரத்தைச் சொல்லிற்றாயிற்று. திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் * யாவராய் நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்று ஓராதார் கற்கின்றதெல்லாம் கடை * என்றார். * ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத் * என்றபடி எதையும் பகவத்விபூதியாகவே நினைப்பார்க்கு தாரித்ரியமென்று ஒரு தாழ்வும் ஐச்வரியமென்று ஒரு மேன்மையும், நரகமென்று ஒரு துக்கமும் சுவர்க்கமென்று ஒரு சுகமும் தோன்றாதபடி எல்லாம் ஒரு நிகராகவே தோற்றுமென்பது இதனால் அறிவிக்கப்பட்டதாகும்.

திருவிண்ணகர் = சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதுள் திருக்குடந்தை யருகிலுள்ள உப்பிலியப்பன் ஸந்நிதி. புராண ப்ரக்ரியையின்படி உப்பிலியப்பன் என்பர்; ஆழ்வாரருளிச் செயலின்படி ஒப்பிலியப்பன் என்னவேணும். * தன்னொப்பாரில்லப்பன் * என்று இப்பதிகத் தன்னிலேயே ஒன்பதாம் பாட்டிற் காண்க. * ஒருவரையும் நின்னொப்பாரொப்பிலா வென்னப்பா * என்பது திருமங்கையாழ்வார் பாசுரம். 1

கண்டவின்பம்துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய் *
தண்டமும்தண்மையும் தழலும்நிழலுமாய் *
கண்டுகோடற்கரிய பெருமான்என்னையாள்வானூர் *
தெண்டிரைப்புனல்சூழ் திருவிண்ணகர்நன்னகரே. 2

| | |
|---|---|
| கண்ட இன்பம் துன்பம் | உலகக்கண்ட ஸுகதுக்கங்களையும் |
| கலக்கங்களும் தேற்றமும் ஆய் | கலக்கமும் தெளிவுமாய் |
| தண்டமும் தண்மையும் | நிக்ரஹமும் அநுக்ரஹமுமாய் |
| தழலும் நிழலும் ஆய் | வெப்பமும் தட்பமுமாய் |
| கண்டுகொள்தற்கு அரிய பெருமான் | ஒருவரால் பரிச்சேதித்து அறியமுடியாத விபூதி விஸ்தாரத்தை யுடையவனும் |
| என்னை ஆள்வான் | என்னை அடிமைகொள்பவனுமான ஸர்வேச்வரனுடைய |
| ஊர் | திவ்யதேசம் எதுவென்றால்; |
| தெண் திரை புனல் சூழ் | தெளிந்து அலையெறிகின்ற தீர்த்தம் சூழ்ந்த |
| திருவிண்ணகர் நல் நகர் | திருவிண்ணகரென்கிற அழகிய நகரமாகும். |

* * * — * ஐங்கருவிகண்டவின்பம் * என்கிறபடியே செவி வாய் கண் மூக்கு உடலென்கிற ஐந்து உறுப்புக்களாலும் அநுபவிக்கப்படுகிற இன்பமும் அதற்கு எதிர்த்தட்டான துன்பமும் தானேயாயிருக்கை! வைஷயிக ஸுகாபாஸங்களையே சிலர் இன்பமாக நினைக்கும்படியும் அவற்றையே சிலர் துன்பமாக நினைக்கும்படியும் செய்யுமவனென்கை.

கலக்கங்களும் தேற்றமும் ஆய்—எத்தனை புத்தகங்கள் படித்தாலும் சிலர் தெளிவின்றிக்கே கலங்கியே கிடப்பர்கள்; சிலர் ஒன்றும் படித்திலரேயாகிலும் ஆசார்ய கடாக்ஷத்தாலே தெளிந்தே யிருப்பர்கள். பட்டர் கோஷ்டியிலேவந்த சதுச்சாஸ்த்ர வித்வானுடையவும் அறிவிலியான பரமைகாந்தியினுடையவும் இதிஹாஸத்தை நினைப்பது.

தண்டமும் தண்மையும் = நிக்ரஹமும் அநுக்ரஹமும் தானிட்ட வழக்கு. *கல்ப கோடி சதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே., * க்ஷிபாம்யஜஸ்ரமசுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு * என்று நிக்ரஹிக்கவும், * என்னடியாரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தாரென்பர் * என்று அநுக்ரஹிக்கவும் காணாநின்றோம்.

தழலும் நிழலுமாய் = சீதோஷ்ணங்களும் அவனிட்டவழக்கு. திருவிருத்தத்திலே * சேமம் செங்கோனருளே * என்கிற பாட்டும், * மல்லிகைகமழ் தென்றலீருமாலோ * என்கிற திருவாய்மொழியும் இங்கே நினைக்கத்தகும். கண்டுகோள்தற்கரிய பெருமான் — ஒருவகையாக நிஷ்கர்ஷித்து அறியமுடியாதவனென்கை. யுத்தகாண்டக் காப்புச் செய்யுள் கூறுகின்ற கம்பர் " ஒன்றேயென்னி னொன்றேயாம் பலவென்றுரைக்கிற்பலவேயாம்.........நமக்கிங்கென்னோ பிழைப்பம்மா " என்றது இங்கே நோக்கத்தக்கது. ... .... ... ... ... 2

நகரமும்நாடுகளும் ஞானமும்மூடமுமாய் *
நிகரில் சூழ்சுடராய் இருளாய் நிலனாய்விசும்பாய் *
சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
புகர்கொள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியமே. 3

| | |
|---|---|
| நகரமும் நாடுகளும் | ராஜதானிகளும் க்ராமங்களுமாய் |
| ஞானமும் மூடமும் ஆய், | ஜ்ஞானமும் அஜ்ஞானமுமாய் |
| நிகர் இல் சூழ் சுடர் ஆய் இருள் ஆய் | நிகரற்று எங்கும் பரம்பின ப்ரகாசமும் அந்தகாரமுமாய் |
| நிலன் ஆய் விசும்பு ஆய் | பூமியும் ஆகாசமுமாய்க் கொண்டு |
| சிகரம் மாடங்கள் சூழ் திரு விண்ணகர் சேர்ந்த பிரான் | சிகரங்களையுடைய மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரிலே பொருந்தி வர்த்திக்குமவனான எம்பெருமானுடைய |
| புகர் கொள் கீர்த்தி அல்லால் | ஒளி மிக்க திருக்குணமல்லது |
| யாவர்க்கும் புண்ணியம் இல்லை | யாவர்க்கும் உஜ்ஜீவநோபாயம் வேறொன்றுமில்லை, |

* * * [நகரமும் நாடுகளும்] பெரிய நகரங்களிலே சிறந்த போகங்களை அநுபவித்துக்கொண்டு பஞ்சேந்திரியங்களையும் த்ருப்திபண்ணித் திரிவார் சிலர்; க்ராமங்களிலே இரவும் பகலும் க்ருஷிகார்யங்களிலே பரந்து கஷ்டஜீவனமாய்த் திரிவார் சிலர்; இவை யிரண்டுபடியும் தானிட்ட வழக்கென்கிறது. ஞானமும் மூடமுமாய் = பதார்த்தங்களின் ஸ்வபாவங்களை உள்ளபடி க்ரஹிக்கும் யதார்த்த ஜ்ஞானமும் அவற்றை விபரீதமாக க்ரஹிக்கும் அயதார்த்த ஜ்ஞானமும் தானிட்ட வழக்கென்கிறது.

சுடராய் இருளாய் = பிரகாசமும் அந்தகாரமும் தானிட்ட வழக்கென்கிறது. நிலனாய் விசும்பாய் = உருவமுடைத்தாய்த் தோற்றும் பூமியும் உருவமற்றதான ஆகாசமுமாய். ஆக விப்படி விருத்த விபூதிகனான ஸர்வேச்வரன் திருவிண்ணகரிலே உறைகின்றான்; அவனுடைய குணாநுபவமல்லது நமக்கு வேறு உஜ்ஜீவநோபாயமில்லை யென்றதாயிற்று.

“திருவிண்ணகர்ச் சேர்ந்த பிரானுடைய நிரவதிக காருண்யமல்லது மற்று உஜ்ஜீவநோபாயமில்லையென்று தமக்கு உஜ்ஜீவநோபாயமான காருண்ய குணத்தை யநுபவிக்கிறார்” என்பது ஆறாயிரப்படி. கீர்த்தி என்கிற ஸாமாந்ய சப்தத்தை விசேஷத்திலேகொண்டு உரைத்தருளினபடி. எம்பெருமானுடைய திருக்குணம் பரமபதத்திலே விஷயமில்லாமையாலே மங்கிக்கிடந்து இங்கே நிறம்பெறுதலால் ‘புகர்கொள்’ என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. “விஷயநியமமாவது - குணபூர்த்தியுள்ள விடமே விஷயமாகை; பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே” என்ற ஸ்ரீ வசனபூஷண ஸூக்தி இங்கே அநுஸந்தேயம். ... ... ... ... 3

புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவென்றிவையாய் *
எண்ணமாய்மறப்பாய் உண்மையாய் இன்மையாய்அல்லனாய் *
திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
கண்ணனின்னருளே கண்டுகொள்மின்கள்கைதவமே. 4

| | | | |
|---|---|---|---|
| புண்ணியம் பாவம் | புண்ணிய பாபங்களையும் | திண்ணம் மாடங்கள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் | திடமான மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரிலே வர்த்திக்கும் ஸ்வாமியான |
| புணர்ச்சி பிரிவு என்ற இவை ஆய் | ஸம்ச்லேஷ விச்லேஷங்களையும் | கண்ணன் | கண்ணனுடைய |
| எண்ணம் ஆய் மறப்பு ஆய் | நினைப்பையும் மறப்பையும் | இன் அருளே | பரம போக்யமான க்ருபையே |
| உண்மை ஆய் இன்மை ஆய் | அஸ்தி நாஸ்தி சப்தவாச்யங்களையும் | கண்டு கொள்மின்கள் | கண்டுகொள்ளுங்கோள்; |
| அல்லன் ஆய் | எல்லாவற்றுக்கும் அந்தர்யாமியாயிருந்தும் அவற்றின் தோஷங்கள் தட்டாதவனுமாயிருந்துகொண்டு | கைதவமே | இது பொய்யோ? [பரமார்த்தம் என்றபடி.] |

* * * [புண்ணியம் பாவம்.] சுகத்திற்குச் சாதனமான புண்ணியமும் துக்கத்திற்குச் சாதனமான பாவமும் அவனிட்ட வழக்கு. * ஏஷஹ்யேவ ஸாது கர்மகாரயதி யமேப்யோலோகேப்ய உந்நிநீஷதி ஏஷ ஏவஅஸாது கர்ம காரயதி யமதோ நிநீஷதி * என்று உபநிஷத்து ஓதினபடியே புண்யபாபங்களைச் செய்விப்பவன் அவனே யென்க. புணர்ச்சி பிரிவு = அபிமதவிஷயங்களோடே கூடி வாழ்வது புண்யபலமென்றும், அவற்றைப் பிரிந்துவருந்துவது பாப பலமென்றும் சொல்லுவர்கள்; அந்த ஸம்ச்லேஷ விச்லேஷங்களும் இவனிட்டவழக்கு. எண்ணமாய் மறப்பாய் = ஸ்மரணமும் விஸ்மரணமும் இவனிட்ட வழக்கு. உண்மையாய் இன்மையாய் = உளதென்கிற சொல்லுக்கு விஷயமான உண்மையும், இலதென்கிற சொல்லுக்கு விஷயமான இல்லாமையும் இவனிட்ட வழக்கு. அல்லனாய் = புண்யம் பாபம் முதலியவற்றிற்குத் தான் நியாமகனாயிருந்துவைத்தும்

அவற்றுக்கு வசப்பட்டிராதவன் என்றவாறு. "ஸகல பதார்த்த அந்தர்யாமிதயா வ்யாப்தனுயிருந்துவைத்தே தத்கததோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனுய்" என்பது ஆறுயிரப்படி.

ஆக இவையெல்லாமாகித் திருவிண்ணகரிலே வர்த்திக்கும் பெருமானுடைய க்ருபையாலே ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாதனபூதங்களான கரணகளேபரம்முதலியன எல்லாம் படைக்கப்பட்டனவென்பது பரமார்த்தம் என்கிறது பின்னடிகளால். ஈடு :— "[இன்னருமோ.] புண்யபாபாதிகளாய்க்கொண்டு அவனுக்கு விபூதியாய்த் தோற்றுகிறவையெல்லாம் அவனுடைய க்ருபையாலே உண்டாயிற்று.

கைதவமே ஏகாரம் எதிர்மறையில்; கைதவமன்று என்றபடி. ஸத்யமான விஷயமென்கை. ஈடு :—"அன்றிக்கே, கைதவம் - க்ருதக மென்றபடியாய் பண்ணப்பட்டவையடங்கலும் அவனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே." 4

கைதவம்செம்மை கருமைவெளுமையுமாய் *
மெய்பொய்இளமைமுதுமை புதுமைபழமையுமாய் *
செய்ததிண்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகே. 5

| | | | |
|---|---|---|---|
| கைதவம் செம்மை கருமை வெளுமையும் ஆய் | சோரனும் நேர்மையுமாய் கறுப்பும் வெளுப்புமாய் | திருவிண்ணகர் சேர்ந்த பிரான் | திருவிண்ணகரிலே வர்த்திக்கிற ஸர்வேச்வரன் |
| மெய் பொய் | மெய்யும் பொய்யுமாய் | பெய்த காவு கண்டீர் | ஆக்கின சோலையன்றோ |
| இளமை முதுமை புதுமை பழமை யும் ஆய் | யௌவனமும் கிழத்தனமுமாய் நவீநத்வமும் ஜீர்ணத்வமுமாய்க்கொண்டு | பெரும் தேவு உடை மூ உலகு | ப்ரமன் முதலான உத்க்ருஷ்ட தேவதைகளை யுடைத்தான மூவுலகமும். |
| செய்த திண் மதிள் சூழ் | வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்ட திடமான மதிளாலே சூழப்பட்ட | | |

* * * — சிறியார் பெரியார் என்கிற வாசியின்றிக்கே அனைவர்க்கும் காவலோன் திருவிண்ணகரப்பனென்கிறார். 'பெருந்தேவுடை மூவுலகும் அவன் பெய்த காவு' என்றது ப்ரஹ்மா முதல் பிபீலிகையளவாகவுள்ள ஸமஸ்த ப்ராணிவர்க்கமும் அவனுடைய ரக்ஷ்யகோடி என்கை. கைதவமாவது வக்ரத்வம். செம்மையாவது ருஜுவாயிருத்தல். சிலரிடத்தில் கோணல் தவிர வேறுகிடையாது; சிலரிடத்தில் செம்மை தவிர வேறுகிடையாது; இவை யிரண்டும் அவனிட்ட வழக்கு. கைதவமும் செம்மையுமாகிற இரண்டும் எம்பெருமானிடத்திலேயே உண்டு என்றும் கொள்ளலாம். கண்ணன் அயல் வீட்டிலே புகுந்து வெண்ணெய்த்தாழியிலே கையிட்டவாறே "பாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதா : — வெண்ணெய்க் குடத்தில் ஏன் கையிட்டாய் ?" என்றால், "மாத: கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும் — அம்மா ! ஒரு கன்றுகுட்டி சிதறி ஓடிப்போயிற்று : அது இங்கே இருக்கிறதோவென்று தேடுவதற்காகக் கையிட்டேன்" என்றுரைப்பது போன்றவை கைதவம். பஞ்சவடியிலே சூர்ப்பணகைவந்து 'நீர் ஆர் ? ராக்ஷஸஸேவிதமான இந்த இடத்திற்கு நீர் வந்ததேன் ?' என்றபோது "ருஜுபுத்திதயா ஸர்வம் ஆக்யாதுமுபசக்ரமே." (இராமன் செம்மையான புத்தியையுடையவனுதலால் எல்லாம் உள்ளபடியே உரைக்கத் தொடங்கினன்) என்னும்படியாக அமைந்தது செம்மை.

கருமை வெளுமையுமாய் — கண்ணனுய்ப் பிறந்து கரியகோலத் திருவுருவமாய்க் காட்சி தருவன்; நம்பிமூத்தபிரானுய்ப் பிறந்து "முன்னம்பெற்ற வளைவண்ண நன்மாமேனி" என்னும்படி வெளுத்த திருக்கோலமாய் ஸேவை ஸாதிப்பவன். இங்கே 'முன்னலோர் வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடுமொடு விரைந்தோடப், பின்னைத்

தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவது" என்ற பெரியாழ்வார் திருமொழியை நினைப்பது.

மெய் பொய் = * ஸத்யேந லோகாந் ஜயதி*." என்னும்படியாக ஸத்யம் விறுபெறுதற்கு ஒரு அவதாரமும் "பொய்ந்நம்பி புள்ளுவன் கள்வம் பொதியறை" "பொய்யாவுன்னைப்புறம் பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்" என்னும்படி அஸத்யம் வீறுபெறுதற்கு ஒரு அவதாரமும். * பொய்யர்க்கே பொய்யனாகும் - மெய்யர்க்கே மெய்யனாகும் * என்றதுமுண்டே.

இளமை முதுமை = 'பேதைக்குழவி' என்னும்படியான இளம்பிராயமாயிருக்கச் செய்தேயும் 'எந்தை தந்தைதந்தை தந்தைதந்தைக்கும் முந்தை' என்னும்படியான புராண புருஷத்வத்திலும் குறையில்லையே.

புதுமை பழமையுமாய் = மிகப்பழைய அநுபவமாயிருக்கச்செய்தேயும் 'எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே' என்னும்படியாக அப்போதப்போது புதுமைக்கும் குறையில்லாதிருக்குமே. 5

மூவுலகங்களுமாய்அல்லனாய் உகப்பாய்முனிவாய் *
பூவில்வாழ்மகளாய்த் தௌவையாய்ப் புகழாய்ப்பழியாய் *
தேவர்மேவித்தொழும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
பாவியேன்மனத்தே உறைகின்றபரஞ்சுடரே. 6

| | | | |
|---|---|---|---|
| மூ உலகங்களும் ஆய் | (ஆக்குவதற்கும் அழிப்பதற்கும் நிலமான) மூன்று லோகங்களாயும் | புகழ் ஆய் பழி ஆய் | கீர்த்தியாயும் அபகீர்த்தியாயும் இருந்துகொண்டு |
| அல்லன் ஆய் | (அவ்வைவல்லாத) நித்திய விபூதியாயும் | தேவர் மேவி தொழும் திரு விண்ணகர் சேர்ந்த பிரான் | தேவர்கள் விரும்பித்தொழுமிடமான திருவிண்ணகரில் உறையும் பெருமான் |
| உகப்பு ஆய் முனிவு ஆய் | ராகத்வேஷங்களாயும் | | |
| பூவில் வாழ் மகள் ஆய் | ஸ்ரீமஹாலக்ஷ்மியாயும் | பாவியேன் மனத்தே | பாவியான என்னுடைய மனத்திலே |
| தௌவை ஆய் | மூதேவி யென்கிற அலக்ஷ்மியாயும் | உறைகின்ற பரம் சுடர் | நித்யவாஸம் பண்ணுகின்ற பரஞ்சோதியாவன். |

* * * — படைக்கப்படுதல், கருமங்களுக்கு வசப்பட்டிருத்தல், ஸத்வரஜஸ்தமோ குணமயமாயிருத்தல் என்கிற இவற்றாலே அவிலக்ஷணமாயிருக்கும் மூன்று லோகங்கள்; இத்தன்மைகளுக்கு எதிர்த்தட்டாய்ப் பரமவிலக்ஷணமாயிருக்கும் நித்ய விபூதி; இவையெல்லாம் இவனிட்ட வழக்கென்கிறது. உகப்பாய் முனிவாய் = ஒரு வஸ்துவை ஒருவர் உகந்திருப்பதும், அது தன்னையே மற்றொருவர் வெறுத்திருப்பது மாக உகப்பும் முனிவும் அவனிட்ட வழக்கு. ஒருவனுக்கே ஒன்றில் ஒருகால் உகப்பும் அவனுக்கே அதுதன்னிலேயே மற்றொருகால் வெறுப்புமாதலால் அவையு மிங்குக் கொள்ளலாம்.

பூவில்வாழ்மகளாய்த் தௌவையாய் = லக்ஷ்மீகடாக்ஷம் பெறுவானொருத்தன், மூதேவி பிடித்துத் திரிவானொருத்தன்; இவை யிரண்டும் அவனதீனம். * காட்டினான் தெய்வமெங்கும் நல்லதோரருள் தன்னாலே, காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும்வண்ணம், கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவாகனனும்நிற்கச், சேட்டை தம்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே * என்கிற திருமாலையின்படியே சிலர் திருமாலைத்தொழுது உய்வதும் சிலர் தேவதாந்தர பஜனம்பண்ணி அநர்த்தப்பட்டுப் போவதும் அவனிட்ட மாயை என்றவாறு.

புகழாய்ப் பழியாய் = * தோன்றில் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று * (குறள்) என்னும்படியான உலகம்நிறைந்த புகழொடு விளங்குதலும் பலவகைப்பட்ட அபகீர்த்திகளுக்குக் கொள்கலமாயிருத்தலும் அவனதினம். பக்தர்களால் புகழப்பெறுவதும் சிசுபாலாதிகளால், * கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ்சாதியுமாகப் பெற்றான் பற்றியுரலிடையாப்புமுண்டான் * என்றிப்புடைகளிலே பழிக்கப்பெறுவதுமான தன்மைகளைச் சொல்லிற்றாகவுமாம்.

ஆகவிப்படி விருத்த விபூதியுக்தனைக்கொண்டு திருவிண்ணகரிலே திகழும் பெருமான் அந்தத் திருவிண்ணகரைப்போலே என் மனத்தையும் ஆதரித்து இங்கே உறைந்து இத்தால் புகர்பெற்று நிற்பவன்கிடிகோள் என்கிறார். கீழ் * மின்னிடை மடவாரில் எம்பெருமானைக் கதவடைத்துத்தள்ளித் திரஸ்கரித்த பாவத்தை நினைத்துப் பாவியேன் என்கிறார். இங்கேஈடு :—“ நித்யஸூரிகள் தன்பக்கலிலே வந்து மேல்விழ அத்தைத் தள்ளித் தான் என்பக்கலிலே வந்து மேல்விழாநிற்கக்கிடீர் நான் அல்லேனென்றது.” 6

பரஞ்சுடருடம்பாய் அழுக்குப்பதித்தவுடம்பாய் *
கரந்தும்தோன்றியும்நின்றும் கைதவங்கள்செய்தும் * விண்ணோர்
சிரங்களால்வணங்கும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும்வன்சரணே. 7

| | | | |
|---|---|---|---|
| பரஞ்சுடர் உடம்பு ஆய் | அப்ராக்ருத விக்ரஹயுக்தனையும் | விண்ணோர் சிரங்களால் வணங்கும் திரு விண்ணகர் சேர்ந்த பிரான் | தேவர்கள் தலைவணங்கித் தொழுமிடமான திருவிண்ணகரிலே உறையும் பெருமானுடைய |
| அழுக்கு பதித்த உடம்பு ஆய் | ஹேய ஜகத்ரூப சரீரயுக்தனையும் | வரம் கொள் பாதம் அல்லால் | சிறப்புப்பொருந்திய திருவடிகள் தவிர |
| கரந்தும் தோன்றியும் நின்றும் | மறைந்தும் வெளிப்பட்டுமிருந்தும் | யாவர்க்கும் வன் சரண் இல்லை | யாவர்க்கும் வலிதான புகலிடம் வேறில்லை. |
| கைதவங்கள் செய்தும் | வஞ்சனைகளைச் செய்தும் | | |
| (இப்படிப்பட்ட தன்மைகள் திகழ) | | | |

* * * [பரஞ்சுடர்.] எம்பெருமானுக்கு இரண்டு வகையான சரீரங்களுண்டு ; அப்ராக்ருதமாய் சுத்தஸத்வமயமான அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹம் ஒன்று ; “ ஜகத் ஸர்வம் சரீரம் தே.” என்கிறபடியே ஸகல ஜகத்தும் அவனுக்கு சரீரமாகையாலே இந்த ஸமஸ்த ஹேயாஸ்பத சரீரம் மற்றொன்று.

கரந்தும் தோன்றியும் =* இராமடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும் * என்றும், * கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று * என்றும் (பிள்ளைலோகாசார்யர்) அருளிச்செய்கிறபடியே மறைந்திருப்பதும், * காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்திருப்பார்க்குக் காணலாம்படி ராமக்ருஷ்ணாதி அவதாரங்களைச் செய்வதும் விவக்ஷிதம். நின்றும் - நூறாண்டு பதினோராயிரமாண்டு நின்றும். கைதவங்கள் செய்தும் = பகலை இரவாக்கியும், ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்தும் செய்தவை. கைதவம் — வடசொல் ; க்ருத்ரிமம் என்றபடி. “ அவதரித்து நிற்கச்செய்தே தன்படிகள் சிசுபாலாதிகளுக்குத் தோற்றாதபடி பண்ணியும் ஆச்ரிதர்க்குத் தோற்றும்படிபண்ணியும் ” என்பது ஈடு. இப்படிப்பட்டவன், பிரமன் முதலான தேவர்கள் தலைபடைத்த ப்ரயோஜனம் பெற்றோம் என்று வணங்கும்படி திருவிண்ணகரிலே உறைகின்றான் ; அவனுடைய திருவடிகளல்லது புகலில்லை.

வரங்கொள் பாதம் = அவரவர்கள் தம்தமக்கு வேண்டிய வரங்களை இரந்து பெற்றுக்கொள்ளும்படியான திருவடிகள். வரம் என்கிற வடசொல் ச்ரேஷ்டம் என்கிற பொருளையுமுடைத்தாதலால் ‘ ச்ரேஷ்ட்த்தன்மையைக் கொண்டிருக்கிற’ என்னவுமாம்,

யாவர்க்கும் என்றவிடத்து "எத்தனையேனும்கிழாய்கிழாயர்க்கும்" என்பது ஈடு; கிழம். கிழமாயுள்ளவர்களுக்கும் - பெருப்பெருத்தவர்களுக்கும் என்றபடி.

வன்சரணே = "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள்விடாது, திண்கழலாயிருக்கும்" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீ ஸூக்தி அநுஸந்தேயம். ... ... 7

வன்சரண்சுரர்க்காய் அசுரர்க்குவெங்கூற்றமுமாய் *
தன்சரண்நிழற்கீழ் உலகம்வைத்தும்வையாதும் *
தென்சரண்திசைக்குத் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
என்சரண்என்கண்ணன் என்னையாளுடையென்னப்பனே. 8

| | | | |
|---|---|---|---|
| சுரர்க்கு வன் சரண் ஆய் | தேவர்களுக்குச் சிறந்த புகலிடமாய் | தென் திசைக்கு சரண் திரு விண்ணகர்சேர்ந்த பிரான் | தென்திசைக்குள்ளே புகலிடமான திருவிண்ணகரிலே தங்கியுள்ள பெருமான் |
| அசுரர்க்கு வெம் கூற்றமும் ஆய் | அஸுரர்களுக்கு வலிய மிருத்யுவாய் | என் சரண் | எனக்கு சரண்யன், |
| உலகம் தன் சரண் நிழல் கீழ் வைத்தும் வையாதும் | உலகத்தைத் தன் திருவடிச் சாயையிலே ஒதுக்கியும் ஒதுக்காமலும் (இருந்து கொண்டு) | என் கண்ணன் | எனக்கு விதேயன், |
| | | என்னை ஆளுடை என் அப்பன் | என்னை அடிமைகொண்ட மஹோபகாரகன். |

* * * [வன்சரண்.] தேவர்களுக்கு எந்த ஆபத்துவந்தாலும் ஓடிவந்து திருவடிகளிலே விழ * முப்பத்துமூவரமரர்க்கு முன் சென்று கப்பந்தவிர்க்கும் கலியே * என்கிறபடியே அவர்களுக்காகத் தன்னை அம்புக்கிலக்காக்கி அவர்களைக் காப்பாற்றும் வலிய ரக்ஷகன்; இப்படிப்பட்டவன் அஸுரராக்ஷஸ கோஷ்டியில் வந்தாலோ அவர்களுக்குக் கொடிய யமனுயிருப்பன். *தேவாநாம் தாநவாநாஞ் ச ஸாமாந்யம் அதிதைவதம்* என்றும் * ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய: * என்றும் ப்ரஸித்தனுயிருக்கிற எம்பெருமான் தேவர்களுக்கு வன்சரணும் அசுரர்களுக்கு வெங்கூற்றமாயும் இருந்தால் அவனுக்கு இது குறையாகாதோ? என்னில், ஆகாது. தேவர்களுக்கு நன்மை செய்யவேணும், அசுரர்களுக்குத் தீமைசெய்யவேணும் என்று எம்பெருமானுக்கு இங்ஙனே ஒரு ஆக்ரஹமில்லை; ஒருங்கே எல்லார்க்கும் நன்மை செய்யவேணுமென்பதே அவனுடைய திருவுள்ளம், எல்லாரும் உபயோகங்கொள்ளக் கல்லின ஏரியிலே கழுத்திலே கல்லைக்கட்டிக்கொண்டு விழுந்து சாவார் போலவும், விளக்கிலே விட்டில்கள் தாமேவந்து விழுந்து மடிந்து போமாபோலவும் எம்பெருமானிடத்திலும் அவரவர்களே வந்து விழுந்து மடிந்தால் இது இவனது குற்றமாகுமோ?

தன்சரண்நிழற்கீழ் உலகம்வைத்தும்வையாதும் = *கார்தம் பலவும் திரிந்துழன்றேற்கு அங்கோர்நிழலில்லை நீரில்லை உன்பாதநிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின்றிலேன் * (பெரியாழ்வார் திருமொழி.) என்று தன்திருவடிகளிலேவந்து சேர்வார்க்கு ஸகலதாபங்களும் தீரும்படி நிழல்கொடுத்தும், அக்நிஜ்வாலையை விழுங்கிவிடாய்கெட நினைக்குமாபோலவும் ஆடுகிற பாம்பின் நிழலிலே யொதுங்கி ஸுகிக்க நினைக்குமாபோலவும் விஷயாந்தரங்களின் சாயையிலே யொதுங்கி மகிழ நினைப்பார்க்குத் தாபத்தை வளர்த்தும் இப்படிப்பட்ட தன்மையை யுடையவன் தென் திசைக்குத் திலதமான திருவிண்ணகரிலே திகழாநின்றான், அவனே யெனக்கு ஸர்வாத்மநா புகல் என்றாராயிற்று. ... ... ... ... ... ... 8

என்னப்பன்எனக்காயிகுளாய் என்னைப்பெற்றவளாய் *
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பன்என்னப்பனுமாய் *
மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்த அப்பன் *
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாள்நிழலே. 9

| | | | |
|---|---|---|---|
| எனக்கு என் அப்பன் ஆய் இருள் ஆய் என்னை பெற்றவள் ஆய் | எனக்குத் தந்தையாயும் செவிலித் தாயாயும் பெற்ற தாயாயும் | மின்ன பொன் மதிள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த அப்பன் | ஒளிவிடும்படி பொன்மயமான மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே நிற்கும் ஸ்வாமியானவன் |
| பொன் அப்பன் மணி அப்பன் முத்து அப்பன் என் அப்பனும் ஆய் | பொன் மணி முத்து இவற்றின் தன்மைபோன்ற தன்மையை யுடையவனும் மஹோபகாரகனுமிருந்து கொண்டு | தன் ஒப்பார் இல் அப்பன் | தன்னோடொத்தவர் இல்லாத மஹான்; |
| | | தன தாள் நிழல் தந்தனன் | (எனக்குத்) தனது திருவடி நிழலைக் கொடுத்தருளினன். |

* * * [என்னப்பனெனக்காய்] * வாஸுதேவதருச்சாயா நாதிசீதா நகர்மதா, நரகாங்காரசமநீ ஸா கிமர்த்தம் ந ஸேவ்யதே. * என்றார்கள் மஹர்ஷிகள். எம்பெருமானெனற வ்ருக்ஷத்தின் நிழலானது மிகவும் அநுகூலமானது; நரகம் தவிர்ப்பது, அதுவே அடையத்தக்கது என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. அப்படிப்பட்ட நிழலைத் தாமாக அடையப்பார்க்கவேண்டாதே எம்பெருமான் தானே தனது நிர்ஹேதுக க்ருபையினால் [தன் திருவடிநிழலைத்] தமக்குக் கொடுத்தருளின மஹோபகாரத்தைப்பேசி மகிழ்கிறார். திருவடிநிழலைக் கொடுப்பதாவது திருவடிகளின் கீழேயிருந்து அத்தாணிச் சேவகஞ்செய்து ஆனந்திக்கும்படி செய்தருள்வதேயாம். * ப்ராப்தாநாம் பாதமூலம் ப்ரக்ருதிமதுரயா ச்சாயயா தாபஹ்ருத் வ: * என்கிற ஸுதர்சநசதக ஸூக்தியும் இங்கு நினைக்கத்தகும்.

உலகத்தில் பிதாவாயிருப்பவன் தாயாயிருக்க முடியாது; தாயாயிருப்பவள் தோழியாயிருக்க முடியாது; இப்படிப்பட்ட விருத்த தர்மங்களெல்லாம் எம்பெருமான் திறத்தே குடிகொண்டிருக்கின்றன வென்கிறார் முதலடியில்.

இருளாய் என்கிறவிடத்தில் இருபத்திநாலாயிரப்படி ஸ்ரீஸூக்தி;—"(இருளாய்) தோழியாய். இது தமிழர் நிர்வாஹம், நம்முடையவர்கள், செவிலித்தாய் என்று நிர்வஹிப்பர்கள்; தாய்க்குத் தோழியா யிருக்குமிறே செவிலித்தாய், அத்தைச் சொல்லுகிறது." என்று. ஈட்டு ஸ்ரீஸூக்தி — "(இருளாய்) இருளையென்று தோழிக்குப்பேராய் அத்தைக்குறைத்து இருளென்று கிடக்கிறது." என்று.

[பொன்னப்பன் இத்யாதி.] உலகத்தில் பொன்னால் ஒருவிதமான உபயோகம், முத்தால் மற்றொருவிதமான உபயோகம் என்றிப்படி அவ்வோ வஸ்துக்களின் தன்மைக்கு ஏற்ப உபயோக ப்ரகாரங்கள் வெவ்வேறுபட்டிருக்கும். அங்ஙனன்றிக்கே ஸகலவிதமான உபயோகங்களும் எம்பெருமானாலே உண்டென்கிறது இங்கு. * முத்தினை மணியை மணிமாணிக்கவித்தினை * முத்தே மணிமாணிக்கமே முளைக்கின்ற வித்தே * என்றார் திருமங்கையாழ்வாரும். மணி — ரத்நம்; பொன், முத்து என்கிற விசேஷ சப்தங்களிடையே யிருக்கின்ற இந்த ஸாமாந்ய சப்தமும் ஒரு விசேஷத்திலே பர்யவஸித்து நிற்கும்.

தன்னொப்பாரில்லப்பன் = இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திருநாமம் இது. 'ஒப்பிலியப்பன்' என்கிற திருநாமத்தையே 'தன்னொப்பாரில்லப்பன்' என்று அருளிச்செய்தபடி. திருவாய்மொழிக்கு முந்தியே இவ்வெம்பெருமானுக்கு ஒப்பிலியப்பனென்று திருநாமமிருந்ததா? அல்லது, திருவாய்மொழியில் இங்ஙனே அருளிச்செய்ததுகொண்டு ஒப்பிலியப்பனென்று பெருமாளுக்குத் திருநாமம் வழங்கிவந்தார்களா? என்று சிலர் விமர்சிப்பதுண்டு. இரண்டுபடியும் பொருந்தத்தக்கதே. ஸ்தலபுராணத்தின்படி உப்பிலியப்பன் என வழங்குவர். இத்தலத்தெம்பெருமான் பிரமசாரி வேடம்பூண்டு திருமணம்புரிவதற்குப் பெண் கேட்கப்போன விடத்தில் பெண்ணின் தாய்தந்தையர் "எமது பெண்ணுக்கு உப்புசேர்த்துத் தளிகைபண்ணுகிறவிதமே தெரியாதே, இவளை மணம்புரிந்து நீர் எங்ஙனம் இல்லறம் நிகழ்த்துவீர்?" என்ன; அப்

படியாகில் எனக்கு உப்பில்லாத தளிகையே பரம போக்யமாகும் என்று சொல்லி, அப்பெண்ணை மணம்புரிந்து வந்ததாகவும், அதனால் உப்பிலியப்பன் என்று திருநாமம் பெற்றதாகவும், அந்தப் புராண வரலாற்றை அடியொற்றியே இற்றைக்கும் இத்தலத்தில் உப்பில்லாத தளிகைகளே நிவேதனமாகின்றதென்பதாகவும் கூறுப. ... ... 9

நிழல்வெய்யில்சிறுமைபெருமை குறுமைநெடுமையுமாய் *
சுழல்வனநிற்பன மற்றுமாய்அவையல்லனுமாய் *
மழலைவாய்வண்டுவாழ் திருவிண்ணகர்மன்னுபிரான் *
கழல்களன்றி மற்றோர்களைகணிலம் காண்மின்களே. 10

| | | | |
|---|---|---|---|
| நிழல் வெய்யில் | நிழலாயும் வெய்யிலாயும் | மழலை வாய் வண்டு வாழ் திரு விண்ணகர் மன்னு பிரான் | மழலைப்பேச்சை யுடைய வண்டுகள் களித்து வர்த்திக்கிற திருவிண்ணகரிலே நித்ய வாஸம் பண்ணுகிற எம்பெருமானுடைய |
| சிறுமை பெருமை | அணுத்வமாயும் விபுத்வமாயும் | கழல்கள் அன்றி | திருவடிகள் தவிர |
| குறுமை நெடுமையும் ஆய் | ஹ்ரஸ்வத்வமாயும் தீர்க்கத்வமாயும் | மற்று ஓர் களை கண் இலம் | வேறொரு ரக்ஷகவஸ்துவை யுடையோமல்லோம்; |
| சுழல்வன நிற்பன மற்றும் ஆய் | ஜங்கமங்களாயும் ஸ்தாவரங்களாயும் மற்றுமுள்ள பதார்த்தங்களாயும் | காண்மின்கள் | இதை ஸத்யமென்று கொள்ளுங்கள். |
| அவை அல்லனும் ஆய் | அவற்றினுடைய ஸ்வபாவத்தையுடைய னல்லாதவனும் இருந்துகொண்டு | | |

* * * [நிழல் வெய்யில்.] "பாட்டுக்கு க்ரியையும் பத்துக்குக் கருத்தும்போலே நூற்றுக்கு உபதேசப்பத்து" என்கிற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியின்படி ஒவ்வொரு நூறுபாசுரங்களினுள்ளும் ஒவ்வொரு பதிகம் உபதேசபரமா யிருக்குமாதலால் இந்த ஆறும்பத்துக்கு இத் திருவாய்மொழியே உபதேசபரமாகக் கொள்ளத்தக்கது. இது உபதேச ரூபமென்பது மற்ற பாசுரங்களில் வ்யக்தமாகக் காணாமல் இப்பாசுரத்தில் வ்யக்தமாகக் காண்கிறது; "மற்றோர் களைகணிலம் காண்மின்களே" என்றது காண்க. பன்னீராயிரப்படியிலும் இப்பாட்டின் உரையவதாரிகையில் "உபதேசித்து முடிக்கிறார்" என்றருளிச்செய்திருப்பதுங் குறிக்கொள்க.

தாபசாந்தியைத் தருமதான நிழலும் தாபகரமான வெய்யிலும், சிறுமைக்கு எல்லையான அணுத்வமும் பெருமைக்கு எல்லையான மஹத்த்வமும், மத்யம பரிமாணங்களிலுண்டான ஹ்ரஸ்வத்வ தீர்க்கத்வங்களும், ஜங்கம ஸ்தாவரங்களான மற்றுமுள்ள பதார்த்தங்களுமாய், இப்படி ஸர்வ சரீரியாகாநிற்கச்செய்தே அவற்றினுடைய ஸ்வபாவத்தை உடையனல்லாதவனுமாய்க்கொண்டு, வண்டுகள் தென்னுதெனுவென்று முரலப்பெற்ற திருவிண்ணகரிலே உறைகின்ற பெருமானது திருவடிகளை யொழிய வேறொரு சரணமுடையோ மல்லோம் நாம்; இதை நீங்களும் நிரூபித்துக் கொள்ளுங்கோள் என்றாராயிற்று. .... .... ... (10)

காண்மின்களுலகீரென்று கண்முகப்பேநிமிர்ந்த *
தாளிணையன் தன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார் *
கோணையின்றிவிண்ணோர்க்கு என்றுமாவர்குரவர்களே. (11)

| | | | |
|---|---|---|---|
| உலகீர் காண்மின்கள் என்று | 'உலகத்திலுள்ளவர்களே! இந்த விநோதத்தைக் காணுங்கோள்' என்று (சொல்பவன் போன்று) | தாள் இணையன் தன்னை | உபய பாதங்களை யுடையவனான எம்பெருமான் விஷயமாக |
| கண் முகப்பே நிமிர்ந்த | கண்ணெதிரே ஓங்கி வளர்ந்த | குருகூர் சடகோபன் சொன்ன | நம்மாழ்வார் அருளிச்செய்த |

| | | | |
|---|---|---|---|
| ஆணை ஆயிரத்து | பகவதாஜ்ஞா ரூபமான ஆயிரத்தினுள்ளும் | விண்ணோர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| | | சோணை இன்றி | மிறுக்கு இல்லாமல் |
| திருவிண்ணகர் பத்தும் வல்லார் | திருவிண்ணகர் விஷயமான இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் | என்றும் குரவர் என் ஆவர் | எப்போதும் கௌரவிக்கத் தகுந்தவராவர்கள். |

* * * [காண்மீன்கள்.] இத் திருவாய்மொழியை அதிரிக்கவல்லவர்கள் நித்யஸூரிகளுக்கும் கௌரவிக்கத் தகுந்தவராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இப்பதிகமானது * காண்மின்களுலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்த தாளிணையன் தன்னைக் குறித்து அருளிச்செய்ததாகத் தகும்; ஏனெனில்: மாவலியை வடிவழகாலும் பேச்சில் இனிமையாலும் மயக்கினதுபோல இங்கும் ஊடலிலேநின்ற ஆழ்வாரை மயக்கித் தன் காரியத்தை ஸாதித்துக்கொண்டதனால்.

ஆணையாயிரம் = *ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா* என்று ஸம்ஸ்க்ருத வேதமானது எப்படி பகவதாஜ்ஞாரூபமோ அப்படியே இத் தமிழ்வேதமும் என்க.

விண்ணோர்க்கு என்றும் குரவர்களாவர் = இத்திருவாய்மொழியை ஓதுமவர்கள் நித்யஸூரிகளுக்குக் குரவர்களாகையாவது என்னென்னில்;—*பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ * என்னும்படியான இருள்தருமாஞாலத்தில் இருந்துகொண்டே இவர்கள் இப்படி பகவத்குணாநுபவம் பண்ணப்பெறுகின்றார்களே! இதுவன்றோ ஆச்சரியம்! நாம் *நலமந்தமில்லதோர் நாட்டிலே யிருந்துகொண்டு குணாநுபவம் பண்ணுவதில் என்ன விசேஷம்? நம்மிற்காட்டில் இவர்களேயன்றோ சீரியர்கள்! என்று கொண்டாடப்பெறுதலாம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"ஸம்ஸாரத்தேயிருந்துவைத்தே இப்படி ஒருவனுக்கு உண்டாவதே! என்று (நித்யஸூரிகள்) கொண்டாடியிருப்பர்கள்."

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

—:o:—

ஸ்ரீ:.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி - ஆரும்பத்து - நான்காந் திருவாய்மொழி.

## குரவையாய்ச்சியரோடு.

---

உரையவதாரிகை:— கீழ் ஐந்தாம்பத்தில் *பிறந்தவாறும் என்கிற திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சேஷ்டித விசேஷங்களைச் சிந்தித்து உருகி உள்குழைந்து அந்தோ! அநுபவிக்க முடியவில்லையே யென்று தளர்ந்து பேசினார்; அக்குறை தீர்கின்றது இத்திருவாய்மொழியில். எம்பெருமானுடைய பலபல சேஷ்டித விசேஷங்களை வாயாரச்சொல்லி நன்றாக அநுபவித்து அதனால் தமக்குண்டான பூரிப்பைப் பெருமிடறு செய்து வெளியிடுகின்றாராழ்வார் இத்திருவாய் மொழியில்.

இதில் ஒவ்வொரு பாசுரங்களிலும் முன்னடிகள் பகவானுடைய சேஷ்டித விசேஷங்களைப் பேசுவனவாகவும், பின்னடிகள் அந்த சேஷ்டிதாநுபவத்தினால் தமக்குண்டான களிப்பைக் கனக்கக் கூறுவனவாகவும் அமைந்திருக்கின்றன. * நீசனேன் நிறையொன்றுமிலேன் * என்று நைச்சியாநுஸந்தானத்தின் பரம காஷ்டையிலே நிற்கின்ற ஆழ்வார் இங்கு "எனக்கினியார் நிகர்நீணிலத்தே" என்றும், "எனக்கார் பிறர்நாயகரே" என்றும் "மாறுளதோவிம் மண்ணின்மிசையே" என்றும் இங்ஙனே ஆவலிப்

புடைமை தோற்றக் கூறுவது பரமஸாத்விகத்வத்திற்குக் குறையன்றோ என்று சங்கிக்க வேண்டா; குணநுபவத்தாலுண்டான ஆனந்தம் தலைமண்டைக் கொண்டு அதன் பரீவாஹரூபமாக இங்ஙனே பேசுவது ஸ்வப்ரயத்ந பூர்வகமன்று; குணநுபவம் பரவசமாக்கிப் பேசுவிக்கிறபடி. "நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகள்மீதே மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்னுமங்கற்ற ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமாநகருளானே" என்பனபோன்ற பாசுரங்கள் ஸாத்விகாஹங்கார ரீதியிலே அவதரித்தனவென்று கொள்க. உலகில் மதுபானம் பண்ணினார் தம்மையறியாமல் சொல்லுகிறபடியும் செய்கிறபடியும் காணாநின்றோம்; * எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே* என்ற பரமவிலக்ஷண மதுவைப் பானம்பண்ணினார்க்குச் சொல்லவேணுமோ?

இத்திருவாய்மொழியில் ஆழ்வார் க்ருஷ்ணாவதார மல்லது மற்றொன்று அறியாதபடி தந்நிஷ்டகப்ரவணரானார். * அகல்கொள்வையமளந்தமாயன் * என்றும் * மாணியாய் நிலங்கொண்ட மாயன்* என்றும் த்ரிவிக்ரமாவதார ப்ரஸ்தாவமும் இதில் இல்லையோ என்னில்; உண்டு; அந்த அவதார சேஷ்டிதமும் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களிலே ஐக்கியப்பட்டதென்றே அநுபவ ரஸிகர்களின் குறிக்கோள். ஆனதுபற்றியே யசோதைப் பிராட்டியும் "சிறியனென்று என்னிளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய், சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்" என்றதும், "வருகவருக வருகவிங்கே வாமனநம்பீ! வருகவிங்கே" என்றதும்.

அவதாரிகையில் ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—"இத் திருவாய் மொழியில் ஆழ்வார் ஸ்ரீ வால்மீகி பகவானோடொப்பர்; அவனும் ராமாவதார மல்லது போக்கியறியான், அவனுடைய ப்ரபந்தமும் அப்படியே. இவரும் க்ருஷ்ணாவதார மல்லது அறியார்; இத் திருவாய்மொழி க்ருஷ்ண வ்ருத்தாந்தமொழிய வேறொன்றைச் சொல்லாது. *பாவோ நாந்யத்ர கச்சதி* என்றுகொண்டு பரதசையுங்கூட வேண்டேனென்ற திருவடியைப்போலே யாயிற்று இவரும் க்ருஷ்ணாவதாரமொழிய வேறொன்று அறியாதபடி"... "* பிறந்தவாற்றில் இவர்க்குண்டான இழவெல்லாம் தீரும்படி ஸ்ரீ ப்ருந்தாவன வ்ருத்தாந்தத்தைக் காட்டிக்கொடுக்கக் கண்டு அது பூதகாலமாய்த் தோற்றுகையன்றிக்கே ஸமகாலம்போலே கிட்டிநின்று அநுபவிக்கிறார்." ... ... (*)

குரவையாய்ச்சியரோடுகோத்ததும் குன்றமொன்றேந்தியதும் *
உரவுநீர்ப்பொய்கைநாகம்காய்ந்ததும் உட்படமற்றும்பல *
அரவிற்பள்ளிப்பிரான்தன் மாயவினைகளையே அலற்றி*
இரவுநன்பகலும்தவிர்கிலம் என்னகுறைநமக்கே. 1

| | | | |
|---|---|---|---|
| ஆய்ச்சியரோடு | கோபிமார்களோடு | மற்றும் பல | மற்றும் பலவகைப்பட்டவையான |
| குரவை கோத்ததும் | ராஸக்ரீடை செய்ததென்ன | அரவில் பள்ளி பிரான் தன் மாயம் வினைகளையே அலற்றி | நாகபர்யங்கசயனனான எம்பெருமானது அத்புத சேஷ்டிதங்களையே வாயாரப்பேசி |
| குன்றம் ஒன்று ஏந்தியதும் | கோவர்த்தன மென்கிற மலையொன்றைக் குடையாக வெடுத்ததென்ன, | நல் இரவும் பகலும் தவிர்கிலம் | வாய்த்த இரவிலும் பகலிலும் ஓய்கின்றிலோம்; |
| உரவு நீர் பொய்கை | மூதிர்ந்த ஜலத்தையுடைத்தான யமுனைப் பொய்கையில் | நமக்கு என்ன குறை | இங்ஙனே இடைவீடின்றி அநுபவிக்கப்பெற்ற நமக்கு என்ன குறையுண்டு? |
| நாகம் காய்ந்ததும் | காளிய நாகத்தை முனிந்ததென்ன | | |
| உட்பட | ஆகிய இவை முதலாக | | |

* * * [குரவையாய்ச்சியரோடு.] ராஸக்ரீடை, கோவர்த்தநோத்தரணம், காளியமர்த்தனம் என்கிற மூன்று அபதானங்களை இதிற்பேசி இனியராகிறார். தமிழில் குரவைக்கூத்தென்பதே வடமொழியில் ராஸக்ரீடை எனப்படும்; *அங்கநாமங்கநாமந்

தரே மாதவ: மாதவம் மாதவஞ்சாந்தரேணாங்கநா* என்கிறபடியே ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகப் பல வடிவு படைத்து நின்று கைகோத்தாடல்.

இங்ஙனே முதன்முதலாகக் குரவைக் கூத்தைப்பற்றிப் பேசுவானேன்? என்று சங்கித்துக்கொண்டு நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்;—"* மின்னிடைமடவாரிலுண்டான தம்முடைய ப்ரணய ரோஷத்தைப் போக்கித் தம்மைச் சேரவிட்டுக்கொண்டபடி, திருக்குரவையில் பெண்களோடே கலந்து அவர்களை அநுபவிப்பித்தாப்போலே யிருக்கையாலே அது முன்னாகப் பேசுகிறார். தாம் அநுஸந்திக்கிறதே ஓரடைவாக இழிவது; அவன் அநுபவிப்பித்தபடியே பேசுகிறார். திருக்குரவையிற் பெண்களோடுண்டான கலவியையாயிற்று இவர்க்கு முதலிலே காட்டிக்கொடுத்தது. பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களெல்லாரோடுங் கலந்த ப்ரீதியுண்டாயிற்று இவரொருவரோடே கலந்த ப்ரீதி."

குன்றமொன்றேந்தியது=குரவைக்கூத்திலே ஸௌலப்ய ஸௌசீல்யங்களைக் காட்டினன்; பரத்வமுள்ளவிடத்தில் ஸௌலப்யமே பெருவிலை பெறுமாகையாலே அந்தப் பரத்வத்தைக் காட்டினது கோவர்த்தநோத்தரணத்தில். ஸம்வத்ஸரத்திற்கு ஒருமுறை இடையரெல்லாருங் கூடித் தனக்கிடுகிற மஹாபூஜையைக் கண்ணன் விலக்கி *அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கத் தானே அமுதுசெய்தானென்கிற சீற்றத்தினால் இந்திரன் ஏழுநாள் ஓயாமழை பெய்விக்க அப்போது *குன்றமொன்றெடுத்தேந்தி நின்று மாமழைகாத்தருளினன் கண்ணபெருமானென்று ப்ரஸித்தம்.

உரவுநீர்ப்பொய்கை நாகங்காய்ந்தது=யமுனையின் ஒருதுறையிலே யிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்னியினால் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படிசெய்த காளியனென்னுங் கொடிய ஐந்தலை நாகம் குடும்பத்தோடும் வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கிக்கொண்டிருந்தது: ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை யோட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத அவ்வழியே போகத்தொடங்க, மற்ற இடப்பிள்ளைகள் அழைத்து 'கண்ணா! அவ்வழி நோக்கவேண்டா, அவ்வழியிற்சென்றால் அனர்த்தம் விளையும்; காளிய நாகத்திற்கு நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன, அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அக் காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங்கொண்டு சென்று அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின் மேலேறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷை இட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளின வரலாறு காண்க.

அரவிற்பள்ளிப்பிரான்தன்=*ஏஷநாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம் * என்கிறபடியே திருப்பாற்கடலில் அரவிற்பள்ளி துயின்றவனாயிருந்து அப்பள்ளியைவிட்டு மதுரையிலே திருவவதாரஞ்செய்தருளின கண்ணபிரானுடைய என்றபடி. மாயவினைகள் - அற்புத சேஷ்டிதங்கள்.

"தவிர்கிலன் என்ன குறை வெனக்கே" "தவிர்கிலம் என்னகுறை நமக்கே" என்பன பாடபேதங்கள். ... ... ... 1

கேயத்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும் * கெண்டையொண்கண்
வாசப்பூங்குழல்பின்னைதோள்கள் மணந்ததும்மற்றும்பல *
மாயக்கோலப்பிரான்தன் செய்கைநினைந்துமனங்குழைந்து *
நேயத்தோடுகழிந்தபோது எனக்குஎவ்வுலகம்நிகரே. 2

| | |
|---|---|
| கேயம் தீம் குழல் ஊதிற்றும் | சிறந்த கானமாக மதுரமான வேய்ங்குழலை ஊதின தென்ன, |
| நிரை மேய்த்ததும் | பசுக்கூட்டங்களை மேய்த்த தென்ன, |
| கெண்டை ஒண் கண் வாசம் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் | கெண்டை மீன்போன்ற அழகிய கண்களையும் நறுமணம் மிக்க பூக்களணிந்த கூந்தலையுமுடைய நப்பின்னையின் தோள்களோடே அணையப் பெற்றதென்ன இவையும் |
| மற்றும் பல | மற்றும் பலவுமான |
| மாயம் கோலம் பிரான் தன் செய்கை | திவ்யமங்கள விக்ரஹசாலியான கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களை |
| நினைந்து | சிந்தனைசெய்து |
| மனம் குழைந்து | நெஞ்சு நீர்ப்பண்டமாகி |
| நேயத்தோடு எனக்கு கழிந்த போது | அன்போடு எனக்குக் கழிகின்ற காலத்தின் விஷயத்தில் |
| எவ்வுலகம் நிகர் | உபய விபூதியும் ஒவ்வாது. |

* * * [கேயத் தீங்குழல்.] கண்ணபிரானுடைய வேணுகானத்தின் சிறப்பு பெரியாழ்வார் திருமொழியில் * நாவலம் பெரிய தீவினில் வாழும் * என்கிற திருமொழியிலே பத்துப் பாசுரங்களினால் பரக்கப் பேசப்பட்டது. அவற்றின் பொருளையெல்லாம் சுருக்கி பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவ உத்தர சதகத்தில் ஒரு ச்லோகத்தினால் அருளிச் செய்தார்; [*சைலோக்ரீச ஜலாம்பபூவ] இத்யாதி. அதில் த்வம் தேஷு அந்யதமாம் பபூவித பவத்வேணுக்வணோந்மாதநே * என்கிற ஈற்றடி பரமரஸம். வேணுகானத்தைக்கேட்டு விகாரப்பட்டவர்களில் கண்ணபிரான் தானும் ஒருவனானான் என்கிறது.

கேயமென்கிற வடசொல் கேய மெனத் திரிந்தது. தீம் - இனிமை.

நிரைமேய்த்ததும்=பரமபதத்திலே நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் ஓலக்கம் கொடுத்துக்கொண்டு பராத்பரனாக விளங்கும் பெருமான் அவ்விருப்பிலே விருப்பற்றவனாய், பூலோகத்திலே வந்து பிறக்கவேணுமென்றும் அதிலும் *அறியாதார்க்கு ஆனாயனாகிப்போய்* என்கிறபடியே அறியாதார்க்குள்ளே அறிவு கேட்டுக்கு எல்லை நிலமான இடைச்சாதியிலே வந்து தோன்றவேணுமென்றும் திருவுள்ளம் பற்றி வந்து சேர்ந்து சாதியின் மெய்ப்பாட்டுக்காகத் தானே மாடுகளையும் கன்றுகளையும் மேய்த்த விது என்ன நீர்மை! என்று உருகுகிறபடி. *திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி செங்கனிவாயெங்களாயர் தேவே* என்றார் இவ்வாழ்வார் தாமே மேலே. இதற்கு இரண்டுபடியாக நிர்வாஹம்; (1) திவத்திலும் என்பதை ஐந்தாம் வேற்றுமையாகக் கொண்டு பரமபதத்திலிருப்பைக் காட்டிலும் பசுக்கூட்டங்களை மேய்ப்பது தன்னையே உகக்கின்றாய்; (2) ஏழாம் வேற்றுமையாகக் கொண்டு, பரமபதத்திலிருக்கச் செய்தேயும் பசுநிரை மேய்ப்பதையே உகக்கின்றாய்; (அதாவது) அவதார ஸமாப்தியாகித் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளியான பின்பும் அங்கும் பசுக்களை மேய்க்கிற வாஸனையே அநுவர்த்தித்து 'டியோ! டியோ!' என்றே வாய்வெருவிக் கொண்டிருக்கிறபடி.

பின்னை தோள்கள் மணந்தது=கும்பனென்னும் இடையர் தலைவனது மகளும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளக் கருதி, அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்து கொண்ட வரலாறு அறிக. *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்துவளர்ந்த கண்ணபிரானுக்கு இரண்டு குலத்திலும் இரண்டு திவ்ய மஹிஷிகள் ப்ரதானர்களாக வாய்த்தனர்; இடைக்குலத்திற்கு நப்பின்னைப் பிராட்டியும் யதுகுலத்திற்கு ருக்மிணிப் பிராட்டியும். இவ்வர்த்தத்தை கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் அழகாக அருளிச் செய்கிறபடி பாரீர்—*ஹே ஸுந்தரைகதரஜந்மநி க்ருஷ்ணபாவே த்வே மாதரௌ ச பிதரௌ ச குலே அபி த்வே, ஏகக்ஷணாத நுக்ருஹீதவத: பலம் தே நீளா குலோசிதஸத்ருசீ கில ருக்மிணீ ச,*

மாயக்கோலப்பிரான் = மாயா என்கிற வடசொல் மாயமெனத் திரிந்தது. மாயா—ஸங்கல்பஜ்ஞானம், ஆச்சரியம், க்ருத்ரிமம் எனப் பலபொருள்படும். கருமத்தாலன்றிக்கே தன்னுடைய ஸங்கல்பத்தாலே ஏற்றுக்கொண்ட திவ்யமங்கள விக்ரஹத்தையுடைய பெருமான் என்றபடி. அவனது திவ்ய சேஷ்டைகளைச் சிந்தனை செய்து நெஞ்சு நீர்ப்பண்டமாகி பக்திமயமாக எனக்குக் காலம் கழிவதுபோல மற்று ஆர்க்கேனுமுண்டோ? என்கிறார். இவ்விபூதியில் மாத்திரமன்று; அந்த விபூதியிலும் இல்லை என்கைக்காக 'எவ்வுலகம் நிகரே' என்கிறார். ஏன்? திருநாட்டிலுள்ளார்க்கு இடையறாத அநுபவமில்லையோ வென்னில்' இல்லை யென்பதில்லை; அங்குப் பரத்வகுணாநுபவம் செல்லுமே யல்லாது நீர்மைக்கு நிலமன்றே. ... ... ... 2

நிகரில்மல்லரைச்செற்றதும் நிரைமேய்த்ததும் நீள்நெடுங்கை *
சிகரமாகளிறட்டதும் இவைபோல்வனவும்பிறவும் *
புகர்கொள்சோதிப்பிரான்தன் செய்கைநினைந்து புலம்பி * என்றும்
நுகரவைகல்வைகப்பெற்றேன் எனக்கென்னினிநோவதுவே. 3

| | | | |
|---|---|---|---|
| நிகர் இல் மல்லரை செற்றதும் | (மிடுக்கில்) ஒப்பில்லாத மல்லர்களை முடித்ததென்ன | புகர் கொள் சோதி பிரான் தன் செய்கை | மிகவும் ஜ்வலிக்கின்ற ஒளியுருவனான கண்ணபிரானுடைய செயல்களை |
| நிரைமேய்த்ததும் | பசுக்களை மேய்த்ததென்ன | நினைந்து புலம்பி | நினைத்தும் வாய்விட்டுக் கதறியும் |
| நீள் நெடு கை | உயர்ந்த நெடிய துதிக்கையையுடைத்தாய் | என்றும் நுகர | நித்தியமும் அநுபவிக்கும்படியாக |
| சிகரம் மா | மலைச்சிகரம்போன்ற பெரிதான | வைகல் வைகப் பெற்றேன் | காலம் மிகவும் கிடைக்கும்படி பெற்றேன்; |
| களிறு | (கஞ்சனது) யானையை | இனி | இப்படியானபின்பு |
| அட்டதும் | கொன்றொழித்ததென்ன; | எனக்கு என் நோவது | எனக்கு க்லேசப்படவேண்டுவதுண்டோ? |
| | இவை போல்வனவும் பிறவும்—; | | |

* * * கண்ணபிரான் மல்லர்களைச் செற்றது இரண்டு பிரகரணங்களில். கம்ஸன் தன்னைக் கொல்லப்பிறந்த தேவகி புத்திரன் திருவாய்ப்பாடியில் ஒளித்து வளர்தலை யறிந்து கோவங்கொண்டு எவ்வகையினாலாவது கண்ணனைக் கொல்ல நிச்சயித்து அசுரவர்க்கங்கள் பலவற்றையும் பூதனை முதலிய வேஷங்களுடன் திருவாய்ப்பாடிக்குச் செல்ல ஏவியும் அந்த முயற்சிகளெல்லாம் பழுதுபட்டனவாக, பிறகு வில்விழா [தனுர்யாகம்] என்கிற வியாஜம் வைத்துக் கண்ணனையும் பலராமனையும் அழைத்து வரும்படி நியமிக்கப்பட்ட அக்ரூரனுடைய பிரார்த்தனைக்கிணங்க ஸ்ரீக்ருஷ்ணபலராமர்களிருவரும் புறப்பட்டு மதுரையிற் புகுந்து வீதிகளிற் பல லீலைகளைச் செய்து கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில் அவ்வரண்மனை வாயில் வழியில் மதயானையை முடித்து உள்ளே கம்ஸ ஸபையிற் செல்லுகையில் அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் என்னும் மல்லர்கள் வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர் செய்ய, அவர்களை மற்போரினாலேயே கொன்று வென்றிட்ட வரலாறு ஒன்று. (2) கண்ணபிரான் பாண்டவர்கட்குத் தூதனாய்த் தன்னிடம் வரப்போகிறானென்பதை யறிந்த துரியோதனன் எவ்வகையினாலேனும் க்ருஷ்ணனை முடித்துவிடுவதே கருமமென்று துணிந்து ரஹஸ்யமாகத் தனது ஸபா மண்டபத்தில் மிகப் பெரிய நிலவறை யொன்றைத் தோண்டுவித்து அதில் அநேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்க வைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலே மூடி அதன்மேலே சிறந்த ரத்நாஸன மொன்றை அமைத்து அவ்வாஸனத்தின் மீது கண்ணபிரானை வீற்றிருக்கச் சொல்ல, கண்ணன் அங்ஙனமே அதன்மேல் ஏறின மாத்திரத்திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆஸனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மல்லர்கள் எதிர்த்துவர, பெருமான்

மிகப் பெரிதாக விச்வரூபமெடுத்து எதிர்த்து அந்த மல்லர்களை மடிவித்தானென்ற வரலாறு மற்றொன்று. ஸ்ரீகாஞ்சீபுரியில் 'திருப்பாடகம்' என்று ப்ரஸித்தமான பாண்டவதூதர் ஸந்நிதியில் இவ்விதிஹாஸத்துக்குத் தகுதியாக மிகப்பெரிய திருக்கோலங்கொண்டு எழுந்தருளியிருக்கின்றமை அறியத்தக்கது. [பாடகம் = பாடு அகம்; பாடு - பெருமை; அதுதோன்ற எழுந்தருளியிருக்கும் தலம் என்க.]

நீள்நெடுங்கைச் சிகரமாகளிறட்டது = கம்ஸனது அரண்மனைவாயிற் புகும்போது மல்லவதத்திற்கு முன்னே செய்தது குவலயாபீட வதம். * வார்கடாவருவியானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி ஊர்கொள் திண்பாகனுயிர்செகுத்து * என்ற பாசுரம் நோக்குக.

புகர்கொள் சோதிப்பிரான் = மல்லர்களை மடித்து மதயானையை முடித்தபின்பு வடிவிற்புகர் எழுந்தபடி. அப்போதைய அழகிய நிலைமையை மதுரையிற் பெண்கள் அநுபவித்துப் பேசினார்கள்; *ஸக்ய:! பச்யத க்ருஷ்ணஸ்ய முகமத்யருணேக்ஷணம், கஜயுத்தக்ருதாயாஸ ஸ்வேதாம்புகணிகாசிதம். * என்று அவ்வூர்பெண்கள் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்ட வார்த்தை காணீர்.

என்றும் நுகர வைகல் வைகப்பெற்றேன் = இப்படிப்பட்ட சேஷ்டிதங்களை நாடோறும் புஜித்துக்கொண்டு காலம் கழியப்பெற்றேன்; (அல்லது) அநுபவிக்கைக்குப் போரும்படி காலமானது நெடுகப்பெற்றேன் என்னவுமாம். ... ... 3

நோவவாய்ச்சியுரலோடார்க்க இரங்கிற்றும் வஞ்சப்பெண்ணை *
சாவப்பாலுண்டதும் ஊர்சகடமிறச்சாடியதும் *
தேவக்கோலப்பிரான் தன் செய்கைநினைந்துமனங்குழைந்து *
மேவக்காலங்கள்கூடினேன் எனக்கென்னினிவேண்டுவதே. 4

| | | | |
|---|---|---|---|
| ஆய்ச்சி நோவ | யசோதைப்பிராட்டியானவள் திருமேனியில் நோவுண்டாகும்படி (அல்லது, பக்தர்களின் மனம் துடிக்கும்படி) | தேவக் கோலம் பிரான் தன் செய்கை | அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹனான கண்ணபிரானுடைய செயல்களை |
| உரலோடு ஆர்க்க இரங்கிற்றும் | உரலோடு சேர்த்துப் பிணைக்க (அதற்கு) ஏங்கியிருந்தபடியென்ன, | நினைந்து | அநுஸந்தித்து |
| வஞ்சம் பெண்ணை சாவ | வஞ்சனை செய்யவந்த பூதனை முடியும்படி | மனம் குழைந்து | நெஞ்சு நெகிழ்ந்து |
| பால் உண்டதும் | அவளது முலைப்பாலை உண்டதென்ன, | மேவு | பொருந்தும்படி |
| ஊர் சகடம் இற சாடியதும் | (அஸுராவேசத்தாலே) ஊர்ந்துவந்த சகடம் பொடிபடும்படி தகர்த்ததென்ன (ஆக இப்படிப் பட்ட) | காலங்கள் கூடினேன் | காலங்கள் பலிக்கப் பெற்றேன்; |
| | | எனக்கு | இங்ஙனே பாக்யம் பெற்ற எனக்கு |
| | | இனி வேண்டுவது என் | இனிப்பெறவேண்டுவதொன்றுண்டோ? |

* * * [நோவவாய்ச்சி.] இங்கே நம்பிள்ளை யீடு;—"ஜீயர் இப்பாட்டை இயலருளிச் செய்யப்புக்கால் நோவ என்றருளிச் செய்யுமழகு காணும். நோவவென்கிறார் காணும், ஆழ்வார் திருமேனியிலே கயிறு உறுத்தினாற்போலே"

யசோதைப்பிராட்டியானவள் கண்ணனை உரலோடே கட்டிவைக்க அப்போது ஏங்கியிருந்தபடியைச் சொல்லுகிறது. * அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும் * என்னும்படியான யசோதைப்பிராட்டியானவள் கண்ணபிரானுடைய திருமேனியிலே நோவு உண்டாகும்படி ஒருகாரியஞ் செய்ய ப்ரஸக்தியில்லையாயிருக்க, இங்கு நோவ என்றது - இச்செய்லை அநுஸந்திப்பவர்களின் உள்ளம் நோவ என்றபடி. ஆழ்வான்

அதிமாநுஷஸ்தவத்தில் *ப்ரேம்ணுத தாமபரிணுமஜுஷா பபந்த தாத்ருங் ந தே சரிதம் ஆர்யஜநாஸ ஸஹந்தே.* என்றருளிச்செய்தது இங்கு அநுஸந்தேயம்.

உரலோடார்க்க இரங்கிற்றும் = கண்ணனை உரலோடு கட்டுவதனுலே அவனுக்கு ஸந்தோஷமா ஸங்கடமா? என்பது ஒரு ஆராய்ச்சி. ஸந்தோஷமே தவிர ஸங்கடமில்லை யென்று ஆசாரியர்களின் நிர்வாஹம். பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் போது ஒரு ஸ்வாமிவந்து 'அடியேனுக்கு ஒருரு திருவிருத்தம் பொருளருளிச் செய்ய வேணும்' என்று ப்ரார்த்திக்க, 'நம்பெருமாளைப் பிரிந்த துயரத்தினுல் எனக்கொன்றும் சொல்லப்போகிறதில்லை, நஞ்சீயர் பக்கலிலே கேட்டுக்கொள்ளும்' என்று சொல்லி நஞ்சீயர்க்கு நியமிக்க, ஜீயரும் பொருளருளிச்செய்து வருகையில் (86) * அடைக்கலத் தோங்கு கமலத்து* என்ற பாசுரத்தில் "வெண்ணெய்க்கு அன்று ஆய்ச்சி வன்தாம்புகளால் புடைக்கலந்தானை" என்றவிடத்திலே 'புடைக்கஅலந்தானை' என்கிற பாடத்தின் படியே (தாம்புகளால் கட்டியடிக்க வருத்தமுற்றவனை என்று) நஞ்சீயர் பொருளுரைக்க, பட்டர் அதுகேட்டு, 'ஜீயா! அலந்தானை என்ற பாடத்திற் காட்டிலும் 'அலர்ந்தானை' என்ற பாடம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு மிகப்பொருந்தும் போலே இன்று தோன்றுகின்றது' என்றருளிச்செய்தாராம். (இதன் விவரணம்:—)

கண்ணபிரான் வெண்ணெய்களவு செய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினுல் கட்டி வருத்துகின்ருளென்று வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டுதுண்டாக அறுத்து வைத்திட்டு பின்பே களவுசெய்யப்புகுவான்: அவள் இவனை ஒரு கையிலே பிடித்துக்கொண்டு கயிறுதேட, அவை துண்டுதுண்டாக இருப்பதுகண்டு அவற்றை ஒன்ருெடொன்று முடிபோட்டு ஒரு கயிறு வடிவமாக்கிஅதுகொண்டு கண்ணபிரானைக் கட்டும்போது இவன் தன்னுடம்புக்கு எட்டம் போராதபடியான அக் கண்ணிநுண்சிறுத்தாம்பினுல் கட்ட முடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனுயினும் தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுதற்கென்றே பரத்துவநிலையைத் தவிர்ந்து மநுஷ்யஸஜாதீயனுக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டு அடியுண்டிருக்கை முதலான இவ்வகைகளால்தான் அக்குணங்களை விளங்கச் செய்துகொள்ள வேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கியமைத்துக்கொண்டு "கண்ணிநுண்சிறுத்தாம்பினுல் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்" என்னும்படியாவான்; இங்ஙனே நம்முடைய ஸௌலப்ய குணங்கள் விளங்கப்பெற்ருேமே! அவதார ப்ரயோஜனம் நன்கு நிறைவேறப் பெற்றதன்ருே என்று முகமலர்ச்சியடைந்திடுவன் என்பது ஆசாரியர்கள் கண்டறிந்த கருத்து. உண்மை இங்ஙனேயிருக்க "உரலோடார்க்க இரங்கிற்றும்" என்றது ஏன்? என்னில்; * மச்சொடு மாளிகையேறி மாதர்கள்தம்பிடம்புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவைகீறி நிச்சலுந் தீமைகள்செய்து திரிவதையே பேர்துபோக்காகக்கொண்ட தான் மேன்மேலும் துருதுருக்கையாய் ஓடித்திரிந்தலைந்து தீம்புகள் செய்வதற்கு அவகாசமில்லாதபடி சற்றுப்போது கட்டுண்டிருக்க வேண்டியதாயிற்றே! என்கிற ஸங்கடமே யல்லது வேறில்லை யென்க.

வஞ்சப்பெண்ணைச் சாவப்பாலுண்டது = கண்ணனைக் கொல்லுமாறு கம்ஸனுல் ஏவப்பட்ட அசுரவர்க்கங்களில் ஒருத்தியான பூதனை நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவை யெடுத்துத் தனது நஞ்சுதீற்றிய முலையைக்கொடுத்துக் கொல்லமுயல, பகவானுன குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி இறக்கும்படி செய்தமை யறிக.

ஊர்சகடமிறச்சாடியது = நந்தகோபர் திருமாளிகையிலே ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்

போயிருந்தகாலத்து, கம்ஸனுலேவப்பட்ட அஸுரனொருவன் அந்த வண்டியில்வந்து ஆவேசித்து மேல்விழுந்து கொல்லமுயன்றதை யறிந்த கண்ணன் பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி யுதைத்து அச்சகடத்தைச் சின்ன பின்னமாக்கினமை யறிக. ஊர்சகடம் — வினைத்தொகை: ஊர்கின்ற சகடமென்க. “மலைபோலோடுஞ் சகடத்தை” என்றார் திருமங்கையாழ்வார்.

இத்தகைய சேஷ்டிதங்களை அநுஸந்தித்து அகவாய் உடைகுலைப்பட்டு அநந்ய *ப்ரயோஜநனுய்க்கொண்டு காலம் போக்கப்பெற்றேன்; இதனால் நான் அவாப்த ஸமஸ்தகாமனுனேன் என்றாராயிற்று. ... ... ... ... ... 4

வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும் வீங்கிருள்வாய்
பூண்டு * அன்றுஅன்னைபுலம்பப்போய் அங்கோராய்க்குலம்புக்கதும் *
காண்டலின்றிவளர்ந்து கஞ்சனைத்துஞ்சவஞ்சம்செய்ததும் *
ஈண்டுநானலற்றப்பெற்றேன் எனகேன்னஇகலுளதே. 5

| | |
|---|---|
| தேவர் இரக்க | தேவதைகள் பிரார்த்திக்க |
| வேண்டி | திருவுள்ளமுவந்து |
| வந்து பிறந்ததும் | நிலவுலகத்தில் வந்து அவதரித்ததென்ன |
| அன்று | அப்போதே |
| அன்னை | பெற்றதாயான தேவகி |
| பூண்டு | (கஞ்சன்பக்கல் பயத்தினால்) எடுத்தணைத்துக் கொண்டு |
| புலம்ப | இங்கேயிருந்தால் என்ன அபாயம் விளையுமோ வென்று கதறி யழுத வளவிலே |
| வீங்கு இருள் வாய் | செறிந்த இருளிலே |
| அங்கு போய் | அவ்விடத்தினின்றும் புறப்பட்டுச் சென்று |
| ஓர் ஆய் குலம் புக்கதும் | இடைச்சேரியிலே பிரவேசித்ததென்ன, |
| காண்டல் இன்றி வளர்ந்து | விரோதிகளுக்குக் காணுதலில்லாதபடி மறைவாக வளர்ந்து |
| கஞ்சனை துஞ்ச வஞ்சம் செய்ததும் | கம்ஸன் முடியும்படியாக அவன் திறத்திலே வஞ்சனைசெய்ததென்ன ஆகிய இச்செயல்களை |
| ஈண்டு | இப்போது (அல்லது) இவ்விடத்தே |
| நான் அலற்ற பெற்றேன் | நான் வாய்விட்டு உத்கோஷிக்கப்பெற்றேன்; |
| எனக்கு என்ன இகல் உளது | இனி எனக்கு என்ன குறை யுண்டு. |

* * * [வேண்டித்தேவர்.] தேவர் இரக்கவந்து பிறந்தது, வேண்டிவந்து பிறந்தது என்று இரண்டாக யோஜித்துக்கொள்வது. தங்களுக்குப் பகைவரான அரக்கரசுரர்களைவந்து முடிக்க வேணுமென்று தேவர்கள் பிரார்த்திப்பவர்களாதலால் துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காக வந்து பிறந்தமை ‘தேவர் இரக்க’ என்பதனால் பெறப்படும். பரமபதத்தில் இருந்துகொண்டே ஸங்கல்பமாத்திரத்தினாலாவது திருவாழியாழ்வானையிட்டாவது துஷ்டர்களைத் தொலைத்திட முடியு மாதலால் அதற்காக பகவான் வந்து பிறக்கவேண்டிய அவசியமில்லை; தன் வடிவழகு, பேச்சினிமை முதலியவற்றைக்காட்டி ஸாதுக்களை வாழ்விக்கவேண்டியே வந்து பிறந்தனனாதலால் அவ்வர்த்தம் ‘வேண்டி’ என்பதனால் காட்டப்பட்டது. வேண்டி - தான் விரும்பி என்றபடி.

கீதையில் *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே.* என்பது எம்பெருமானுடைய திருமுகப்பாசுரம். சிஷ்டர்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களை சிக்ஷிப்பதற்கும் அறநெறியை நிலை நாட்டுவதற்கும் அடிக்கடி அவதாரங்கள் செய்து போருவேன் என்றருளிச்செய்து வைத்தான். இதில் பகவதவதாரத்திற்கு மூன்று பிரயோஜனங்கள் சொல்லப்பட்டுள்ளன; [சிஷ்ட பரிபாலனம், துஷ்ட நிக்ரஹம், தர்மஸ்தாபனம் என்பன.] இவை மூன்றும் உண்மையில் ஒரே பிரயோஜனமாகத் தலைக்கட்டக் கூடியதாம். எங்ஙனேயென்னில்; பரித்ராணாய

ஸாதூநாம் என்று முதலிலே சொல்லப்பட்ட சிஷ்டஜநரக்ஷணமாவது அவர்களின் விரோதிகளைப்போக்கி அவர்களுக்கு அபிமதமான தர்மஸ்தாபனத்தைச் செய்துவைப்பதேயாம். ஆகையாலே பரித்ராணாய ஸாதூநாம் என்றதற்கே மற்றவை யிரண்டும் விவரணரூபம் என்று கொள்ளத்தகும்.

இப்படிப்பட்ட சிஷ்டபரிபாலனம் செய்யவேண்டில், ஸங்கல்பமாத்ரத்தாலே ஸகலஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையெல்லாம் அவலீலையாக நடத்தவல்ல எம்பெருமான் கர்மவச்யரைப்போலே வந்து பிறக்கவேணுமோ? இருப்பிடத்திலிருந்து கொண்டே 'சிஷ்டர்கள் வாழ வேணும், துஷ்டர்கள் மாளவேணும்' என்று ஸத்யஸங்கல்பனான தான் ஸங்கல்பித்துவிட்டால் உத்தேச்யம் எளிதாக நிறைவேறிவிடுமன்றோ? * அஜாயமாநோ பஹுதா விஜாயதே * என்றும், * எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் * என்றும் சொல்லுகிறபடியே பலபல யோனிகளிலே வந்து பிறக்கவேண்டுவானேன்? என்று சங்கை தோன்றக்கூடியது. இதற்கு இவ்வாழ்வார்தாமே கீழே (3-1-9) * மழுங்காத வைந்நுதிய சக்கரநல்வலத்தையாய் தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்குஅளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே.* என்ற பாசுரத்தில் பரிஹார முணர்த்தியருளினர். அதாவது ஸங்கல்பமாத்திரத்தினால் எம்பெருமான் சிஷ்டபரிபாலனம் செய்யுமளவில் அடியார்கட்கும் திருப்திபிறவாது, எம்பெருமானுக்கும் த்ருப்தி பிறவாது. ஏனெனில், துஷ்டர்கள் மடியவேணும், தர்மமார்க்கம் தழைக்கவேணும் என்பது மாத்திரமே அடியார்களின் அபேக்ஷிதமன்று; * கூராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால்வாராய் * என்றும் * தாமரைநீள்வாசத்தடம்போல்வருவானே! ஒருநாள் காணவாராயே * என்றும் * உரையாய் ஒருமாற்றமெந்தாய்! * என்றும் கதறுகின்ற அடியார்களின் அபேக்ஷிதம் ஸங்கல்பத்தினால் தலைக்கட்டக்கூடியதோ? ஆண்களையும் பெண்ணுடையுடுத்தச் செய்யவல்ல வடிவழகைக்காண வாசைப்பட்டார்க்கு ஸங்கல்பம் என்னசெய்யக்கூடும்?* மீனமர்பொய்கை நாண் மலர் கொய்வான் வேட்கையினோடு சென்றிழிந்த கானமர்வேழமானது 'நாராயணா ஓ! மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரைநீக்காய்' என்று கதறினது - முதலையின் வாயிற்கோட்பட்ட இடரை நீக்கவேணுமென்றோ? அஃதன்று; * தொழுங்காதல்களிறு * என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி பாரீர். அந்த கஜேந்திராழ்வான் தானும் * நாஹம் கலேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்தகமலாந்யேவ பாதயோரர்பிதும் தவ. * என்றானென்று புராணப்ரஸித்தம். மிகவருந்திப் பறித்த இப்பூவை எம்பெருமானுடைய திருவடிகளில் ஸமர்ப்பிக்கப் பெறுகின்றிலோமே! என்ற இடரன்றோ கஜேந்திராழ்வானுக்கு உண்டாயது. இது ஸங்கல்பத்தினால் நீக்கக்கூடிய இடரன்றே.

இனி எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைப் பார்த்தாலும் நேரே யெழுந்தருளி முகங்காட்டி ரக்ஷித்தாலல்லது த்ருப்திபெறாத ஸ்வபாவமாயிராநின்றது. மிக்க பெருஞ்சபை நடுவே துச்சாஸநனால் பரிபவிக்கப்பட்ட த்ரௌபதி * கோவிந்த புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம் * என்று கூவினவுடனே புடவை சுரக்குமாறு அருள்செய்து அவளுடைய அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டி யிருக்கச்செய்தேயும் 'அந்தோ! முகங்காட்டி மகிழ்விக்கப்பெற்றிலோமே! அவளுக்கு நம்முடைய திருநாமம் காரியம் செய்ததேயன்றி நாம் நேரே வந்து நின்று ரக்ஷையாலே தடவிக்கொடுத்து உதவிசெய்யப் பெற்றிலோமே!' என்று திருவுள்ளம் புண்பட்டு தன்னடிச்சோதிக்கு எழுந்தருளும்போதும் * காதிஸ்வஸ்தமநா யயௌ * என்னும்படியாக இதுவொரு பெரிய மனக்குறையாகவே யிருந்ததன்றோ. ஆகவிப்படி ஆச்ரிதர்களின் த்ருப்திக்காகவும் தன்னுடைய த்ருப்திக்காகவும் அவதாரம் செய்யவேண்டுவது எம்பெருமானுக்கு அவசியமாயிற்று. இதில் பகவானுடைய ஸ்வாத்மத்ருப்தியே முக்கியமானது. அது தோன்றவே 'வேண்டி' என்று இங்கே மூர்த்தமாக அருளிச்செய்யப்பட்டதென்க.

'வீங்கிருள்வாய்' என்றது நடுநிலைத்தீபகமாய் முன்னும் அந்வயிக்கும், பின்னும் அந்வயிக்கும். வீங்கிருள்வாய்வந்து பிறந்ததும், (அல்லது) வீங்கிருள்வாய் ஆய்க்குலம் புக்கதும் என்றுமாகவுமாம். அன்று அன்னை பூண்டு புலம்ப = துராத்மாவான கம்ஸன் காணில் செய்வதென்? என்று ஸ்ரீ வஸுதேவரும் தேவகிப்பிராட்டியும் பயப்பட்டு அலற்ற அவர்களுடைய பயம் போம்படியாகத் திருவாய்ப்பாடியேற எழுந்தருளினபடியைச் சொல்லுகிறது. இங்கே இருபத்திநாலாயிரப்படி ஸ்ரீஸூக்தி ;—"பிறந்தவன்றே தேவகியார், முன்பே ஆறு பிள்ளைகளை இழக்கையாலும் புத்ரவாத்ஸல்யத்தாலும் கம்ஸ பயத்தாலும் திருவடிகளைக் கட்டிக்கொண்டு கதற."

காண்டல் இன்றி வளர்ந்து = கம்ஸனும் அவன் ஏவிவதற்காக நாடோறும் அனுப்பின அசுரவர்க்கமும் காணாதபடி வளர்ந்து என்கை. கஞ்சனைத் துஞ்ச வஞ்சம் செய்தது = கஞ்சன் ஒரு வஞ்சனையெண்ணி யிருந்தான்; (அதாவது) வில்விழா என்கிற வியாஜத்தினாலே வரவழைத்து யானையினாலும் மல்லர்களாலும் மடிவித்து 'ஐயோ! என் மருமகன் மாண்டுபோனானே! என்று கண்ணீர் பாயவிட வேணுமென்று எண்ணியிருந்தான்; அந்த வஞ்சக நினைவை அவனோடே போக்கினதாயிற்று. இப்படிப்பட்ட சரித்திரங்களெல்லாவற்றையும் இப்போது அலற்றப் பெற்றவெனக்கு இனியொரு துக்கமுண்டோ? இகல் - துக்கம், விரோதம், குறை. ... ... ... 5

இகல்கொள்புள்ளைப்பிளந்ததும் இமிலேறுகள் செற்றதுவும் *
உயர்கொள்சோலைக்குருந்தொசித்ததும் உட்படமற்றும்பல *
அகல்கொள்வையமளந்தமாயன் என்னப்பன் தன்மாயங்களே *
பகலிராப்பரவப்பெற்றேன் எனக்கென்னமனப்பரிப்பே. 6

| | | | |
|---|---|---|---|
| இமில் ஏறுகள் செற்றதுவும் | இமிலையுடைய எருதுகளை (நப்பின்னைக்காகக்) கொன்றதென்ன | உட்பட மற்றும் பல | இவை முதலாக மற்றும் பலவான |
| இகல்கொள் புள்ளை பிளந்ததும் | விரோதபுத்தியுடன் வந்த பகாசுரனை வாய்பிளந்து முடித்ததென்ன | அகல் கொள் வையம் அளந்த மாயன் என் அப்பன் தன் மாயங்களே | பூமிப்பரப்பை யெல்லாம் அளந்துகொண்ட மாயனான எம்பெருமானுடைய அற்புதச் செயல்களையே |
| உயர்கொள் சோலை குருந்து ஒசித்ததும் | உயர்ச்சியைக் கொண்ட சோலையிலுள்ள குருந்த மரத்தை முறித்ததென்ன | பகல் இரா பரவ பெற்றேன் | பகலும் இரவும் துதிக்கப் பெற்றேன்; |
| | | எனக்கு என்ன மனம் பரிப்பு | இனி எனக்கென்ன மனத்துயருளது? |

* * * [இகல்கொள்புள்ளை.] கம்ஸனால் ஏவப்பட்ட ஓர் அஸுரன் கொக்கின் உருவங்கொண்டு சென்று யமுனைக்கரையில் கண்ணபிரானை விழுங்கிவிட அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல எரிக்கவே, அவன் பொறுக்கமாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்த நினைக்கையில் கண்ணன் அவனது வாயலகுகளைத் தனது இரு கைகளினாலும் பற்றிக் கிழித்திட்டனன் என்ற வரலாறுகாண்க. இந்த வரலாற்றை யாதவாப்யுதய காவ்யத்தில் வருணிக்கின்ற வேதாந்தவாசிரியன் * ஸபகஷ் கைலாஸசிபஸ்ய கோபா: பகஸ்ய பக்ஷாக் அபிதோ பபந்து:, வகே ததங்யாநபி கோரவ்ருத்திக் க்ஷேப்தும் ப்ரவ்ருத்தா இவ கேதுமாலா: * என்றார்; அந்த பகாசுரன் வந்தது இறகு முளைத்த கைலாஸமலையே ஊர்ந்துவருவது போன்றிருந்ததாம்; அன்னவனைக் கண்ணன் முடித்தொழித்த பின்பு அப்புள்ளின் இறகுகளை இடைப்பிள்ளைகள் அங்குமெங்கும் கட்டிவைத்தார்களாம், இனி யாரேனும் கண்ணனுக்குத் தீங்கு செய்யவந்தால் அவர்களுக்கும் இதுவேகதி என்று காட்டுதற்காக என்கை.

இமிலேறுகள் செற்றது = வில்லை வளைத்தவர்களுக்கே ஸீதாபிராட்டியை விவாஹம் செய்து கொடுப்பது என்று கல்கம் வைத்திருந்ததுபோல, யாவர்க்கும் அடங்காத ஏழு

எருதுகளை வலியடக்கினவர்களுக்கே நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்வித்துக் கொடுப்பதென்று நிபந்தனை வைத்திருந்ததனால் கண்ணபிரான் அங்ஙனமே செய்து பின்னைதோள்புணர்ந்தானென்பது வரலாறு.

குருந்தொசித்தது = யமுனைக்கரையில் கண்ணன் மலர் கொய்தற்பொருட்டு விரும்பியேறுவதொரு பூத்த குருந்தமரமுண்டு; கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவன் அந்த மரத்தில் வந்து பிரவேசித்து கண்ணன் தன்மீது வந்து ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து அவனை வீழ்த்திக்கொல்லக் கருதி யிருந்தபோது மாயவனான கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன் வலிமை கொண்டு முறித்து அழித்தனனென்பது வரலாறு.

கண்ணபிரானுடைய சரித்திரங்களை மாத்திரமே அநுபவிப்பதாகக் கொண்ட இத் திருவாய்மொழியில் இப்பாசுரத்தில் * அகல்கொள் வையமளந்த மாயன் * என்றும், மேலே எட்டாம் பாட்டில் * மாணியாய்நிலங்கொண்டமாயன் * என்றும் வேறு அவதார சரித்திரத்தையுங் கூறினது குறையன்று; “இகல்கொள்புள்ளைப்பிளந்தது” “இமிலேறுகள்செற்றது” “குருந்தொசித்தது” என்றவைபோலே “அகல்கொள் வையமளந்தும்” என்று இதனையும் ஒரு சரித்திரமாகக்கூறி அநுபவித்தமை காட்டப்படவில்லையே; எம்பெருமானுக்கு விசேஷணமொன்று இட்டதத்தனையே. ... ... 6

மனப்பரிப்போடு அழுக்குமானிடசாதியில்தான்பிறந்து *
தனக்கு வேண்டுருக்கொண்டு தான்தனசிற்றத்தினைமுடிக்கும் *
புனத்துழாய்முடிமாலைமார்பன் என்னப்பன் தன்மாயங்களே *
நினைக்கும்நெஞ்சுடையேன் எனக்கினியார்நிகர்நீணிலத்தே. 7

| | |
|---|---|
| தான் | பரஞ்சோதிபுருஷனான தான் |
| அழுக்கு மானிட சாதியில் | ஹேயமான மநுஷ்ய ஜாதியிலே |
| மனப் பரிப்போடு பிறந்து | ஸம்ஸாரிகள் விஷயமாகத் திருவுள்ளத்தில் தளர்த்தியோடே வந்து பிறந்து |
| தனக்கு வேண்டு உரு கொண்டு | தனக்கு இஷ்டமான விக்ரஹங்களைப் பரிக்ரஹித்து |
| தான் தன சிற்றத்தினை முடிக்கும் | தன்னுடைய சீற்றத்தைத் தவிர்த்துக்கொள்ளுமவனான |
| புனம் துழாய் மாலை முடி மார்பன் என் அப்பன் தன் மாயங்களே | செவ்வித் துழாய் மாலையைத் திருமுடியிலும் திருமார்பிலுமுடையனான எம்பெருமானது ஆச்சரிய சேஷ்டிதங்களையே |
| நினைக்கும் நெஞ்சு உடையேன் எனக்கு | அநுஸந்திக்கும் நெஞ்சு படைத்த வெனக்கு |
| இனி நீள் நிலத்து நிகர் ஆர் | இனி இப் பெரு நிலத்தில் ஒப்பாவார் ஆர்? (ஆருமில்லை.) |

*** [மனப்பரிப்போடு] அரக்கரசுரர் போல்வாரான விரோதிகள் பக்தவர்க்கங்களை நலியுமது பொறுக்கமாட்டாமே அழுக்கு மானிடசாதியில் வந்து பிறந்து அவர்களை அழியச்செய்யும் சேஷ்டிதங்களை நினைக்கும் நெஞ்சுடைய எனக்கு இந்நிலத்தில் நிகராவார் யாருமில்லை யென்கிறார். கீழ்ப்பாசுரங்களிலும் மேற் பாசுரங்களிலும் சிலசில சேஷ்டிதங்களை விசேஷித்து எடுத்துரைத்து அநுபவிப்பதாக அருளிச்செய்யுமிவர் இப்பாட்டில் அங்ஙனம் ஒரு சரித்திரத்தை யெடுத்துரைக்கையன்றிக்கே ஸமுதாய ரூபேண அருளிச்செய்கிறார். இப்பாட்டில் “தான் தன சீற்றத்தினை முடிக்கும்” என்பது உயிரான வாசகம். தண்ணளியே வடிவெடுத்த எம்பெருமானுக்கும் சீற்றமுண்டோ வென்னில்; சௌர்ய வீர்ய பராக்ரமங்களென்கிற குணங்களையும் உடையவனாக ப்ரஸித்தி பெற்றிருக்கின்ற பகவானுக்கு எங்ஙனே சீற்றமில்லாமலிருக்கமுடியும்? சீற்றமுண்டானாலல்லது அக்குணங்கள் வீறுபெற வழியில்லையே. காருண்யமும் சீற்றமும் விஷயபேதத்தாலே வ்யவஸ்தைபெறும். பக்த விரோதிகள் திறத்திலே சீற்றமுண்டாகாமலிருக்க முடியுமோ? எம்பெருமான் தன் திறத்தில் எத்தனை அபராதங்கள் செய்வாருண்

டாகிலும் அவர்கள் மீது சிறிதும் சீற்றங்கொள்ளான் ; பக்தர்களிடத்திலே அபராதப் படுவார்மீது சீற்றமே வடிவெடுத்தவனாயிருப்பன்.

ஸ்ரீவசநபூஷணத்தில் "ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச்செய்வர்". என்றுள்ள ஸ்ரீஸூக்தி ப்ரஸித்தம். அங்கே மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி— "பாகவதாபசாரம் பண்ணினால் ஈச்வரன் அஸஹமானனாய் உசிததண்டம்பண்ணுமென்னுமத்தை ஆப்த வசநத்தாலே அருளிச்செய்கிறார் [ஈச்வரன்] என்று தொடங்கி. அதாவது, ஸங்கல்பமாத்ரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன், தன்னை அழியமாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநரூப அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் தொடக்கமான அவ்வோ பாகவத விஷயங்களில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று ஆப்ததமரான நஞ்சீயர் அருளிச்செய்வரென்கை."

இத்தால், எம்பெருமான் வந்து பிறந்தது முக்கியமாக ஆச்ரித விரோதிகளைத் தன் கையாலே தானே சித்ரவதம் பண்ணித் தனது சீற்றத்தை ஒருவாறு ஆற்றிக்கொள்ளவேணுமென்று கருதியே என்று தெளிவாகிறது. நஞ்சீயர் இங்ஙனே அருளிச்செய்ததற்கு மூலம் இப்பாசுரமே யென்னலாம். மனப்பரிப்போடு என்றது, பக்தர்கள் படும் கஷ்டங்களைப் பொறுத்திருக்க மாட்டாமையாகிற தயாளுத்வத்தினால் என்றபடி. அழுக்கு மானிடசாதியில் தான் பிறந்து என்ற விடத்து ஈடு ;— "காட்டாரை அழுக்குடம்பு கழிக்கும் தான் இவர் அழுக்கு மானிடசாதியிலே வந்து பிறந்தான்......பிறக்கைக்குக் கர்மம் பண்ணிவைத்தவருங்கூட அருவருக்கும் ஜன்மத்திலேயிவர் அகர்மவச்யனை தான் பிறந்தது ; இதுக்கடி காருண்யமிறே."

தனக்கு வேண்டுருக்கொண்டு = எந்த எந்த காரியத்திற்கு எந்த எந்த உருவம் கொள்ளவேணுமோ அத்தகுதியை நோக்கி மத்ஸ்ய கூர்ம வராஹ மநுஷ்யாதி யோநிகளிலே வடிவெடுக்கிறபடியைச் சொல்லுகிறது. *இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:* என்பர் மஹர்ஷிகளும். உலகத்தில் நம்போல்வார் பிறப்பதற்கு ஹேது கருமமாயிருக்கும் ; எம்பெருமானுடைய பிறப்புக்கு ஹேது அதுவன்று ; 'இப்படி அவதரிப்போம்' என்கிற ஸ்வேச்சையொழிய வேறு ஹேதுவில்லை. *ஸம்பவாமி ஆத்மமாயயா* என்று தானே அருளிச்செய்தான். இங்கு ஆத்மமாயயா என்றது ஆத்மேச்சயா என்றபடி. "மாயா வயுநம் ஜ்ஞாநம்" என்று வைதிக நிகண்டுவாகையாலே மாயா சப்தம் ஜ்ஞாநவாசியாய் இச்சாரூபமான ஞானத்தைச் சொல்லுகிறதென்று ஆசாரியர்கள் வியாக்கியானம் பண்ணியருளினார்கள்.

தான் தன சீற்றத்தினைமுடிக்கும் = இங்கே ஈடு :— "ஆச்ரிதவிரோதி போக்கினனாயிருக்கையன்றிக்கே தன் சினம் தீர்ந்தானாயிருக்கை. மாதாவானவள் ப்ரஜையை நலிந்தவர்களைத் தான் நலிந்து தன் சினம் தீருமாபோலே."

புனத்துழாய்முடிமாலைமார்பன் = இங்ஙனே ஆச்ரித விரோதிகளை முடித்துத் தன் சினம் தீர்ந்தபின்பே எம்பெருமானுக்குத் திருத்துழாய் மாலையும் நல்தரிக்குமாயிற்று. உள் வெதுப்போடேயிருக்குங்காலத்தில் புஷ்பசந்தநாதி போக்யவஸ்துக்களிலே நெஞ்சு செல்லமாட்டாதன்றோ. ... ... .... ... ... 7

நீணிலத்தொடுவான்வியப்ப நிறைபெரும்போர்கள்செய்து *
வாணனாயிரந்தோள்துணித்ததும் உட்படமற்றும்பல *
மாணியாய்நிலங்கொண்டமாயன் என்னப்பன்தன்மாயங்களே *
காணும்நெஞ்சுடையேன் எனக்கினியென்னகலக்கமுண்டே, 8

| | |
|---|---|
| நீள் நிலத்தொடு வான் வியப்ப | மண்ணோரும் விண்ணோரும் ஆச்சரியப்படும்படியாக |
| நீறை பெரும் போர்கள் செய்து | நிறைந்த மஹாயுத்தங்களைப் பண்ணி |
| வாணன் ஆயிரம் தோள் துணித் ததும் உட்பட மற்றும் பல | பாணாஸுரனுடைய ஆயிரந் தோள்களைத் துணித்தது முதலாக மற்றும் பல வான |
| மாணி ஆய் நிலம் கொண்ட மாயன் என் அப்பன் தன் மாயங்களே | பிரமசாரியாய்ப் பூமியை நீரேற்றுப்பெற்ற மாயனான எம்பெருமானது அற்புதச் செயல்களையே |
| காணும் நெஞ்சு உடையேன் எனக்கு | ஸாக்ஷாத் கரிக்கவல்ல நெஞ்சு படைத்த வெனக்கு |
| இனி என்ன கலக்கம் உண்டே | இனி ஒருவகையான கலக்கமு மில்லை. |

* * *—[நீணிலத்தொடு.] இப்பாட்டில் வாணனுயிரந் தோள்துணித்த சரித்திர மொன்றே அநுபவிக்கப்படுகிறது. பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள் ஒருநாள் ஒருபுருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக்கண்டாள். அதைத் தன் உயிர்த்தோழியான சித்திரலேகை யென்பவளிடம் தெரிவித்தாள். ஆனால் அவன் இன்னானென்று அறிந்திலள். அத்தோழியானவள் உலகத்திலுள்ள ஸுந்தர புருஷர்கள் யாவரையும் அறிந்திருப்பதோடு ஒவ்வொரு உருவத்தையும் அப்படியே எழுதிக்காட்டவும் வல்லமைபெற்றிருந்ததனால் அங்ஙனம் பல வுருவங்களையும் எழுதிக்காட்டி இவனா? இவனா? என்று உஷையைக் கேட்டுவருகையில், கடைசியாக அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டது. பின்பு உஷை 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் துவாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தப்புரத்திலேவிட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்துவந்தாள். இச்செய்தியைக் காவலாளராலறிந்த அவளது தந்தையான பாணன் தன் அநுமதியின்றிக்கே இப்படி நடந்துவிட்டதே என்கிற சீற்றத்தினால் தன் சேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப் போட்டிருந்தான். இப்படியிருக்கையில் த்வாரகையில் அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாரும கலங்கியிருந்தார்கள். பின்பு நாரதமுனிவனால் நடந்த வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் பெரியதிருவடியை நினைத்தருளினான். அவனும் உடனே வந்து நின்றான். கண்ணன் அக் கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூட பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும் போதே அப்பட்டணத்தின் ஸமீபத்தில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபிரானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி அதன் சக்தியினாலே அதனைத் துரத்தியாயிற்று. பின்பு சிவபிரானது அநுசரர்களாய் வாணனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து பாணாஸுரனோடு போர்செய்யத் தொடங்கியாயிற்று. அப்போது அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்பரம்மணியன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். அதனால் சிவபெருமான் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவிவிட்டுக்கொண்டு சோர்வடைந்திருந்தான். ஸுப்பரம்மணியனும் கணபதியும் ஹுங்காரங்களால் ஒறுத்து ஓட்டப்பட்டனர். பின்னர் அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான தனது சக்ராயுதத்தையெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து, அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில், பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக

மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டு த்வாரகைக்கு எழுந்தருளலாயிற்று என்ற வரலாறு உணர்க.

.... ... ... 8

கலக்கவேழ்கடலேழ்மலை உலகேழும்கழியக்கடாய் *
உலக்கத்தேர்கொடுசென்றமாயமும் உட்படமற்றும்பல *
வலக்கையாழிஇடக்கைச்சங்கம் இவையுடைமால்வண்ணனை *
மலக்குநாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின்மிசையே. 9

| | | | |
|---|---|---|---|
| ஏழ்கடல் ஏழ்மலை ஏழுலகம் கலக்க | ஏழு கடல்களும் ஏழு மலைகளும் ஏழுலகங்களுமெல்லாம் கலங்கும்படியாக | வலக்கை ஆழி இடக்கை சங்கம் இவை உடை மால் வண்ணனை | உபயஹஸ்தங்களிலும் திருவாழி திருச்சங்குகளையுடையனாய் நீலவண்ணனான எம்பெருமானை |
| கழிய கடாய் | அண்ட கடாஹத்துக்கு அப்பாலே போம்படியாக நடத்தி | மலக்கும் நா உடையேற்கு | ஸ்வாமினைப் படுத்திக்கொள்ளும்படியான நாவீறு படைத்த எனக்கு |
| தேர் கொடு | தேரைக்கொண்டு | இ மண்ணின் மிசை மாறு உளதோ | இவ்வுலகின்கண் எதிருண்டோ? |
| உலக்க சென்ற மாயமும் | முடியச்சென்ற ஆச்சரியமும் | | |
| உட்பட மற்றும் பல | இது முதலாக மற்றும் பல சேஷ்டிதங்களையும் (பேசி) | | |

* * * [கலக்கவேழ்கடல்] வைதிகன் பிள்ளைகளை மீட்டுக்கொடுத்ததென்பது கண்ணபிரானுடைய சரிதைகளில் ஒன்று. அதனை இப் பாட்டில் அநுபவிக்கிறார். ஒரு பிராமணனுக்கு முறையே பிறந்த மூன்று பிள்ளைகள் பிறந்த அப்பொழுதே பெற்றவளுங்கூட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்ன விடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே நான்காம் பிள்ளையை ஸ்த்ரீ ப்ரஸவிக்கப்போகிறவளவிலே அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒரு பிள்ளையையாயினும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருள வேண்டும்' என்று ப்ரார்த்தித்தான். அதற்குக் கண்ணபிரான் அப்படியே செய்கிறேனென்று அநுமதி செய்தபின்பு, ஒரு யாகத்திலே தீக்ஷிதனாயிருந்ததனாலே எழுந்தருளக்கூடாததுபற்றி அர்ஜுநன் 'நான் போய் ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, பிராம்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய் ப்ரஸவக்ருஹத்தைச் சுற்றும் காற்றுகூட ப்ரவேசிக்க வொண்ணாதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நின்றான். பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவுடனே காணவொண்ணாது போய்விட்டது. அதனால் மிக்க சோகமடைந்த பிராமணன் வந்து அர்ஜுநனை மறித்து, க்ஷத்ரியாதமா! உன்னாலேயன்றோ என்பிள்ளை போம்படியாயிற்று; க்ருஷ்ணன் எழுந்தருளிக் காப்பதை நீயன்றோ தடுத்தாய்' என்று நிந்தித்து அவனைக் கண்ணபிரானருகே இழுத்துக்கொண்டு வந்தான். கண்ணன் அதுகண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனைவிடு, உனக்குப் பிள்ளையை நான் கொண்டுவந்து தருகிறேன்' என்றருளிச்செய்து, பிராமணனையும் அர்ஜுநனையும் தன்னுடன்கொண்டு தேரிலேறி, அர்ஜுநனைத் தேர் செலுத்தச்சொல்லி, அத்தேருக்கும் இவர்களுக்கும் திவ்விய சக்தியைத் தனது ஸங்கல்பத்தாற் கற்பித்து, இவ் வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய், அங்கு ஓரிடத்திலே தேருடனே இவர்களை நிறுத்தி, தன்னிலமான தேஜோரூபமான பரமபதத்திலே தானே போய்ப்புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியம் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தரியத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்துவைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் அங்கு நின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங் குலையாமற் கொண்டுவந்து கொடுத்தருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது. இப்பாசுரத்தில் முதலடிக்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். கண்ணனது திருத்தேர் சென்ற காலத்தில் ஏழ்கடலும் ஏழ்மலையும் ஏழுலகங்களும் அதிர்ந்தபடியைச் சொன்னவாறு.

நம்மாழ்வார்க்குப் பராங்குசன் என்று திருநாமம். பரசமயத்தவர்களாகிற மதயானைகட்கு அங்குசம் போன்றிருந்ததுபற்றிப் பராங்குசனென்று திருநாமமாயிற்றென்று சொல்லுவதுண்டாகிலும், பரனான எம்பெருமானுக்கே அங்குசமா யிருந்தவர் என்கிற பொருளே சுவைமிக்கதாகும். இப் பாசுரத்தின் பின்னடிகளில் இது ஸ்பஷ்டமாகும். "வலக்கையாழி யிடக்கைச் சங்கமிவையுடைமால் வண்ணனை மலக்குநாவுடையேன்' என்று செருக்குமிகுத்துக் கூறுகின்ற ஆழ்வார் தமது பராங்குசத் திருநாமத்தை விவரித்தபடியேயாகலாம். 9

மண்மிசைப்பெரும்பாரம்நீங்க ஓர்பாரதமாபெரும்போர்
பண்ணி * மாயங்கள்செய்து சேனையைப்பாழ்படநூற்றிட்டுப்போய் *
விண்மிசைத்தனதாமமேபுக மேவியசோதிதன்தாள் *
நண்ணிநான்வணங்கப்பெற்றேன் எனக்காரெபிறர்நாயகரே. 10

| | | | |
|---|---|---|---|
| மண் மிசை பெரு பாரம் நீங்க | பூமியின்மேலிருந்த பெருஞ் சுமை தொலையும்படியாக | விண்மிசை தன தாமமே புக மேவிய | பரமாகாசத்திலே தன்னுடைய ஸ்தான விசேஷத்திலே சென்று பொருந்தின |
| ஓர் பாரதம் மா பெரு போர் பண்ணி | மஹாபாரத யுத்தத்தை யுண்டாக்கி | சோதி தன் தாள் | பரஞ்சோதிப் பெருமானுடைய திருவடிகளை |
| மாயங்கள் செய்து | ஆச்சரியச் செயல்களைச் செய்து | நான் நண்ணி வணங்கப்பெற்றேன் | நான் கிட்டி வணங்கப்பெற்றேன் ; |
| சேனையை பாழ் பட நூற்றிட்டு போய் | எல்லாச் சேனையும் பாழ்படும் படி ஸங்கல்பித்து முடித்து இவ்விடம் விட்டுப் புறப்பட்டு | எனக்கு பிறர் நாயகர் ஆர் | எனக்கு வேறு நியாமகர் ஆர் ? (ஆருமில்லை.) |

* * * [மண்மிசை] பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல வருத்தமற்றிருக்கும். ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்புமூட்டையைத் தாங்குவதுபோல மிகவருத்தமாம். ஆகவே த்வாபரயுகத்தில இப்பூமியின்கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அஸுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையை யடைந்து, அச்சபைநடுவில வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வசுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்த வேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிது காலம் ஆலோசித்து 'இது நம்மாலாகாது, ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர்மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்கவேணும்' எனக் கருதி அந்தப் பூமிதேவியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டு போய்ப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமனைத் தொழுது துதித்தனன். பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தைகொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி 'ஓ தேவர்களே! உங்கள் கருத்தை அறிந்துகொண்டேன், உங்கள் குறையைத் தீர்க்கிறேன், நீங்கள் போகலாம்' என்று சோதிவாய்திறந்தருளிச்செய்ய, அவர்கள் பரமானந்தத்துடன் விடைபெற்றுப்போக, அவர்கட்கு அபயமளித்தவண்ணமாகவே வந்து அவதரித்து, பாரதயுத்தத்திற்குத் துணைபுரிகிற வியாஜத்தாலே பூபாரங்களையெல்லாம தொலைத்திட்டுத் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளினவளவும் இப்பாட்டில் அநுஸந்திக்கப்பட்டதாயிற்று.

மாயங்கள் செய்து = (இங்கே ஈடு.) "பகலை இரவாக்குவது, ஆயுதமெடேன் என்று ஆயுதமெடுப்பது, எதிரியுடைய மர்மத்தைக் காட்டிக் கொடுப்பதானவை தொடக்கமானவற்றைச் செய்து,"

மூன்றாமடிக்குச் சார்பாக * க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந:, மோஹயித்வா ஜகத் ஸர்வம் கத: ஸ்வம் ஸ்தாந முத்தமம். * என்ற மஹாபாரத ச்லோகம் அநுஸந்திக்கத்தகும்.

* விண்மிசைத் தனதாமமே புக மேவியசோதி என்றவிடத்து ஈட்டில் ஓர் ஐதிஹ்யம் காட்டப்பட்டுள்ளது. அதாவது—நம்பெருமாள் ஸந்நிதியில் ஒரு ப்ரஹ்மோத்ஸவம் நடந்து முடிந்தவன்று ஆண்டானும் எம்பாரும் சந்தித்து 'அஹங்கார மமகார தூஷிதராயிருப்பார் பத்துக்கோடிபேர் நடுவே அதிஸுகுமாரமான திருமேனியைக் கொண்டு பத்து நாள் எழுந்தருளி அபாயமொன்றுமின்றியே உத்ஸவஸமாப்தியாகக் காணப்பெற்றோமே! என்று சொல்லி ஒருவரையொருவர் தெண்டனிட்டுத் தழுவிக்கொண்டார்களாம். அதை நஞ்சீயர் கண்டிருந்து வெளியிட்டருளினர். .... ... ... ... 10

நாயகன்முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகும் * தன்
வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம் *
கேசவனடியிணைமிசைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன *
தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர்துவளின்றியே. 11

| | | | |
|---|---|---|---|
| முழு ஏழ் உலகுக்கும் நாயகன் ஆய் | எல்லா வுலகங்களுக்கும்நிர்வாஹகனாகி | கேசவன் | எம்பெருமானுடைய |
| முழு ஏழ் உலகும் தன் வாயகம் புகவைத்து உமிழ்ந்து | அந்த ஸகலலோகங்களையும் (ப்ரளயம் கொள்ளாதபடி) தன் வாய்க்குள்ளே புகவிட்டுப் பிறகு வெளிப்படுத்தி | அடி இணை மிசை | உபயபாதங்கள் விஷயமாக |
| அவை ஆய் | அவை தானேயாய் | குருகூர் சடகோபன் சொன்ன | ஆழ்வார் அருளிச்செய்த |
| அவை அல்லனும் ஆம் | அவற்றின் படியையுடையனல்லாதவனுமான | தூய ஆயிரத்து இப் பத்தால் | பரிசுத்தமான ஆயிரத்துள்ளே இப்பதிகத்தினால் |
| | | துவள் இன்றி பத்தர் ஆவர் | அநந்யப்ரயோஜந பக்திமான்களாகப் பெறுவர்கள். |

* * * [நாயகன்.] கண்ணபிரானுடைய திவ்யசேஷ்டிதங்களைப் பேசின இத்திருவாய்மொழியைக் கற்பார், தம்மைப்போலே க்ருஷ்ண பக்தராவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இப்பாசுரத்திற்கு அவதாரிகை இட்டருளாநின்ற பிள்ளான் (ஆறாயிரப்படியில்) "ஈரிரண்டு திருவாய்மொழியாலும் சொன்ன அர்த்தத்தை நிகமிக்கிறது" என்றருளிச்செய்தார். அதனைப் பெரியவாச்சான்பிள்ளை இருபத்திநாலாயிரப்படியில் விசதீகரித்தருளினமை காண்க.

தூயவாயிரத்து=இங்கே "ராமாயணம் நாராயண கதை யென்று தொடங்கி கங்கா காங்கேய ஸம்பவாதி அஸத்கீர்த்தனம் பண்ணின எச்சில்வாய் சுத்திபண்ணாமல் ....." இத்யாதி ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தி அநுஸந்தேயம். (அதன் கருத்து ;—) வால்மீகி பகவான ராமகதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி, கங்கையின் உற்பத்தி ஸுப்ரஹ்மணியனுடைய உற்பத்தி, புஷ்பகவர்ணனம் முதலான கதைகளைப் பரக்கப் பேசினதால் அஸத்கீர்த்தனம் பண்ணி வாக்கில் அசுத்தி படைத்தான் ; வேதவ்யாஸபகவானும் * நாராயணகதாமிமாம் * என்று நாராயணன் கதையைச் சொல்வதாக விழிந்து, ஸம்பவபர்வத்திலே பீஷ்மர் முதலான பற்பலருடைய உற்பத்தி ப்ரகாரங்களை விரிவாகப் பேசுகையாலும், 'பூசல்பட்டோலை. [யுத்த புஸ்தகம்] என்னும்படி பாரதப்போர் வகைகளையே பரக்க நின்று வருணித்தபடியாலும அஸத்கீர்த்தனத்திலே மிகவும் பரந்து வாக்கை அசுத்தமாக்கிக்கொண்டு, பிறகு = *அஸத்கீர்த்தந காந்தார பரிவர்த்தநபாம்ஸுலாம், வாசம் சௌரிகதாலாபகங்கயைவ புநீமஹே* என்று, அப்படி அசுத்தமான வாக்கை பகவத்கதா கீர்த்தனமாகிற கங்கையினாலே சுத்தமாக்குகிறேனென்று தானே சொல்லி சுத்தி பண்ணினான். ஆகவிப்படி தொடங்கினபடிக்குச் சேராமே அஸத்கீர்த்தனத்தைப் பண்ணி வாக்கை அசுத்தமாக்கிப் பின்பு அதற்கு சுத்திபண்ண வேண்டாதபடி, ஆழ்வார் முதற்பிரபந்தமான திருவிருத்தத்தில * திருமாலவன்கவி * என்று திருமால் விஷயமான கவியென்று வாயோலையிட்டபடியே இதர விஷய ஸம்பந்தமுள்ள ஒரு சொல்லும் கூடு

கலசாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்து விஷயத்திற்குத் தகுதியான சொற்களாலே சொல்லப்பட்டதாய் ஸர்வேச்வரனுக்கு வாய்த்ததான இத்திருவாய்மொழியாயிரமான து-வேதங்களில் புருஷஸூக்தம்போலவும், தர்ம சாஸ்த்ரங்களில் மநுஸ்ம்ருதி போலவும் மஹாபாரதத்தில் கீதைபோலவும், புராணங்களில் ஸ்ரீவிஷ்ணுபுராணம் போலவும் திவ்யப்ரபந்தங்களுள் ஸாரமாயிருக்குமென்றபடி. ஆகவே, தூய என்றது பகவத்விஷய மொன்று தவிர வேறு ஒரு விஷயமும் ஊடு கலசாமைபற்றிய பரிசுத்தியைப் புஷ்கல மாகவுடைய என்றபடி.

துவளின்றியேபத்தராவர் = இங்கே ஈடு:—"துவளாவது குற்றம்; அதாவது அவதாராந்தரங்களிற் போகாதே க்ருஷ்ண வ்ருத்தாந்தத்தாலே கால்தாழ்வர்" என்பதாம். தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கம் பெரிய கோயிலல்லது வேறொரு திருப்பதி யறியாமே யிருந்ததுபோல க்ருஷ்ணாவதார மல்லது மற்றொன்றறியாத பரமைகாந்திகராவர் என்றதாயிற்று. 11

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

—:o:—

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி - ஆறும்பத்து - ஐந்தாந் திருவாய்மொழி.
## துவளில்மாமணிமாடம்.

உரையவதாரிகை:—ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய தன்மைகளை வருணிப்பதில் எவ்வளவு குதூஹலமோ அவ்வளவு குதூஹலம் தம்முடைய தன்மைகளை வருணிப்பதிலுமுண்டு. எம்பெருமானுக்கே மங்களாசாஸநம் பண்ணப்புகுந்த பெரியாழ்வார் *அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம்பல்லாண்டு* என்று தமக்கும் தாமே மங்களாசாஸநம் செய்துகொண்டார்; எம்பெருமானுடைய பெருமையைப் பாங்காக அநுபவிக்கவல்ல அடியார்கள் இல்லையாயின் எம்பெருமானிருந்து யாது பயன்? நிலா தென்றல் முதலானவை பரம போக்யமேயானாலும் அவை அநுபோக்தாக்களுக்கு உபயோகப்படாதவளவில் 'காட்டிலெறித்த நிலாப்போலே' என்னும்படி அவத்யம் பெறுகின்றனவன்றோ. அப்படியே, எம்பெருமானுடைய பெருமையும் அவனை நன்றாக அநுபவிக்கவல்லவர்களுடைய பெருமையிலே சொருகிநிற்கும். பாகவதர்களின் பெருமையைப் பேசுவதும் பகவானுடைய பெருமையைப் பேசுவதேயாகும். ஆனது பற்றியே * திருமாலவன்கவி * என்று பகவத்கீர்த்தனமாகக் கொண்ட திவ்யப்ரபந்தத்திலே *பயிலுஞ்சுடரொளி* *நெடுமாற்கடிமை* முதலான பதிகங்கள் பாகவத ப்ரபாவ கீர்த்தந பரங்களாகவும் அமைந்தன.

பாகவதர்களுள் ஆழ்வார் சிறந்தவரன்றோ. ஆத்ம ப்ரசம்ஸை [அதாவது தற்புகழ்ச்சி] அவத்யமானாலும் பகவத் விஷயத்திலுண்டான தமது ஈடுபாட்டைத் தாமே பேசிக்கொள்வது தகுதியேயாகும். இது அவத்யமன்று. ஆனால், எம்பெருமான் விஷயத்தில் நான் இப்படியிப்படி யீடுபட்டிருக்கிறேன்' என்று வ்யக்தமாகச் சொல்லிக் கொள்வதில் ஆழ்வார்க்குச் சிறிது ஸங்கோசமுண்டாயிற்றுப் போலும். எம்பெருமானும் தன்னுடைய பெருமையைத் தானே ஒரு பெரிய பிரபந்தமாக வெளியிட்டுக் கொள்ள வேணுமென்று ஆசைப்பட்டு, அப்படி தாமே நம் பெருமையைப் பேசிக் கொண்டால் அது சுவைமிக்கதாகாது என்று பார்த்து நம்மாழ்வார்மீது ஆவேசித்து அவர் வாக்காலே தானே தன் பெருமைகளைப் பேசிவிட்டுக் "குருகூர்ச்சடகோபன்

சொன்ன" என்று ஆழ்வார்மேலே ஆரோபணம் செய்தான் என்று சொல்லுவதொன்றுண்டு; இவ்விஷயத்தை ஆழ்வார் தாமே மேலே ஏழாம்பத்தில் *என்றைக்குமென்னை* என்கிற திருவாய்மொழியிலே நன்கு வெளியிடக் காண்கிறோம். அதுவேபோல இப்போது ஆழ்வார் தாமும் தம் பெருமையைத் தாமே வெளியிட்டுக்கொள்ளவேணுமென்று ஆசைப்பட்டு அது சுவையுடைத்தாவதற்காக அதை வேறொருவர் தலையில் ஏற்றப்பார்த்து தோழிமார் பாசுரமாக வைத்து இத் திருவாய்மொழியை அமைத்தருளுகின்றார்; ஆழ்வார் பகவத் விஷயத்திலீடுபட்டிருக்கும் பெருமையை வேறு சில பாகவதர்கள் எடுத்துக் கூறுவதாக உள்ளுறை பொருள் காண்க.

திருநகரியைச் சேர்ந்த நவ திருப்பதிகளுள் தொலைவில்லிமங்கலம் என்பது ஒரு ஆச்சரியமான திவ்யதேசம். இரட்டைத் திருப்பதி யென்றும் அது வழங்கப்பெறும். அத்தலத்தில் ஆழ்வார் தமக்கு உண்டான ப்ராவண்யாதிசயத்தைத் தோழிமார்கள் தாய்மார்க்கு உரைப்பதாக இத்திருவாய்மொழி அமைந்திருக்கிறது.

ஆழ்வார் பகவானை அநுபவிக்குந்திறத்தில் தாய்பாசுரம், தோழிபாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. இத் திருவாய்மொழியாயிரத்துள்ளும் மொத்தம் நூறு பதிகங்கள் உள்ளன. இவற்றுள் எழுபத்து மூன்று பதிகங்கள் தாமான தன்மையிற் பேசினவை. இருபத்தேழு பதிகங்கள் பெண்பாவனையிற் பேசினவை. அவற்றுள், மகள்பாவனையில் பேசின பதிகங்கள் பதினேழு; தாய்பாவனையிற் பேசின பதிகங்கள் ஏழு; தோழிபாவனையிற் பேசின பதிகங்கள் மூன்று = என்று விவேகித்துக் கொள்க. தோழிப்பதிகங்கள் மூன்றாவன — (1) *தீர்ப்பாரையாமினி. (2) *துவளில் (இத்திருவாய்மொழி). (3) *கருமாணிக்கமலைமேல்.

மகள்பாசுரம் தோழிபாசுரம் தாய்பாசுரம் என்ற மூன்றுவகையிலும் பதிகங்கள் அமையப்பெற்றது கீழ் நாலாம்பத்துப்போலே இந்த ஆறும்பத்து மாகும். இதில் *வைகல்பூங்கழிவாய் *மின்னிடைமடவார் *பொன்னுலகாளீரோ* என்ற மூன்று பதிகங்கள் மகள்பாசுரங்கள். *மாலுக்கு வையம் *உண்ணுஞ்சோறு* என்ற இரண்டு பதிகங்கள் தாய்பாசுரங்கள். இத்திருவாய்மொழிதான் தோழிபாசுரமாயிற்று.

தோழி சொல்வதுபோலவும் தாய் சொல்வதுபோலவும் மகள் சொல்வதுபோலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரங்கள் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே மேற்சொன்ன மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் * குருகூர்ச்சடகோபன்சொல் * என்று ஆழ்வார்பாசுரமாகவே தலைக்கட்டும்.

அவதாரிகையில் ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் ;—"இத்திருவாய்மொழிக்குக் கீழும் மேலுமெல்லாம் எம்பெருமானைக் கவிபாடினார். இத்திருவாய்மொழியில் தம்படி சொல்லுகிறார்......தமக்கு பகவத்விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசயத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். 'இத்திருவாய்மொழி ஆழ்வார் ப்ரக்ருதி சொல்லுகிறது' என்று நம் முதலிகளெல்லாரும் போர விரும்பியிருப்பார்கள்......தாமே வேணுமாகாதே தம்படி பேசும்போது."

... ... ... *

துவளில்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம்தொழு
மிவளை * நீரினியன்னைமீர் உமக்காசையில்லைவிடுமினோ *
தவளவொண்சங்குச்சக்கரமென்றும் தாமரைத்தடங்கணென்றும் *
குவளையொண்மலர்க்கண்கள்நீர்மல்க நின்றுநின்று குமுறுமே. 1

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| துவள் இல் மா மணி மாடம் ஓங்கு தொலைவில்லி மங்கலம் | குற்றமற்றுச் சிறந்த ரத்நங்களையுடைய மாடங்கள் விளங்கப்பெற்ற தொலைவில்லிமங்கலமென்கிற இரட்டைத்திருப்பதியை |
| தொழும் இவளை | தொழாநின்ற இப்பராங்குச நாயகியை |
| நீர் இனி விடுமின் | நீங்கள் இனி உபேக்ஷித்து விடுங்கள்; |
| உமக்கு ஆசை இல்லை | (இவள் திறத்து) நீங்கள் ஆசைவைக்க இடமில்லை. |
| | (இவளுடைய நிலைமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்;) |
| தவளம் ஒண் சங்கு சக்கரம் என்றும் | வெண்ணிறமாய் அழகிய சங்கையும் சக்கரத்தையும் சொல்லுகின்றவளாயும் |
| தாமரை தடம் கண் என்றும் | தாமரைபோன்ற விசாலமான திருக்கண்களைச் சொல்லுகின்றவளாயும் இருந்துகொண்டு |
| ஒண் குவளை மலர் கண்கள் நீர் மல்க | அழகிய குவளைப்பூப்போன்ற கண்கள் நீர் பெருக |
| நின்று நின்று குமிறும் | ஒன்றும் வாய்விட்டுச் சொல்ல மாட்டாமல் நின்று நின்று குமுறுகின்றாளிவள். |

*** [துவளில்மாமணிமாடம்.] ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் பிறந்தபோது சோதிடர்களை வரவழைத்து 'இவளுடைய அத்ருஷ்ட பாகங்கள் எப்படி யிருக்கிறது சொல்லுங்கோள்' என்று கேட்கையில், சோதிடர்கள் பார்த்து "இவளுடைய பாக்யம் மிக நன்றாயிருக்கிறது, ஒரு குறையுமில்லை; ஸார்வபௌமனாயிருப்பானொருவனைக் கைப்பிடிப்பாள்; ஆனால் வநவாஸம் அநுபவிக்கநேரும்" என்றார்களாம். அப்படியே இப்பராங்குசநாயகி பிறந்தபோதும் இவளது திருத்தாயார் முதலானார் சோதிடர்களை அழைத்து பாக்ய விசேஷங்கள் விசாரிக்கையில் "எல்லாம் நன்றாகவே யிருக்கிறது; இவள் உயர்வறவுயர்நலமுடையவனை அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வறமதிநலமருளப்பெறுவள்; உலகம் நிறைந்த புகழ்பெறுவள்; தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுவள்" என்று பலவும் சொல்லிவிட்டு, 'ஆனால் இவளுக்கு ஓர் அபம்ருத்யுவுண்டு; அது என்னென்னில்; இவளைத் தொலைவில்லிமங்கலத்திலே நீங்கள் கொண்டு சென்றீர்களாகில் இவளை இழக்க நேரும்; ஆகவே அங்குக்கொண்டுபோகாமலிருந்தீர்களாகில் இவளோடே கூடி நீங்கள் நெடுங்காலம் வாழலாம்; இந்த வொரு கண்டத்துக்குத் தப்பிப்பிழைப்பது கஷ்டமே; என்று சோதிடர்கள் சொல்லியிருந்தார்களாம். ஆகிலும் இவளைத் தொலைவில்லிமங்கலத்தில் கொண்டுபோகாதிருக்கும்படியான குடியன்றே. இவளைப் பெறுவோமானாலும் சரி, இழப்போமானாலும் சரி; அங்கு அழைத்துக்கொண்டுபோய் ஸேவை பண்ணிவைத்தே தீருவது என்றிருக்கும் குடியாகையாலே அப்படியே செய்து போரநேர்ந்தது. அதனால் விளைந்த அனர்த்தத்தைத் தோழி எடுத்துரைக்கின்றாள்.

நாமெல்லாரும் கோவில்களுக்குச் சென்றால் ஏதோ விநோதம் பார்க்கிறாப்போலே பெருமாளைப் பார்த்துவிட்டுக் குதியழியாமே திரும்பி வீடு வந்து சேருகிறோம்; இப்பராங்குசநாயகியும் இங்ஙனமேயாகக்கூடுமென்று நினைத்திருந்த தாய்மார்கள் தாங்கள் தொலைவில்லிமங்கலம் செல்லும்போது இவளையும் இடுப்பிலெடுத்துக்கொண்டு சென்றார்கள் போலும்; இவள் அங்குப் புக்கவாறே கோலமேனியையும் திவ்ய பூஷணங்களையும் திவ்யாயுதங்களையும் நீர்வள நிலவளங்களையுங் கண்டு மெய்மறந்து அவற்றையே வாய் வெருவத் தொடங்கினாள்; மீண்டும் தாய்மாரோடே உறவுசெய்துகொள்ளும்படியான நிலைமையும் இல்லையாயிற்று. அவஸாதம் அதிகரித்திட்டது. அந்நிலைமை கண்ட தாய்மார்கள் மிக வருந்தித் தோழிபக்கலிலே வந்து 'ஐயோ! இச்சிறுமியின் நிலைமை இப்படியாய்விட்டதே! இவளை மீட்கலாம் உபாயம் ஏதேனும் பார்த்துச் சொல்லலாகாதோ?' என்ன, அதற்குத் தோழியானவள் 'அந்தோ தண்ணீர் வழிந்தோடிச் சென்ற பின்பும் அணைகட்டக் கோலுவாருண்டோ? ஏற்கனவே இவளைத் தொலைவில்லிமங்கலம் கொண்டுபோகாமே யிருந்திருக்கவேணும். இவள் ப்ரக்ருதியை நீங்களறிந்து வைத்தும் நீங்களே படிகடந்து சென்று இவளுக்கு ப்ராவண்யாதிசயத்தை விளைத்திட்டு இப்போ

தாக மீட்க வழிதேடுகிறவிதனால் பயனுண்டோ? இனி இவள் பக்கல் நசையறுங்கோள்? [இவளை நிஷேதிக்கப்பாராதே நீங்களும் இவள்வழியே வர்த்திக்கப் பாருங்கோள்] என்று சொல்லுவதாயிருக்கின்றது.

எம்பெருமானிடத்தில் ஈடுபடுவதிற்காட்டிலும் அவனுகந்து வர்த்திக்கும் ஸந்நிதியிலும் அவ்விடத்து விமாந கோபுர ப்ராகார மண்டபாதிகளிலும் ஈடுபடுவதே பக்தர்களுக்கு உற்றதாதலால் ஆழ்வார் அங்ஙனே யீடுபட்டமையை முதலடி தெரிவிக்கின்றது. இந்தத் திருப்பதி என்னே! இதில் மாடங்கள் ஓங்கியிருக்குமழகு என்னே! மணிகள் பதித்திருக்கு மழகு என்னே! அம்மணிகள் துவளற்றுப் பரிசுத்தமாயிருக்கிற அழகு என்னே! என்று இப்படியெல்லாம் வாய்வெருவிக் கொண்டிருக்கின்றமை காட்டப்பட்டது.

இவளை நீர் இனி அன்னைமீர் உமக்கு ஆசையில்லை விடுமினோ = இவளுக்குண்டான இந்த ப்ராவண்யத்தைப் பரிஹரிக்கவேண்டில் முன்னமே பரிஹரித்திருக்கவேணும்; இவள் துலை வில்லிமங்கலத்தைக் கனவிலும் காணாதபடி முன்பே செய்திருக்கவேண்டும்; அது செய்யாதது மன்றிக்கே நீங்களே இவளைக் கொண்டுபோய் அகப்படுத்திவிட்டு இப்போது மீட்க வழிதேடினால் இது முடியுமதோன்றோ? 'இவளோடு நமக்கினி உறவில்லை' என்று விட்டு நசையற்று நிற்கவேணுமத்தனை யல்லது வேறுண்டோ?

பெற்ற தாய்மார்களைநோக்கி 'விடுமின்' என்றால் அவர்கள் விடுவார்களோ? பின்னையும் நிர்ப்பந்திக்கப் புகுந்தார்கள். அப்போது தோழி தலைமகளின் நிலைமையை எடுத்துரைத்து இங்ஙனே யிவளிருக்குமிருப்பை நீங்கள் கண்படைத்த ப்ரயோஜனம் பெறுமாறு பார்த்துக்கொண்டிருக்கவன்றோ தகுவது என்று சொல்லிக் காட்டுகின்றாள். போலும் பின்னடிகளால்.

தவள வொண்சங்கு சக்கரமென்றும் — இவள் சங்கு சக்கரங்களின் அழகைப்பற்றிப் பேசுகிறபடியைப் பாருங்கோள். [தவளச்சங்கு] சாமமான திருமேனிக்குப் பரபாகமாக வெளிய சங்கொன்று விளங்குகிற அழகு என்னே! என்கிறாள். தவளம்—தவல என்கிற வடசொல் விகாரம்; வெண்ணிறமுடைய தென்கை. இது சங்கின் இயற்கை நிறத்தைச் சொன்னதாகக் கொள்ளாமல் வேறு வகையாகவுங் கொள்ளலாம். அதாவது — * உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம் கண்படைகொள்ளில் கடல் வண்ணன் கைத்தலத்தே * என்கிறபடியே சங்கே! நீ இடைவிடின்றி பகவதநுபவம் செய்யாநிற்கச் செய்தேயும் அநுபவலேசமுமில்லாதான் போலே உடம்பு வெளுக்கப் பெற்றாயே!, உன்படியே இதுவானால் உன்றனை யநுபவத்தில் ஏகதேசமுமில்லாத என்படி எதுவாகவேணும்! என்கிறாளாகவுமாம்.

தாமரைத்தடங்கணென்றும் = *பெருங்கேழலார் தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார் * (திருவிருத்தம் 45) என்று தாமே கூறினபடியே என்னை இவ்வளவிலே கொண்டு நிறுத்தியது இத் திருக்கண்களல்லவோ? என்று கண்ணைப்பற்றிப் பேசாநின்றாள். குவளையொண்மலர்க்கண்கள் நீர்மல்க = * கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்பெரியவாயகண்கள் என்னைப் பேதைமை செய்தனவே * என்னும்படியான அத்திருக்கண்களின் நீர்மையை நினைத்தவாறே இவளுடைய கண்கள் நீர்மல்க நிற்குமதுக்கு மேற்படவுண்டோ? ப்ராக்ருதர்கள் லௌகிக பதார்த்தங்களின் லாபாலாபங்களிலே கண்ணீர் பெருகவிட்டுக் கிடவாநிற்க, இவள் பகவத்விஷயத்திலே கைவைத்து "உள்ளஞ்சோரவுகந்தெதிர்விம்மி உரோமகூபங்களாய்க் கண்ணநீர்கள் துள்ளஞ்சோரத் துயிலணைக்கொள்ளேன்" என்னும்படியான நிலைமைபெற்றிருக்க, *ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந், ஸதா பரகுணாவிஷ்ட: த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி:* என்கிறபடியே இவ்வழகிய நிலைமையைக் கண்ணாரக்கண்டு கொண்டு நின்று களிக்கவேண்டாவோ வென்பது உள்ளுறையும் கருத்து.

நின்று நின்று குமிறும் = நெஞ்சில் நினைவை வாய்விட்டுச் சொல்லமாட்டாத இன்னாப்பாலே உள்ளே குமுறுகின்றாள். குமிறும் என்று பதம்பிரிக்கையன்றிக்கே, [நின்று நின்று உகும் இறும்] என்று பிரித்து, உகும் — நீர்ப்பண்டமாகா நின்றாள்; இறும் — தளர்ந்து விழுகின்றாள், என்று சிலர் பொருள்கூறினார்களாம்; அது சுவையற்றதென்று மறுக்கப்பட்டது. இங்கே ஈடு: — "ராஜகோஷ்டியிலே 'உகும் இறும்' என்று சிலர் பொருள்சொல்ல, விக்ரமசிங்கனென்பானொருவன் 'அங்ஙனல்ல; கன்றைக் கடக்கக் கட்டிவைத்தால் முலைக்கண் கடுத்துப் பசு அலமந்துபடுமாபோலே உள்ளோடுகிற க்லேசம் வாய்விடமாட்டாதே நோவுபடுகிறவிவளுக்கு இது வார்த்தையோ? என்றான். பெருவெள்ளத்தில் சுழிக்குமாபோலே அகவாயிலுள்ளது வெளியிடமாட்டாதே உள்ளே நின்று சுழிக்கிறபடி." ... ... ... 1.

குமிறுமோசைவிழவொலித் தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
அமுதமென்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் *
திமிர்கொண்டாலொத்துநிற்கும் மற்றிவள்தேவதேவபிரானென்றே *
நிமியும்வாயொடுகண்கள்நீர்மல்க நெக்கொசிந்துகரையுமே. 2

| | |
|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே! |
| குமிறும் ஓசை விழவு ஒலி | ஆரவாரிக்கின்ற ஓசையையுடைய உத்ஸவ கோலாஹலங்களை யுடைத்தான |
| தொலைவில்லிமங்கலம் | இரட்டைத் திருப்பதியிலே |
| அமுதம் மென் மொழியாளை | அமுதம்போன்ற மதுரமான மெல்லிய வாய்மொழிகளை யுடையவளான இப்பெண் பிள்ளையை |
| நீர் கொண்டு புக்கு | நீங்கள் அழைத்துக்கொண்டு போய் |
| உமக்கு ஆசை இன்றி அகற்றினீர் | மறுபடியும் நீங்கள் இவளோடு உறவு பண்ணுகைக்கு ஆசையில்லாதபடி உற வறுத்துக் கொண்டீர்கள்; |
| | (அது எங்ஙனே தெரிகிறதென்னில்) |
| இவள் திமிர்கொண்டால் ஒத்து நிற்கும் | இப்பெண்பிள்ளையானவள் திமிர்கொண்டாற்போலே பேசாதே நிற்கின்றாள்; |
| மற்று | அதுவுமல்லாமல் |
| தேவதேவபிரான் என்றே | எம்பெருமானது திருநாமத்தைச் சொன்ன மாத்திரத்திலே |
| நிமியும் வாயொடு கண்கள் நீர் மல்க | நெளிந்த வாயோடுகூடி கண்கள் நீர்பெருகப்பெற்று |
| நெக்கு ஒசிந்து கரையும் | கட்டுக்குலைந்து தளர்ந்து உருகுகின்றாள். |

* * * [குமிறுமோசை] ஸாதாரணமாகத் தொலைவில்லித் திருப்பதியின் ஸந்நிவேசந்தானே ஆகர்ஷகமாயிருக்கும்; அது தன்னிலும் உத்ஸவகாலங்களில் சென்றாலோ "வேதவொலியும் விழாவொலியும்" என்றாற்போலே பலவகையான த்வனிகள் செவிபடுதமாகக் கேட்கப்பெற்று அங்கு நின்றும் கால்பேரவொண்ணாதபடியிருக்கும். அப்படிப்பட்ட உத்ஸவ காலங்களிலும் தாய்மார் இப் பெண்பிள்ளையை அங்கு அழைத்துக்கொண்டு செல்லுகையாலே ஈடுபாடு அதிகமாயிற்றென்கிறாள் தோழி.

குமிறுமோசைவிழவொலி என்ற விடத்துப் பரமபோக்யமான ஈட்டு ஸ்ரீஸூக்தி:— "தேஷாம் புண்யாஹகோஷோத கம்பீரமதுரஸ்வந:, அயோத்யாம் பூரயாமாஸ தூர்ய நாதாநுநாதித: * என்று, ஓத்துச் சொல்லுவார் ஸங்கீர்த்தநம் பண்ணுவார் பாடுவார் இயல்விண்ணப்பஞ் செய்வாராய் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக்கொண்டு எழுகிற த்வநியையுடைய திருநாளிலாரவாரம். பாவியேன்! இத் த்வநி செவிப்பட்டால் கொண்டு மீளவன்றோ வடுப்பது; 'இவ்விடம் பிள்ளைகொல்லி' என்று கூப்பிடுமாபோலே காணும் த்வநியிருப்பது. அவ்வூரும் திருநாளும் அங்குள்ளார் படுகிறதும் கண்டுவைத்து இவளைக் கொண்டு புகுவாருண்டோ?"

கொண்டுபுக்கு என்கையாலே, இவள் அறியாதிருக்க நீங்களே இவளை பகவத் விஷய ப்ரவணையாம்படி செய்தீர்கள்; அங்ஙனே முதலில் செய்துவைத்து இப்போது மீட்கப்பார்த்தால் பயனுண்டோ வென்று காட்டப்படுகிறது. இத்தால் பகவத்விஷயத்தில் தானே அவகாஹிப்பதிலுங்காட்டில் பெரியார் அவகாஹிப்பிக்க அவகாஹித்தல் முறைமை என்கிற சாஸ்த்ரார்த்தமும் காட்டப்பட்டதாயிற்று.

அமுதமென்மொழியாளை = * தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன் * என்று மேலே ஆழ்வார் தாமே அருளிச்செய்கிறார். அமுதமொழியென்றால் ஆழ்வாருடைய திருவாக்குத்தவிர வேறென்றுண்டோ? * அமுதிலுமாற்றவினியன் * என்று ஆராவமுதான எம்பெருமானைக் கவிபாடின மொழிகளுள் தலையான மொழியாகையாலே இதுவே அமுதமென் மொழி.

இவள் திமிர்கொண்டாலொத்துநிற்கும் = சித்திரத்தில் எழுதின பதுமைபோலே ஒன்றும் செய்யமாட்டாதாளாய் ஸ்தம்பித்திரா நின்றாள் என்றபடி. "விரஹவ்யஸநத்தாலே சித்ரார்ப்பிதைபோலே ஒரு சேஷ்டித க்ஷமையன்றியே நின்று" என்பது ஆறாயிரப்படி. சாந்தோக்யமென்னும் உபநிஷத்தில் ஆறுவது ப்ரபாடகத்தில் ஒரு கதை: ச்வேதகேது என்பவன் பன்னிரண்டு வயதுவரையில் ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பாதியாமலே யிருந்தான்; அவனைத் தகப்பனார் பார்த்து, 'பிள்ளாய்! நமது குலத்தில் ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பாதியாமல் ஒருவருமிருந்ததில்லை; நீ சென்று ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பாதித்து வருவாயாக' என்றார். அப்படியே அவன் சென்று பன்னிரண்டாண்டு குருகுலவாஸம்பண்ணி ஸகல வேதங்களையும் அதிகரித்து ப்ரஹ்மஜ்ஞானியாய்த் தகப்பனாரிடம் திரும்பிவந்து சேர்ந்தான்; அப்போது அவன் ஸ்தப்தனாய் [அதாவது, வாய்விட்டு ஒன்றும் பேசாதவனாய்] இருந்தான்; அந் நிலைமையைத் தகப்பனார் பார்த்து அவனைக் கேட்கிறார் — [* ஸ்தப்தோஸி உத தமாதேசமப்ராக்ஷ்ய:*] பயலே! ஸ்தப்தனாயிருக்கின்றாயே, ப்ரஹ்மஜ்ஞானம் ஸம்பாதித்துவிட்டாயா என்ன? என்கிறார். ப்ரஹ்மஜ்ஞானம் பரிபூர்ணமாக வுண்டானால் கைகாலாடாதே ஸ்தம்பித்து நிற்கும்படியாக நேரும் என்பது இதனால் பெறப்படும். * ஸ்தப்தோஸ்யுத * என்கிறபடியே பரிபூர்ண ஜ்ஞானரைப் போலே யிராநின்றாள்" என்பது ஈடு.

எப்போதும் ஸ்தம்பித்தே யிருக்கலாகுமோ? ப்ரஹர்ஷேணாவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந * [ஸீதாபிராட்டியானவள் ஸந்தோஷத்தின் மிகுதியினால் வாய்திறந்து ஒன்றுஞ்சொல்லவில்லை] என்னும்படி யிருந்தும் பிறகு பலவும் பேசிற்றுமுண்டே; அப்படியே இவளும் வாய்திறக்குமிடத்துத் தேவதேவபிரான் இத்யாதி நாமங்களைச் சொல்லி ஸர்வப்ரகாரத்தாலும் சிதிலையாகாநின்றாளென்கிறது. ஆகவே இப்படிப்பட்டவள் இனி உங்களால் ஆசைப்படத்தக்கவளல்லள் என்றதாயிற்று. ... ... 2

கரைகொள்பைம்பொழில்தண்பணைத் தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
உரைகொளின்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் *
திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததும் திசைஞாலம்தாவியளந்ததும் *
நிரைகள்மேய்த்ததுமேபிதற்றி நெடுங்கண்ணீர்மல்கநிற்குமே. 3

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர்) | தாய்மார்களே! | தொலைவில்லிமங்கலம் | இரட்டைத்திருப்பதியிலே |
| கரை கொள் பைம் பொழில் தண் பணை | தாமிர பரணிக்கரையைக் கபளீகரிக்கின்ற பரந்த சோலைகளையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைத்தான | உரைகொள் இன் மொழியாளை நீர் கொண்டு புக்கு | புகழ்மிக்க இன்சொல்லையுடையளான இப்பெண்பிள்ளையை நீங்கள் அழைத்துக்கொண்டு சென்று |

| | |
|---|---|
| உமக்கு ஆசை இன்றி அகற்றினீர் | மறுபடியும் நீங்கள் இவளோடு உறவு பண்ணுகைக்கு ஆசையில்லாதபடி உறவறுத்துக் கொண்டீர்கள்; (அது எங்ஙனம் தெரிகிறதென்னில்) |
| இவள்) | இப்பெண்பிள்ளையானவள் |
| திரை கொள் பௌவத்து சேர்ந்ததும் | அலைகளைக்கொண்ட திருப்பாற்கடலிலே (ஆச்ரித ரக்ஷணார்த்தமாக) வந்து சேர்ந்தபடியையும் |
| திசைஞாலம் தாவி அளந்ததும் | திசைகளோடுகூடின பூமியை முழுவதும் தாவி அடிக்கீழிட்டுக் கொண்டபடியையும் |
| நிரைகள் மேய்த்ததுமே | பசுக்கூட்டங்களை மேய்த்தபடியையுமே |
| பிதற்றி | வாய்வெருவி |
| நெடு கண் நீர் மல்க நிற்கும் | தனது நெடிய கண்களில் நீர் பெருக நிற்கின்றாள். |

* * * [கரைகோள்.] இப் பெண்பிள்ளையைத் துலைவில்லித் திருப்பதிக்கு அழைத்துச் சென்றவர்கள் அவ்விடத்துச் சோலையின் வாய்ப்பையும் நீர்நிலங்களின் வளங்களையும் இவளுக்குக் காட்டிக்கொடுக்கவேணுமோ? தாமிரபர்ணியின் கரையை விளாக்குலை கொண்டிருக்கின்ற பரந்த சோலைகளையும் குளிர்ந்த நீர் நிலங்களையும் இவளுக்கு நன்கு காட்டிக்கொடுக்கவே இவள் அத்திருப்பதிதன்னிலேயே யீடுபட்டு உங்களோடு உறவு அறும்படியானாள்; க்ஷீரஸாகர சயனத்தையும் த்ரிவிக்ரமாபதானத்தையும் ஆநிரை மேய்த்தபடியையுமே பிதற்றிக்கொண்டு கிடக்கிறவிவளை இனி நீங்கள் உங்கள் மகளென்று அபிமானிக்க ப்ராப்தியுண்டோ வென்று அன்னையர்க்குத் தோழிமார் உரைக்கின்றாகள்.

“கரைகொள்பைம்பொழில்” என்றவிடத்திற்குத் தாத்பர்யார்த்த மருளிச் செய்கிறார் நம்பிள்ளை — “அத்திருச் சோலையை உங்களுடைய ஹிதவசனத்தாலே பேர்த்துக்கொடுபோமன்று அன்றோ இவள் நிலையை உங்களால் பேர்க்கலாவது” என்று. ஆற்றங்கரையிலே சோலைகள் எப்படி பேர்க்கவும் பேராதபடி பொருந்தியிருக்கின்றனவோ அப்படியே இப்பெண்பிள்ளையும் அத்தலத்திலே பொருந்திவிட்டாள்; அச்சோலைகளைக் குறித்து ஹிதவசனம் எப்படிப் பயன்படாதோ அப்படியே இவளைக் குறித்தும் இனி ஹிதவசனம் பயன்படாது என்றவாறு.

உரைகோள் இன்மொழியாள் என்று இங்கு ஆழ்வார்க்கு அமைந்த விசேஷணம் ஆச்சரியமானது. இதற்குப் பலபடியாகப் பொருள் கொள்ளலாம். உரை என்று கீர்த்தியாய், கீர்த்தி வாய்ந்த மொழியையுடையவள்; (அல்லது) அர்த்தத்திலுள்ளே இழிய வேண்டாதே சப்தந்தானே மிக இனிதாயிருக்கப்பெற்றவள்; (அல்லது) வியாக்கியானங் கொள்ளும் மொழியை யுடையவள். உரை என்று வியாக்கியானத்திற்குப் பேராதலால் எத்தனை வியாக்கியானங்கள் அவதரித்தாலும் போராத ஸ்ரீஸூக்தியையுடையளென்கிறது. ஆறாயிரம் ஒன்பதினாயிரம் பன்னீராயிரம் இருபத்திநாலாயிரம் ஈடு முப்பத்தாறாயிரம் என்றிப்படி எத்தனைவியாக்கியானங்கள் அவதரித்தாலும் இன்னமும் வியாக்கியானமிடவேண்டியன்றோ ஸ்ரீ ஸூக்திவைபவமிருப்பது.

திரைகொள்பௌவத்துச் சேர்ந்ததும் = ஆர்த்தர்களின் கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே அவதாரகந்தமாக சாய்ந்தருளினபடியைக் குறித்து வெகு ஆச்சரியமாகப் பேசா நின்றாள். திசை ஞாலம்தாவியளந்ததும் = மாவலியிடத்தே மாணுருவாய்ச் சென்று அடியை மூன்றை யிரந்து அங்கேநின்று ஆழ்கடலும் மண்ணும் விண்ணும் முடிய ஈரடியால் முடித்துக்கொண்டபடியை மிக அற்புதமாகப் பேசுகின்றாள். நிரைகள் மேய்த்ததும் = இப்படிகளாலே பராத்பரனாயிருக்குமவன் இடையனாய்ப் பிறந்து பசுக்களையும் கன்றுகளையும் மேய்த்துத் திரிந்தபடி என்னே! என்று அந்த ஸௌலப்ய ஸௌசீல்யங்களை வாய்வெருவுகின்றாள். அவ்வளவோடும் நில்லாமல் [நெடுங்கண்ணீர்

மல்கநிற்கும்] தாரை தாரையாய்க் கண்ணீர்பெருக நிற்கின்றாள்; இங்ஙனம் அவ்விஷயத்திலே அவகாஹித்த இவளை இனி நீங்கள் மீட்கப்பார்க்க வழியுண்டோ வென்கை. 3

நிற்கும்நான்மறைவாணர்வாழ் தொலைவில்லிமங்கலம்கண்டபின் *
அற்கமொன்றுமறவுறாள் மலிந்தாள்கண்டீரிவளன்னைமீர்! *
கற்குங்கல்வியெல்லாம் கருங்கடல்வண்ணன்கண்ணபிரானென்றே *
ஒற்கமொன்றுமிலள் உகந்துகந்துள்மகிழ்ந்துகுழையுமே. 4

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| இவள் | இப்பெண்பிள்ளையானவள் |
| நிற்கும் நான்மறை வாணர் வாழ் | ஸ்திரமான நான்குவேதங்களையும் அதிகரித்தவர்கள்வாழுமிடமான |
| தொலைவில்லிமங்கலம் கண்ட பின் | தொலைவில்லித்திருப்பதியை ஸேவிக்கப்பெற்ற பின்பு |
| அற்கம் ஒன்றும் அற உறாள் | அடக்கம் சிறிதுமுடையாளல்லளாய் |
| மலிந்தாள் கண்டீர் | கைகழிந்துவிட்டாள் காண்மின்; |

(அது எங்ஙனம்தெரிகிறதென்றால்)

| | |
|---|---|
| கற்கும் கல்வி எல்லாம் | இவள் பழகுகிற பேச்சுகளெல்லாம் |
| கரு கடல் வண்ணன் கண்ணபிரான் என்றே | நீலக்கடல் வண்ணனான கண்ணபிரானைப் பற்றியதேயாம்; |
| ஒற்கம் ஒன்றும் இலள் | ஒடுக்கம் சிறிதுமில்லாதவளாய் |
| உகந்து உகந்து உள் மகிழ்ந்து | தன்னுடைய ஆனந்தமிகுதியை நன்றாகக் காட்டிக்கொண்டு |
| குழையும் | உள்குழையாநின்றாள். |

* * * [நிற்கும் நான்மறை.] தொலைவில்லித் திருப்பதிக்கு இவளை அழைத்துச்சென்றவர்கள் அங்கே வேதபாராயண வைபவங்களையும் கேட்பிக்கவேணுமோ? நான்கு வேதங்களிலும் பாரங்கதரானவர்கள் அங்கே வேதாத்யயனங்கள் செய்யுமழகைக்கண்டாள்; இந்த வேதங்களையெல்லாம் ஆதியிலே நான்முகனுக்கு உபதேசித்தவனன்றோ நம் பெருமான் என்று அவ்வழியாலே அவனிடத்துக் காதல் மிகப்பெறுாள்; அவனது கட்டளையான நான்மறைகளையும் ஓதுகின்ற பரமபாகவதர்களன்றோ இவர்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களிடத்திலும் பக்திப் பெருங்காதல் கொள்ளப்பெற்றாள்; இப்படி பகவத் பாகவத பக்தியே வடிவெடுத்தவளான இவளை ஸம்ஸாரிகளான நீங்கள் இனி உறவுகொண்டாடி விரும்பத் தகுதியுண்டோ வென்கிறாள் தோழி.

அற்கமொன்றும் அறவுறாள் = ஸ்த்ரீகளுக்கு முக்கிய லக்ஷணமான அடக்கம் அடியோடேபோயிற்று. மலிந்தாள்கண்டீர் = இருக்கவேண்டிய மரியாதையை மீறிநின்றாள். திருமங்கையாழ்வார் *என்சிறகின்கீழடங்காப் பெண்ணைப்பெற்றேன்* என்று தாய் சொல்லாலே பேசின அர்த்தம் இங்குத் தோழி பேச்சாலே வெளிவந்ததாயிற்று.

“கற்குங்கல்வியெல்லாம்” என்பது தோழியின் பேச்சேயாகவுமாம், தலைவி பேச்சோடே சேர்ந்து அந்வயிக்கவுமாம். தோழியின் பேச்சாகக்கொண்டால், இப்பராங்குச நாயகி பேசுகிற பேச்செல்லாம் எம்பெருமானது திருநாமமேயாயிருக்கும் என்று பொருள்படும். தலைவி பேச்சோடே சேர்ந்து அந்வயிக்குமிடத்தில், “உலகில் யார் எந்தக் கல்வி கற்றாலும் அக்கல்வி யெல்லாம் எம்பெருமான் பரமேயொழிய, அவனளவிலே சென்று நில்லாத கல்வியொன்றுமில்லை” என்று பராங்குசநாயகி பகர்வதாகப் பொருள் படும்.

ஒற்கம் ஒன்றுமிலள் = எவ்வளவு நாழிகை பகவத்திருநாமங்களைப் பேசினாலும் இளைப்பென்பது சிறிதுமுடையளல்லள். லஜ்ஜையுடையளல்லள் என்னவுமாம். உகந்துகந்து உள்மகிழ்ந்து குழையும் = திருநாமம் வழியாக அவனது ஸௌந்தர்யம் சீலம் முதலியவற்றைச் சிந்தித்து மேன்மேலும் விளைகிற பாஹ்ய ஆப்யந்தர ஹர்ஷத்தாலே சிதிலையாகாநின்றாள். ... .... .... ... 4

குழையும்வாண்முகத்தேழையைத் தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
இழைகொள்சோதிச்செந்தாமரைக்கண்பிரான் இருந்தமைகாட்டினீர் *
மழைபெய்தாலொக்கும்கண்ணநீரினொடு அன்றுதொட்டும்மையாந்து* இவள்
நுழையும்சிந்தையள் அன்னைமீர் ! தொழுமத்திசையுற்றுநோக்கியே. 5

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே ! | இருந்தமை காட்டினீர் | வீற்றிருக்கும்படியை நீங்களேகாட்டிக்கொடுத்தீர்கள் ; |
| குழையும் | பகவத்குணங்களிலே உருக்கமுடையவளாயும் | இவள் அன்று தொட்டும் | அதுகாணப்பெற்றவிவள் அக்காள் தொடங்கி |
| வாள் முகத்து | ஒளிமிக்க முகத்தையுடையவளாயுமிருக்கிற | மழை பெய்தால் ஒக்கும் கண்ண நீரினொடு | மழைபெய்தாற்போன்ற கண்ணீரோடேகூடி |
| ஏழையை | இப்பெண்பிள்ளையை | மையார்ந்து | வியாமோஹித்து |
| தொலைவில்லி மங்கலம் கொண்டு புக்கு | தொலைவில்லித் திருப்பதிக்கு அழைத்துக்கொண்டு போய் | நுழையும் சிந்தையள் | அவனழகிலே உள்புகுந்த நெஞ்சையுடையளாய் |
| இழை கொள் சோதி | திருவாபரணங்களிலுலான சோதியை யுடையனும் | அத் திசை உற்று நோக்கி தொழும் | அத்திருப்பதியுள்ள பக்கமே உற்றுநோக்கித் தொழுகின்றாள். |
| செம் தாமரை கண் பிரான் | செந்தாமரைபோன்ற திருக்கண்களையுடையனுமான எம்பெருமான் | | |

* * * [குழையும் வாண்முகத்து.] ஏற்கனவே இவளுடைய ப்ரக்ருதி உங்களுக்குத் தெரிந்திருந்தும் இவளைத் துலைவில்லிமங்கலத்தேறக் கொண்டு சென்று தேவபிரானுடைய வடிவழகைக் காட்டிக்கொடுத்தீர்கள் நீங்களே யென்கிறாள் தோழி. குழையும் என்பதும் வாண்முகத்து என்பதும் தலைவிக்குத் தனித்தனி விசேஷணங்கள். பகவத்விஷயமென்றால் ஊற்றின்கண் நுண் மணல்போல் உருகாநிற்பவளாயும், *ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே* என்கிறப்போலே அகத்திலுள்ள வைலக்ஷண்யமெல்லாம் முகத்திலே தெரியும்படி யிருப்பவளாயுமுள்ள இவ்வேழையை என்றபடி. ஏழையை என்பதற்கு "கிடையாதென்றாலும் மீளமாட்டாத சாபலத்தையுடையவளை" என்பது ஈடு. ஏழை யென்பதற்கு அறிவில்லாதவளென்று பொருளாய் அதிலிருந்து கிடைத்த தாத்பர்யார்த்தம் இது. "நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை, பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்" என்பவாதலால் ஏழையென்ற சொல் அறிவிலியென்று பொருள்படக் குறையில்லை.

[இழைகொள்சோதியித்யாதி.] 'ஆபரணத்துக்கு அழகுகொடுக்கும் பெருமாள் !' என்னும்படி ஆபரணமும் வேண்டாதே இயற்கையான அழகையும் செந்தாமரைபோன்ற திருக் கண்களையுமுடையனாய் வீற்றிருக்கும்படியைப் பெண்ணே ! பார் பார் என்று நீங்களே காட்டிக்கொடுத்ததனால் வந்த அநர்த்தமன்றோ இத்தனையும் என்கிறாள். அதனால் இப்போது வந்தது என்னென்ன ; அது சொல்லுகிறது பின்னடிகளால். பிரானிருந்தமையைக் கண்டவுடனே கண்ணீரானது மழைபெய்தாற்போல் தாரைதாரையாகப் பெருகத் தொடங்கிற்று ; அதுக்குமேலே மயக்கமும் வந்து குடிபுகுந்தது; மயக்கம் சிறிது தெளிந்தவாறே அவனது திருக்குணங்களிலே நெஞ்சு உட்புகாநின்றது; அத்திருப்பதியிலுள்ள திக்கையே உற்றுப்பார்த்து ஓயாதே அஞ்ஜலிசெய்யா நின்றாள்; இதுவாயிற்று இவளுடைய நிலைமை. இனி இவளை இதில் நின்றும் மீட்கப்பார்க்கை யென்பதொன்றுண்டோ? என்றவாறு. .... ... ... 5

நோக்கும்பக்கமெல்லாம் கரும்பொடுசெந்நெலோங்குசெந்தாமரை *
வாய்க்கும்தண்பொருநல் வடகரைவண்தொலைவில்லிமங்கலம் *
நோக்குமேலத்திசையல்லால் மறுநோக்கிலள்வைகல்நாடோறும் *
வாய்க்கொள்வாசகமும் மணிவண்ணன்நாமமேயிவளன்னைமீர். 6

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| நோக்கும் பக்கம் எல்லாம் | பார்த்த பார்த்த விடமெல்லாம் |
| கரும்பொடு செந்நெல் ஓங்கு | கரும்பும் செந்நெற்பயிர்களும் உயர்ந்து விளங்கப் பெற்றதும் |
| செம் தாமரை வாய்க்கும் | செந்தாமரைகள் நிரம்பப் பெற்றதும் |
| தண் | குளிர்ந்ததுமான |
| பொருநல் | தாமிரபர்ணிநதியினுடைய |
| வட கரை | வடகரையிலே யுள்ளதாய் |
| வண் | சகலவிதமான அழகும் பொருந்தியதான |
| தொலைவில்லி மங்கலம் | தொலைவில்லித் திருப்பதியை |
| நோக்கும் எல் | (இப்பெண்பிள்ளை) பார்த்தாளாகில் |
| அத் திசை அல்லால் மறு நோக்கு இலள் | அந்தத் திக்கு ஒன்று தவிர வேறெவ்விடத்தும் நோக்குடையளல்லள்; |
| வைகல் நாள் தொறும் | ஒரு கொடிப்பொழுதும் விச்சேதமில்லாமல் ஸகலகாலமும் |
| இவள் வாய் கொள் வாசகமும் | இவளது வாக்கில் வெளிவருகின்ற சொற்களும் |
| மணிவண்ணன் நாமமே | நீலமணிவண்ணனான எம்பெருமானுடைய திருநாமங்களேயாம். |

***[நோக்கும்பக்கமெல்லாம்.] இப்பெண்பிள்ளை பெரும்பாலும் மோஹித்திருக்குமிருப்பேயல்லது கண்ணைத்திறந்து பார்ப்பதென்கிற கதையேயில்லை; ஒருகால் பார்த்தாளாகில் அத்திருப்பதியுள்ள விடமொழிய மற்றோரிடமும் பார்ப்பதில்லை யென்கிறாள் தோழி. எந்தவிடம் பார்த்தாலும் கருப்பஞ்சோலையும் செந்நெற் பயிர்களும் தாமரைக் காடுமாகவே திகழாநின்ற தாமிரபர்ணியின் வடகரையிலே விளங்குமதான தொலைவில்லித் திருப்பதியையன்றி மற்றொரு திக்கைக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை; வாய்கொண்டு பேசப்புகுந்தாலோ வாயில்வரும் பேச்செல்லாம மணிவண்ணனான அப்பெருமானுடைய திருநாமமாயிருக்குமே யல்லது வேறொன்றும் இவளது வாயில் வாராது என்றவாறு.

கரும்பு செந்நெல் செந்தாமரை என்னுமிவை ஸ்வாபதேசப் பொருளில் அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களின் விலக்ஷணப்ரக்ருதியைத் தெரிவிப்பனவாம். கரும்பு என்றது மதுரப்ரக்ருதிகள் என்கை. செந்நெல் என்றது *வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்கும் தண்ணரங்கமே* என்று பெரியாழ்வாரருளிச்செய்தபடி, வித்யைகள் நிரம்பப்பெற்று விநயமே வடிவெடுத்திருக்கும்படி சொன்னவாறு. செந்தாமரை யென்றது — ஸாரக்ராஹிகளால் ஸேவிக்கப்படுந்தன்மை சொன்னபடி. ஆக, மதுரப்ரக்ருதிகளாய், வித்யாவிநய ஸம்பந்நர்களாய், மதுகரவ்ருத்திகளால் ஆச்ரயிக்கப்பட்டவர்களான ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகள் நிரம்பிய தலம் என்றதாயிற்று. .... .... 6

அன்னைமீர்! அணிமாமயில் சிறுமானிவள்நம்மைக்கைவலிந்து *
என்னவார்த்தையும்கேட்குறாள் தொலைவில்லிமங்கலமென்றல்லால் *
முன்னம்நோற்றவிதிகொலோ முகில்வண்ணன்மாயங்கொலோ * அவன்
சின்னமும் திருநாமமும் இவள்வாயனகள் திருந்தவே. 7

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| அணி மா மயில் சிறு மான் இவள் | அழகிற் சிறந்த மயில்போன்றும் சிறிய மான்பேடை போன்றும் இருக்கின்ற இப்பெண்பிள்ளை |
| நம்மை கை வலிந்து ... | நம்மைக் கைவிட்டொழிந்து |
| தொலைவில்லி மங்கலம் என்று அல்லால் என்ன வார்த்தையும் கேட்கவுறாள் | தொலைவில்லித் திருப்பதிப்பேச்சு தவிர வேறு எந்தப்பேச்சும் கேட்க விரும்புகின்றிலள்; |
| | (இப்படியானவிது) |
| முன்னம் நோற்ற விதி கொலோ | முன்செய்த ஸுக்ருதபலமோ |
| முகில் வண்ணன் மாயம் கொலோ | மேகவண்ணனான எம்பெருமானுடைய ஸங்கல்பமோ? |
| அவன் சின்னமும் திருநாமமும் | அப்பெருமானுடைய லக்ஷணங்களும் திருநாமங்களும் |
| திருந்த இவள் வாயனகள் | மிகத் திருத்தமாக இவளுடைய வாக்கில் விளங்கும்படி ஆனபின்னே! |

திருந்து வேதம் = ஸ்வரவர்ணக்ரமங்கள் ஒன்றும் பிறழாமே எப்போதும் எவ்விடத்தும் ஒழுங்குபட விளங்கப்பெற்ற வேதம் என்றபடி. வேள்வி அந்த வேதங்களில் ஓதப்பட்ட பகவதாராதந க்ரியா கலாபங்கள். திருந்து வேதமும் வேள்வியும் மலிந்து வாழ், திருமாமகளிரும் தாமும் இருந்துவாழ் என்று யோஜித்துக்கொள்ளலாம்.

கருந்தடங்கண்ணி — வெளிக்கண்ணின் அழகுசொன்னவிது ஸ்வாபதேசத்தில் உட்கண்ணின் அழகு சொன்னபடி. கரியகோலப்பிரானை விஷயீகரிக்கின்ற விசாலமான ஞானக்கண்படைத்தவர் ஆழ்வார் என்றபடி. இருந்திருந்து அரவிந்தலோசனவென்றென்றே — இங்கே ஈடு :— "ஒருகால் அரவிந்தலோசன ! என்னும்போது நடுவே' பதின்கால் பட்டைப்பொதிசோறு அவிழ்க்கவேணும்" என்று. அதாவது — திருநாமத்தைச் சொல்லவேணுமென்று தொடங்கும்போதே நைந்து உள்கரைந்து உருகுகிறபடியாலே நெடுகச் சொல்லமாட்டாதே இடையிடையே தளர்கின்றமை சொன்னவாறு. ... 8

இரங்கிநாடோறும்வாய்வெரீஇ இவள்கண்ணநீர்களலமர *
மரங்களுமிரங்கும்வகை மணிவண்ணவோவென்றுகூவுமால் *
துரங்கம்வாய்பிளந்தானுறை தொலைவில்லிமங்கலமென்று * தன்
கரங்கள்கூப்பித்தொழும் அவ்வூர்த்திருநாமம்கற்றதற்பின்னையே. 9

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே ! | | (அறுவுமல்லாமல்) |
| இவள் | இப்பெண் பிள்ளையானவள் | துரங்கம் வாய் பிளந்தான் உறை தொலைவில்லி மங்கலம் என்று | குதிரைவடிவு கொண்டுவந்த அசுரனுடைய வாயைப்பிளந்த பெருமான் எழுந்தருளியிருக்கின்ற தொலைவில்லித் திருப்பதியென்று |
| நாள் தோறும் இரங்கி வாய் வெரீஇ | நாடோறும் நெஞ்சழிந்து வாய் வெருவி. | அவ் ஊர் திருநாமம் கற்றதன் பின்னை | அவ்வூர்த்திருநாமத்தைக் கற்ற பின்பு |
| கண்ண நீர்கள் அலமர | கண்ணீர் பெருக வியாகுலப்பட்டு நின்று | தன் கரங்கள் கூப்பி தொழும் | தன் கைகளைக் கூப்பி (அவ்வூரை நோக்கி)த் தொழுகின்றாள். |
| மரங்களும் இரங்கும் வகை | மரங்களுங்கூட இரங்கும்படியாக | | |
| ஓ மணிவண்ண என்று கூவும் | ஓ மணிவண்ணனே ! என்று கூப்பிடாநின்றாள் ; | | |

* * * [இரங்கிநாடோறும்.] இவளைத் துலைவில்லித் திருப்பதியிலே கொண்டுபுக்கு அவ்வூர்த் திருநாமத்தை நீங்கள் கற்பிக்க இவள் கற்றதற்பின் அநவரதமும் அவன் திருநாமத்தையே வெருவி அஃறிணைப் பொருள்களுங்கூடக் கரையும்படி மஹத்தான ஆர்த்தியோடே ஓ மணிவண்ணாவென்று கூப்பிட்டழைத்துத் துலைவில்லிமங்கலமென்று சொல்லித் தன் கைகளைக் கூப்பித் தொழுகின்றாள் ; அன்னைமீர் ! இதெல்லாம் உங்களாலே வந்ததத்தனை என்கிறாள் தோழி.

மரங்களுமிரங்கும்வகை என்றது—பகவத்விஷயத்தில் ஈடுபாடில்லாமையாலே அசேதந ப்ராயர்களான அறிவிலிகளுங்கூட ஈடுபடும்படியாயிற்று என்கை. மரங்களும் இரங்கக்கூடுமோவென்று எம்பாரைச் சிலர் கேட்டார்களாம். அதற்கு அவர் அருளிச்செய்த உத்தரம் :—இத்திருவாய்மொழி அவதரித்தவன்று தொடங்கி பாவசுத்தியில்லாத எத்தனைபேர்களுடைய வாயிலே இது புகுந்ததென்று தெரியாது : இங்ஙனேயிருக்கச்செய்தே, யமநியமாதிக்ரமத்தாலே பதஞ்செய்யப் பார்த்தாலும் சுக்கான் பருக்கைபோலே நெகிழாதேயிருக்கிற நெஞ்சுகளும் இன்று அழிகிறபடிகண்டால் ஸமகாலத்தில் மரங்கள் இரங்கச் சொல்லவேணுமோ ? என்றும்.

கண்ணபிரான் புல்லாங்குழலூதும்போது * மரங்கள் நின்று மதுதாரைகள்பாயும் மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும்* என்னும்படியானதெல்லாம் ஆழ்வாருடைய ஆர்த்த நாதத்திலும் ஆகச்சொல்லவேணுமோ ?

துரங்கம்வாய் பிளந்தானுறை = கம்ஸனுடைய ஏவுதலால் குதிரையுருவங்கொண்டு ஜகதுபஸம்ஹாரம் பண்ணவந்த கேசி யென்னுமசுரனை அவலீலையாகக்கொன்று முடித்ததுபோல என்னுடைய விரோதிவர்க்கங்களையெல்லாம் ஒழிக்கவேண்டித் தொலைவில்லித் திருப்பதியிலே நித்யஸந்நிதி பண்ணியருளா நின்றானென்று சொல்லி அத்தலத்தை நோக்கி அஞ்ஜலிசெய்கின்றாளிவள் ; இனி இவளை மீட்கை அரிது என்றாளாயிற்று. 9

பின்னைகொல்நிலமாமகள்கொல் திருமகள்கொல்பிறந்திட்டாள் *
என்னமாயங்கொலோ இவள்நெடுமாலென்றேநின்றுகூவுமால் *
முன்னிவந்தவன்நின்றிருந்துறையும் தொலைவில்லிமங்கலம்
சென்னியால்வணங்கும் * அவ்வூர்த்திருநாமம் கேட்பதுசிந்தையே. 10

| | |
|---|---|
| அன்னைமீர்) | தாய்மார்களே! |
| (இவள் | இப்பெண்பிள்ளையானவள் |
| பின்னைகொல் | நப்பின்னைப் பிராட்டியோ ! |
| மா நிலம் மகள் கொல் | பெருமைதங்கிய பூமிப்பிராட்டியோ ! |
| திருமகள் கொல் பிறந்திட்டாள் | அல்லது) ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியே வந்து பிறந்தபடியோ ! |
| என்ன மாயம் கொலோ | இது என்ன அதிசயமோ ! |
| நெடுமால் என்றே நின்று கூவும் | ஸர்வேச்வரா ! என்று நிலைநின்று அழைக்கிறாள் ; (அவ்வளவுமல்லாமல்) |
| அவன் முன்னி வந்து நின்று இருந்து உறையும் | அப்பெருமான் முற்பட்டு வந்து நிற்பது இருப்பதாய் நித்யவாஸம் பண்ணுமிடமான |
| தொலைவில்லி மங்கலம் | தொலைவில்லித் திருப்பதியை |
| சென்னியால் வணங்கும் | தலையாலே வணங்குகின்றாள். |
| அவ் ஊர் திரு நாமம் கேட்பதே சிந்தை | அத்திருப்பதியின் திருநாமத்தை (தன்வாயால் தான் சொல்லுகிற் காட்டிலும்) பிறர் சொல்லக் கேட்க வேணுமென்பதே இவளது சிந்தனை. |

* * * [பின்னைகொல்.] பராங்குசநாயகியின் ப்ராவண்யப்ரக்ருதியைக் கண்டு 'இவள் பிராட்டி மாரிலே ஒருத்தியோ!' என்று சங்கிக்கின்றமை கூறுகிறது இப்பாட்டில். ஆழ்வார் க்ருஷ்ணாவதாரத்திலே யீடுபட்டிருக்குந் தன்மையை நோக்குங்கால், ஸாக்ஷாத் நப்பின்னைப்பிராட்டிதானோ! என்னவேணும். வராஹப்பெருமாள் திறத்தில் ஈடுபட்டிருக்குந் தன்மையை நோக்குமளவில் ஸாக்ஷாத் பூமிப்பிராட்டிதானோ! என்னலாகும். ஸ்ரீராமாவதாரத்தி லீடுபாட்டை நோக்கினால் ஸாக்ஷாத் ஸீதாபிராட்டிதானோ! என்ன ப்ராப்தம்.

பின்னைகொல் = * ஏருதேழ்தழீஇக் கோளியார் கோவலனார் குடக்கூத்தனார் தாளிணை மேலணி தண்ணந்துழாயென்றே நாளுநாள் நைகின்றது * என்று, ஏறுதழுவுகை முதலான செயல்களையுடைய கண்ணபிரான் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்பட்டு நாள்தோறும் சைதில்யத்தை யடைவது, * கறையினார் துவருடுக்கை கடையாவின்கழிகோல்கைச் சறையினார் கவராத தளிர்நிறத்தால் குறைவிலமே * என்று கண்ணபிரான் விரும்பாத நிறம் எனக்கு வேண்டாவென்பதாய்ப் பேசின பாசுரங்களில் நப்பின்னைப் பிராட்டியின் ஸாம்யந்தோன்றும்.

நிலமாமகள் கொல் = * ஆதியங்காலத்து அகலிடங்கீண்டவர் பாதங்கள் மேலணி பைம்பொன் துழாயென்றே ஓதுமாலெய்தினள் * என்று, வராஹ கல்பாதியிலே மஹா ப்ருதிவியை அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்து எடுத்தவனுடைய திருவடிகளில் திருத்துழாயென்றே பலகாலும் சொல்லும்படி பிச்சேறுவது, * மண்புரை வையமிடந்த வராகற்கு என்கண்புனை கோதையிழந்தது கற்பே * என்று, அவனை யாசைப்பட்டு அறிவிழப்பது, * ஞாலப்பொன்மாதின்மணாளன் துழாய்நங்கள் குழற்கே ஏலப்புனைந்தென்னைமார் எமமை நோக்குவது என்றுகொலோ * என்று,

வராஹப்பெருமாள் சூடின திருத்துழாயை பந்துக்களானவர்கள் ஏற்கவே கொண்டு வந்து நம் குழலிலே சூட்டி நம்மை ரக்ஷிப்பது என்றைக்கோ வென்பது * ஏனமொன்றாய் மண்துகளாடி வைகுந்தமன்னாள் குழல்வாய் விரைபோல் விண்டு கள்வாரும்மலருளவோ நும்வியலிடத்தே * என்று, வராஹப்பெருமானுடைய சரிதையை அநுபவித்திருக்கிறவிவள்போக்யதை உபயவிபூதியிலுமுண்டோ வென்று விசேஷஜ்ஞர் சலாகிக்கும்படியை ப்ரகாசிப்பிப்பதாய்க் கொண்டு பேசின பாசுரங்களில் நிலமாமகளின் ஸாம்யம் தோன்றும்.

திருமகள்கோல் = * தென்பாலிலங்கை வெங்களஞ்செய்த நம் விண்ணோர்பிரானார் துழாய்துணையா நங்கனிமாமைகொள்வான் வந்து தோன்றி நலிகின்றதே * வாழா நெடுந் துன்பத்தளென்றிரங்காரம்மனோ இலங்கைக்குழாநெடுமாட மிடித்தபிரானார் கொடுமைகளே * காயுங்கடுஞ் சிலையென் காகுத்தன்வாரானால் * இலங்கைநகர் அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி வம்பவிழ்தண்ணந்துழாய் மலர்க்கேயிவள்நம்பும் * திமுற்றத் தென்னிலங்கையூட்டினான் தாள்நயந்த யாமுற்றதுற்றாயோ * மாறில்போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுளளென்மின்கள் * இளரரக்கன்நகரெரித்த களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன்......கவராத அறிவினால்குறைவிலம் * காண்பெருந்தோற்றத்தென் காகுத்தநம்பிக்கு என்பூண் புனைமென்முலைதோற்றதுபொற்பே * என்னுருயிர்காகுத்தன் நின்செய்யவாயொக்கும்வாயன் கண்ணன் கைகாலினன் நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டு நீங்கினான்—சிறுகிளிப்பைதலே! இன்குரல்நீமிழற்றேல் * என்னு மிப்பாசுரங்களில் திருமகளான ஸீதாபிராட்டியின் ஸாம்யம் தோன்றும். இத்தால், நப்பின்னைப்பிராட்டிக்கு அஸாதாரணமான க்ருஷ்ணாவதார விஷயமாகவும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு அஸாதாரணமான வராஹாவதார விஷயமாகவும், ஜநககுல ஸுந்தரியான பிராட்டிக்கு அஸாதாரணமான ராமாவதார விஷயமாகவும் அந்தப்பிராட்டிமார் தங்களைப்போலே மிகவும் ப்ரவணராய் அருளிச்செய்த அந்தந்த திவ்யஸூக்திகளிலே மேற்குறித்த திவ்யமஹிஷிகள் மூவரோடும் இவர்க்குண்டான ஸாம்யம் விளங்காநின்றதென்றதாயிற்று.

‘பிறந்திட்டாள்’ என்பதை, பின்னைபிறந்திட்டாள்கொல்? நிலமாமகள் பிறந்திட்டாள்கொல்? திருமகள் பிறந்திட்டாள்கொல்? என்று யோஜித்துப் பொருள் கொள்வதன்றிக்கே, தனிப்படவும் யோஜிக்கலாம். அதாவது, இவள் பின்னைகொல்? இவள் நிலமாமகள்கொல்? இவள் திருமகள்கொல்? (அன்றியே) பிறந்திட்டாள்கொல்? என்பதாக. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் ;— “அவர்களுக்கு இவள் படியில்லாமையாலே அவர்களொப்பன்று: லோகமெல்லாம் வாழுகைக்கு இவளொருத்தி பிறந்தாளோ! என்றுமாம்.”

என்னமாயங்கொலோ = பகவத்விபூதியில் கூடாததொன்றில்லையே, இதென்ன ஆச்சரியந்தான்! என்கிறாள். இவள் கெடுமோலென்றே நின்று கூவுமால் = ‘என் பக்கலிலே எம்பிரானுக்கு என்ன வியாமோஹம்! என்ன வியாமோஹம்!’ என்று அவனுடைய வியாமோஹத்தின் நெடுமையைச் சொல்லிக் கூப்பிடுகின்றாள். * கொண்டவென்காதலுரைக்கில் தோழீ. மண்டிணிஞாலமு மேழ்கடலும் நீள்விசும்பும் கழியப்பெரிதால் * என்று தானே பேசலாம்படி அபரிமிதமான தன் வியாமோஹத்தை மறந்து அவன் வியாமோஹத்தையே கணக்கப் பேசுகின்றாள்.

துலைவில்லித் திருப்பதியிலுண்டான ஈடுபாட்டைச் சொல்லுகிறது பின்னடிகளில். முன்னிவந்து என்றது — தன்னுடைய வியாமோஹத்துக்கும் க்ருஷிபண்ணுகைக்காக முற்பட்டு வந்து என்றபடி. ... ... ... 10

சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே *
தந்தைதாயென்றடைந்த வண்குருகூரவர்சடகோபன் *
முந்தையாயிரத்துள்ளிவை தொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன * 11
செந்தமிழ்பத்தும்வல்லார் அடிமைசெய்வார்திருமாலுக்கே.

| | |
|---|---|
| தேவபிரானையே தந்தை தாய் என்று | தேவபிரானையே ஸகலவித பந்துவுமாக அறுதியிட்டு |
| சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் அடைந்த | மூன்று கரணங்களாலும் ஆச்ரயித்த |
| வண் குருகூரவர் சடகோபன் | ஆழ்வார் |
| முந்தை ஆயிரத்துள் | அநாதியான இவ்வாயிரத்திலுள்ளே |
| துலைவில்லி மங்கலத்தை சொன்ன இவை செந்தமிழ்பத்தும் வல்லார் | துலைவில்லித் திருப்பதி விஷயமாக அருளிச் செய்த இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் |
| திருமாலுக்கு அடிமை செய்வார் | பரவாஸுதேவனுக்கு நித்ய கைங்கர்யம் பண்ணப் பெறுவர்கள். |

* * * [சிந்தையாலும்.] இத் திருவாய்மொழி கற்பவர் கைங்கர்ய ஸாம்ராஜ்யமாகிற மஹாபலத்தைப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. மநோவாக்காயங்களென்கிற மூன்று உறுப்புக்களாலும் தேவபிரானையே ஸகலவித பந்துவுமாகக்கொண்ட ஆழ்வார் அருளிய ஆயிரத்தினுள் துலைவில்லித் திருப்பதி விஷயமான இத் திருவாய்மொழியை அதிகரிக்கவல்லவர்கள் பெருமாளும் பிராட்டியுமாக இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்யப்பெறுவர்கள் என்றதாயிற்று.

முந்தையாயிரம் அநாதியான ஆயிரம் என்றபடி. ஆழ்வார் திருவாக்கில நின்றும் அவதரித்ததான இத் திவ்யப் பிரபந்தம் அநாதியானதென்று எங்ஙனம் சொல்லக்கூடுமென்று சிலர் சங்கிக்கலாம்; இதற்கு ஆசார்யஹ்ருதயத்தில் விரிவான ஸமாதானமருளிச்செய்யப்பட்டுளது. அதில், “வேதநால் இருந்தமிழ்நூல் ஆஜ்ஞை ஆணை வசையில் ஏதமில் சுருதி செவிக்கினிய ஓதுகின்றதுண்மை பொய்யில்பாடல் பண்டைநிற்கும் முந்தையழிவில்லா வென்னும் லக்ஷணங்களாக்கும்” என்ற சூர்ணையினால் ஸம்ஸ்க்ருத வேத ஸாம்யத்தை நிர்வஹித்தருளி, “சொல்லப்பட்ட வென்ற விதில் கர்த்ருத்வம் ஸ்ம்ருதி அத்தை ஸ்வயம்பூபடைத்தா னென்றதுபோலே.” என்றமேல் சூர்ணையினால் ப்ரக்ருத சங்காபரிஹாரம் செய்யப்பட்டது. ஸம்ஸ்க்ருத வேதத்திற்கு எப்படி கர்த்தா இன்னாரென்று தெரியாமலிருக்கிறதோ அப்படியே இத் திவ்யப் பிரபந்தத்திற்கும் கர்த்தா தெரியாமலிருக்கவேண்டாவோ? அப்படியன்றிக்கே “குருகூர்ச் சடகோபன் சொல்லப்பட்ட வாயிரம்” என்று இதில் ஆழ்வார்க்கு கர்த்ருத்வம் ஸ்பஷ்டமாகத் தெரிகின்றதே! இது எங்ஙனே பொருந்தும்படி? என்று சங்கித்துக்கொண்டு; *அநாதிநிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா * என்று ஸ்ம்ருதியானது அந்த வேதத்தை ப்ரஹ்மா ஸ்ருஷ்டித்தானென்று சொல்லியிருப்பதை நிர்வஹிக்குமாபோலே இதையும் நிர்வஹிக்கக் குறையில்லையென்று ஸமாதானம் காட்டப்பட்டது. மேலும் 11
விரிவு காண்க. .... ... ....

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆரம்பத்தில் ஐந்தாந் திருவாய்மொழி முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி - ஆறும்பத்து - ஆறுந் திருவாய்மொழி.

## மாலுக்குவையமளந்த.

---

உரையவதாரிகை :—கீழ்த் திருவாய்மொழி தோழிபாசுரமாகச் சென்றது; இத் திருவாய்மொழி தாய்பாசுரமாகச் செல்லாநின்றது. இதில் பாசுரந்தோறும் 'இழந்தது' என்று வாராநின்றது. சங்கையிழந்தாள், மாமைநிறமிழந்தாள், சாயையிழந்தாள், மாண்பிழந்தாள், கற்பிழந்தாள், கட்டிழந்தாள் என்றிப்படிப் பலவும் இழந்ததாகச் சொல்லப்படுகிறது. இதனால், பகவத்விஷயத்தில் ப்ராவண்யம் அதிகரித்தமையும், அபேக்ஷிதமான படி ஸம்ச்லேஷம் கிடையாமையாலே மேனி மெலிந்தமையும், கட்டுக்கு அடங்காமையுமாகிற விவை சொல்லப்படுகின்றனவென்றுணர்க.

கீழ் நாலாம்பத்தில் * ஏறாளுமிறையோனும் * என்கிற திருவாய்மொழியில் "மாறாளன் கவராத மணிமாமைகுறைவிலமே" "மணிமாயன்கவராத மடநெஞ்சால் குறைவிலமே" என்றிப்படித் தாமே வேண்டாவென்று உபேக்ஷித்த ஆத்மாத்மீயங்களெல்லாம் இப்போது தன்னடையே கழிந்து செல்லுகிறபடி சொல்லுகிறது. எம்பெருமானுடைய ஓரோ அவதார சேஷ்டிதங்களையும் ஓரோ திவ்யகுணங்களையும் நினைக்க நினைக்க, தாம் பரவசராய் மேனிமெலிந்து ஆவி நீராயுருகுகின்றமையை ஆழ்வார் அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறாராயிற்று.

மாலுக்கு வையமளந்தமணாளற்கு *
நீலக்கருநிற மேகநியாயற்கு *
கோலச்செந்தாமரைக் கண்ணற்கு * என்கொங்கல
ரேலக்குழலி இழந்ததுசங்கே. 1

| | | | |
|---|---|---|---|
| மாலுக்கு | அடியார் பக்கலில் வியாமோஹமுள்ளவரும் | கோலம் செந்தாமரை கண்ணற்கு | அழகிய செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவருமான எம்பெருமான் விஷயத்தில் ஈடுபட்டதனால் |
| வையம் அளந்த மணாளற்கு | பூமிமுழுவதையும் (த்ரிவிக்ரமனாய்) ஸ்வாதீனப்படுத்திக் கொண்ட மணவாளரும் | என் கொங்கு அலர் ஏலம் குழலி இழந்தது சங்கு | தேனொழுகும் மலர்களணிந்து பரிமளம் மிக்க கூந்தலையுடையளான என் மகள் இழந்தது கைவளையாம். |
| நீலம் கரு நிறம் மேகம் நியாயற்கு | செய்த்துக் கறுத்த நிறத்தையுடையமேகத்தை யொத்தவரும் | | |

* * * [மாலுக்கு.] இத் திருவாய்மொழியிலுள்ள விசேஷ்ய பதங்கள் யாவும் விசேஷணமாத்ரமாய் நின்று அந்வயிக்கும். அதாவது — 'மால்' என்கிற சொல்லுக்கு இங்கு வியாமோஹமுடையவன் என்று பொருளானாலும் வியாமோஹம் என்றவளவே பொருளாகக் கொள்ளத்தக்கதென்க. இப்படியே ஒவ்வொன்றும் காண்க. "செந்தாமரைக் கண்ணற்கு" என்றதற்கு கண்களையுடையவன் என்று பொருளானாலும் கண்கள் என்றவளவிலேயே பொருளை நிறுத்திக் கொள்க. எதற்காக இப்படியென்னில்; ஒவ்வொரு விசேஷணம்சங்களையும் நினைத்து என்மகள் தளர்கின்றாள் என்று சொல்லுவதே இங்குச் சுவையுடைத்து.

என் மகள் மாலுக்குச் சங்கிழந்தாள், வையமளந்த மணாளற்குச் சங்கிழந்தாள்; நீலக்கரு நிறமேகநியாயற்குச் சங்கிழந்தாள், கோலச் செந்தாமரைக்கண்ணற்குச் சங்கிழந்தாள்—என்றிங்ஙனே தனித்தனி யோஜித்து, அவன் ஆச்ரிதர்பக்கலில் கொண்ட வியா

மோஹத்தை நினைத்தவாறே சங்கிழந்தாள், அவன் வையமளந்த சில குணத்தை நினைத்தவாறே சங்கிழந்தாள், அவனது திருநிறத்தை நினைத்தவாறே சங்கிழந்தாள், அவனது செந்தாமரைக் கண்களை நினைத்தவாறே சங்கிழந்தாளென்கிறாள் என்க.

சங்கிழப்பதாகக் கூறுதலின் கருத்து மேனி மெலிந்தா ளென்பதேயாம். தலைமகள் தலைமகனைப்பிரிந்து வருந்துவதனால் உடல் சர்க்குப்போலாக, கைகளில் பொருத்தமாக அணியப் பெற்றிருந்த வளைகள் அவலீலயாகக் கழன்றுவிழுதல் இயல்பு. இவவிதமாக என்மகள் உடல் இளைக்கப்பெற்றாள் என்ற கருத்தைவைத்து 'என்...இழந்தது சங்கே' என்றாள் தாய். * யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:, கலிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தலிதாநி. * என்ற ச்லோகத்தின் தாற்பரியம் இங்கே நினைக்கத்தகும். அதாவது—நாயகன் நாயகியை நோக்கி 'என் கண்மணி! நான் உன்னைப்பிரிந்து ஓர் ஊருக்குச் செல்லுகின்றேன்' என்று சொல்லி வாய் மூடுவதற்குள்ளே அவளது கையில் அணியப்பட்டிருந்த வளைகளில் முன்னேயிருந்த வளைகள் கழன்று கீழே விழ்ந்தன. [உடம்பு க்ருசமாய்ப்போகத் தொடங்கிற்று என்கை.] அதனைக் கண்ட நாயகன் 'இவள் நமது பிரிவைப்பொறுத்திருக்கக் கூடியவளன்றாதலால் இவளைப் பிரிந்து நாம் வெளியேறலாகாது' என்று நினைத்து உடனே 'நயாமி' என்றானும். இது இரட்டுற மொழிதலால் இருவகையான பொருள்பெறும். ந, யாமி என்று இரண்டு பதங்களாகப் பிரித்தால் 'நான் போகிறதில்லை' என்று பொருள்படும். 'நயாமி' என்று ஒரு பதமாகவே கொண்டால் 'அப்படி நான் வெளியூர் போவதாயிருந்தால் உன்னையும் அழைத்துக்கொண்டு போகிறேன்' என்று பொருள்படும். தலைவி நிபுணையாகையாலே இவ்விரண்டு பொருள்களையும் தெரிந்துகொண்டாள். நயாமி என்ற இச்சொல் செவிப்பட்டக்ஷணத்திலேயே, முன்னம் கழன்று விழ்ந்த வளைகள்போக நின்ற வளைகள் படீலென்று வெடித்துத் துகளாய்ப் போயினவாம். நாயகனுடைய விச்லேஷம் ப்ரஸ்தாவத்தில் வந்தமாத்திரத்திலேயே நாயகியின் உடல் மிகவும் மெலிந்துபோம் என்பதும், அந்த விச்லேஷவார்த்தை மாறினவாறே உடம்பு பூரிக்குமென்பதும் இதனால் தெரிவிக்கப்பட்டதாம். ஆகவே 'இழந்தது சங்கே' என்றது - மேனி மெலிந்தாளென்றதற்குப் பர்யாயமாய் நின்றது.

மாலுக்கு = பகவத்கீதையில் ஒன்பதாமத்தியாயத்தில் (29) * ஸமோஹம் ஸர்வ பூதேஷு * என்ற ச்லோகத்தில் * மயி தே தேஷு சாப்யஹம் * என்றான் கண்ணபிரான். அங்கு கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி * அஹமபி தேஷு மதுத்க்ருஷ்டேஷ்விவ வர்தே* என்பது. என்னடியார்கள் என்மீது எவ்வளவு வியாமோஹம் கொண்டிருக்கிறார்களோ, நானும் அவ்வளவு வியாமோஹம் அவர்களின்மீது கொண்டிருப்பேன்; என்னிற் காட்டில் மேம்பட்டவர்களிடத்தில் நான் எப்படி வர்த்திப்பேனோ அப்படி அவர்கள் திறத்திலும் வர்த்திப்பேன் என்பது கருத்து. இப்படிப்பட்ட வியாமோஹ குணத்தை நினைத்து என் மகள் உருகுகின்றாளென்றவாறு.

வையமளந்த மணாளற்கு = * கஸ்த்வம் ப்ரஹ்மந்நபூர்வ: க்வச தவ வஸதி: யாகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி: கஸ்தே த்ராதா ஹ்யநாத: க்வசதவ ஜநக: ? நைவ தாதம் ஸ்மராமி, கிம்தே அபீஷ்டம் ததாமி? த்ரிபதபரிமிதா பூமிரத்யல்ப மேதத் த்ரைலோக்யம் பாவகர்ப்பம் பலிமிதி நிகதந் வாமனோ வஸ்ஸபாயாத், * எம்பெருமான் மாணுருவாய் மாவலிபக்கல் யாசிக்கச் சென்றபோது,

மாவலி கேட்கிறான் — கஸ் த்வம் ப்ரஹ்மந்! — அந்தணா! நீ யாவன்;

பகவான்—[அபூர்வ:] நான் இதற்குமுன்பு ஒருகாலும் யாசிக்கவந்தவனல்லேன் என்று மேலெழுந்த பொருள்; என்னில் முற்பட்டவன் எவனும் இல்லை! நானே யாவர்க்கும் முற்பட்டவன் என்பது ஹார்த்தமான பொருள்.

மாவலி — [க்வ ச தவ வஸதி: ?] உன் இருப்பிடம் யாது ?

பகவான் — [யா அகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி:] யாசகனுக்கு இருப்பிடம் என்று ஒன்றுண்டோ ? பிரமன் படைத்தவிடமெங்கும் தட்டித்திரிபவனே நான் என்பது மேலெழுந்த பொருள். * பரந்ததண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன் * ஆக்கையுள் ளுமாவியுள்ளு மல்லபுறத்தினுள்ளும் நீக்கமின்றியெங்கும் நின்றாய் * என்கிறபடியே நானில்லாத இடமில்லை என்பது ஹார்த்தமான பொருள்.

மாவலி — [கஸ் தே நாதா ?] நீ யாருடைய ஸம்ரக்ஷணையிலிருக்கிறாய் ?

பகவான் — [அநாத:] இந்தப் பிச்சைக்காரனுக்கு ஸம்ரக்ஷகருண்டோ ? காப்பார் கேட்பாரற்றுத் திரிந்துகொண்டிருக்கிறேன் என்பது மேலெழுந்த பொருள். உலகுக்கெல்லாம் நானே நாதனாதலால் எனக்கொரு நாதனுண்டோ ? என்பது, உள்ளுறை பொருள்.

மாவலி — [க்வ ச தவ ஜநக:] உன் தகப்பனார் எங்கே ?

பகவான் — [நைவ தாதம் ஸ்மராமி] சிசுப்பிராயத்திலேயே தாய் தகப்பன்மார்களை இழந்த அநாதனாகையால் தகப்பனாருடைய ஞாபகமே எனக்கில்லையென்பது மேலெழுந்தபொருள். உண்மையில் * மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன் * என்கிறபடியே தான் ஒருவர்க்கும் புத்திரனன்றிக்கே ஸர்வலோக பிதாவாதலால் தகப்பனே கிடையாதென்கை உள்ளுறை.

மாவலி — [கிம் தே அபீஷ்டம் ததாமி ?] உனக்கு என்ன தேவை ? உனக்கு நான் தரவேண்டியது என்ன ?

பகவான் — [த்ரிபத பரிமிதா பூமி:] மூவடி நிலம் வேண்டுமத்தனை. மூவுலகமும் என்பது உள்ளுறை.

மாவலி — [அத்யல்பம் ஏதத்] கல்ப வ்ருக்ஷத்தினிடத்துச் சென்று கௌபீநதானம் கேட்குமாபோலே என்னிடத்தில் வந்து இந்த அல்பதானம் விரும்புகின்றாயே ! என்றாம். இங்ஙனே சாதுரியமாகப் பேசி மூவடி நீரேற்றுப்பெற்று மூவுலகத்தையும் அளக்கப் புக்கவாறே “ மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில் தக்கதிதன்றென்று தானம் விலக்கிய சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய ” என்றும், “ என்னிதுமாயம் என்னப்பனறிந்திலன் முன்னையவண்ணமே கொண்டளவாயென்ற மன்னுநமுசியை வானில் சுழற்றிய ” என்றும் சொல்லுகிறபடியே செய்த விரோதிநிரஸனம் முதலியவற்றை நினைத்து அந்த அபதானத்திலே யீடுபட்டு என் மகள் உருகுகின்றாளென்றவாறு.

நீலக்கருநிறமேகநியாயற்கு = மேகத்தின் வடிவுபோன்ற வடிவை நினைத்து, அல்லது மேகத்தின் தன்மைபோன்ற தன்மையை நினைத்து உருகுகின்றாளென்கை. பெய்ய வேண்டிய இடமளவுஞ் சென்று பெய்யும் மேகம் ; எம்பெருமான் * வந்தருளி யென்னெஞ்சிடங்கொண்ட வானவர் கொழுந்து * என்கிறபடியே ஆங்காங்குச் சென்றருளி அநுக்ரஹிப்பன். மின்னலுள்ளகாலம் நீர்நிரம்பியிருக்கும் மேகம்; எம்பெருமானுக்கும் பிராட்டியோடு கூடியிருக்குங் காலத்திலே க்ருபாரஸம் விஞ்சியிருக்கும். “ இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது. அதில்லாமையாலே ராவணன் முடிந்தான் ” என்ற மூமுக்ஷுப்படி திவ்யஸூக்தி காண்க. இன்ன காலத்திலே மேகம் பெய்யுமென அறுதியிடவல்லார் ஆருமில்லை. பெய்யவேண்டிய காலத்தில் பெய்யாதொழியவும், பெய்வதற்கு ஸம்பாவனை யில்லாத காலத்தில் அசிந்திதமாகவந்து பெய்யவுங்கடவது மேகம். எம்பெருமான்படியு மப்படியே. * வந்தாய்போலே வாராதாய் வாராதாய்போல் வருவானே * என்பர். த்ரௌபதிக்கு மஹத்தான ஆபத்திலேவந்து முகங்காட்டா தொழிந்

தான் ; அபேக்ஷா நிரபேக்ஷமாகத் * தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டான் * என்றிப்படிப் பலபடிகளாலே மேகத்திற்கும் எம்பெருமானுக்கும் நியாயங்கள் ஒத்திருக்குமே ; அவற்றைப்பேசி யுருகுகின்றாளென்கை.

“ மேகநியாயன் ” என்றது மேகநிகாச, அல்லது மேகந்யாய என்ற வடசொல் விகாரமாகக் கொள்ளத்தகும். கருத்தில் வேற்றுமையில்லை.

கோலச் செந்தாமரைக் கண்ணற்கு = * பெருங் கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார் * என்று தாமே பேசும்படி எம்பெருமான் தனது செந்தாமரைக் கண்ணோக்கத்தைத் தம்மேல் ஒருமைப்படுத்தி * எங்கும் பக்கநோக்கறியான் என் பைந்தாமரைக்கண்ணனே * என்று நாச்சிமார் திருமுலைத் தடத்தாலே நெருக்கியணைத்தாலும் புரிந்து பார்க்கவறியாதிருந்த தன்மையை நினைந்து உருகுகின்றாளென்கை.

என் கோங்கலரேலக்குழலி = கூந்தலானது தலைக்கு அலங்காரமாயிருக்கும் ; கூந்தலில்லாத தலை வெறுக்கத்தக்கதாயிருக்கும். அதுபோல வணக்கத்தோடுகூடிய தலை கொண்டாடத் தகுந்ததாகவும் வணக்கமற்ற தலை வெறுக்கத்தக்கதாகவு மிருக்குமாதலால், கூந்தலென்பதற்கு வணக்கத்தை ஸ்வாபதேசார்த்தமாகக் கொள்ளலாம். வணக்கத்திற்குப் பரிமளமாவது — அந்த வணக்கம் பகவத்விஷயத்தளவிலே நிற்கையன்றிக்கே பாகவதபர்யந்தமாகை. *திருமால் திருப்பேர் வல்லாரடிக்கண்ணி சூடியமாறன்* என்று தாமே பணித்தபடி பாகவத பக்தி நிரம்பியவர் என்றவாறு. .... 1

சங்குவில்வாள் தண்டு சக்கரக்கையற்கு *
செங்கனிவாய்ச் செய்யதாமரைக்கண்ணற்கு *
கோங்கலர் தண்ணந்துழாய் முடியானுக்கு * என்
மங்கையிழந்தது மாமைநிறமே. ... .... 2

| | |
|---|---|
| சங்கு வில் வாள் தண்டு சக்கரம் கையற்கு | பஞ்சாயுதங்களையும் திருக்கையிலே உடையவரும் |
| செம் கனி வாய் செய்ய தாமரை கண்ணற்கு | சிவந்த கனிபோன்ற அதரத்தையும் செந்தாமரைக் கண்களையுமுடையவரும் |
| கோங்கு அலர் தண் அம் துழாய்முடியானுக்கு | தேனொழுகப் பெற்றுக் குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையைத் திருமுடியிலுடையவருமான எம்பெருமான் விஷயத்திலீடுபட்டதனால் |
| என் மங்கை இழந்தது | என் பெண்பிள்ளை யிழந்தது |
| மாமை நிறம் | அழகிய நிறமாம். |

* * * [சங்குவில்வாள்.] இப்பாசுரத்தில், தன் மகள் மாமை நிற மிழந்ததாகச் சொல்லுகின்றாள். மாமை நிறமாவது பெண்மைக்கு அஸாதாரணமான நிறம் என்பர். எம்பெருமானது சில திருக் குணங்களை நினைத்து ‘ இத்தகைய குணசாலியோடு நமக்கு நித்ய ஸம்ச்லேஷம் வாய்க்கவில்லையே ! ’ என்று நைந்து நிறம் வேறுபட்டாளென்கிறது.

சங்குவில்வாள் தண்டு சக்கரக்கையற்கு = என்பதனால் பஞ்சாயுதங்களோடு கூடியிருக்கும் நிலைமையை நினைந்து உருகுகின்றமை சொல்லுகிறது. * பாது ப்ரணதரக்ஷாயாம் விலம்ப மஸஹந்நிவ, ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸ ந: ஸ்ரீரங்கநாயக: * என்று, அடியார்களின் விரோதிகளைத் தொலைப்பதற்காகவேயன்றோ பஞ்சாயுதங்களையும் நம் பெருமான் அநவரதமும் ஏந்தியிருப்பது : அப்படியிருக்க நம் விரோதிகளைத் துணித்து நம்மைச் சடக்கெனத் திருவடி சேர்த்துக் கொள்ளுதல் இவற்கு அருமையாயிற்றோ ! என்று உருகுகின்றாளென்கிறாள்.

செங்கனிவாய் = கொவ்வைக்கனிபோன்ற அதரம் படைத்திருப்பது என் போன்ற காதலிகள் பருகுவதற்கன்றோ? * எங்தொண்டை வாய்ச் சிங்கம்! வாவென்றெடுத்துக் கொண்டு அங் தொண்டைவாயமுதாதரித்து, ஆய்ச்சியர் தம்தொண்டைவாயால் தருக்கிப் பருகு மிச் செங்தொண்டைவாய்* என்கிறபடியே ஆய்ச்சியர்கட்கு எளிதான செங்கனி வாய் எனக்கு அரிதாகவேணுமோ? என்று உருகுகின்றாளென்கை.

செய்யதாமரைக் கண்ணற்கு = "ச்ரமணிவிதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு சாபமிழிந்தென்னைப்பண்ணுமிறே" (ஆசார்யஹ்ருதயம்) என்கிறபடியே சபரியையும் விதுரரையும் ரிஷிபத்னிகளையும் பரிசுத்தர்களாக ஆக்கின கணக்கிலே என்னையும் பரிசுத்தப்படுத்தின திருக்கண்ணோக்கம் இப்படி அரைகுறையாக நின்றுவிட வேணுமோ? என்று நைகின்றாளென்கை.

கொங்கலர் தண்ணந்துழாய்முடியானுக்கு = நம்பெருமான் திரு மூடியிலே திருத்துழாய் வளையம் சாத்தியிருப்பது எதற்காக? நானே ஸர்வலோக ஸம்ரக்ஷகனென்று தனி மாலையிட்டிருக்கிறபடியன்றோ? உலகத்தையெல்லாம் ரக்ஷித்துப் புகழ்படைத்திருக்கின்றவர் என்னொருத்தியையும் ரக்ஷியாதே உபேக்ஷித்திருந்தால் இது முடிசூடியிருக்குந்தகைமைக்குத் தகுதியோ! என்று நைகின்றாளென்கை. ... 2

நிறங்கரியானுக்கு நீடுலகுண்ட *
திறங்கிளர்வாய்ச் சிறுக்கள்வரவற்கு *
கறங்கியசக்கரக் கையவனுக்கு * என்
பிறங்கிருங்கூந்தல் இழந்ததுபீடே. 3

| | | | |
|---|---|---|---|
| நிறம் கரியானுக்கு | கருநிற முடையவரும் | கறங்கிய சக்கரம் கையவனுக்கு | சுழலும் திருவாழியைக் கையிலே உடையவருமான பெருமான் விஷயத்தில் ஈடுபட்டதினால், |
| நீடு உலகு உண்ட திறம் கிளர் வாய் | (பிரளய காலத்தில்) விசால லோகங்களையும் அமுது செய்தபடி தோற்றுகிற திருப்பவளத்தை யுடையராய்க்கொண்டு | என் பிறங்கு இரு கூந்தல் | விளங்குகின்ற அடர்ந்த கூந்தலை யுடையவளான என் மகள் |
| சிறு கள்வர் அவற்கு | சிறியவடிவிலே பெரியவுலகங்களை மறைத்துவைத்தவரும் | இழந்தது பீடு | இழந்தது பெருமையாம். |

* * * நிறங்கரியானுக்கு = நான் பிரிவாற்றாமையாலே உடம்பு வெளுத்துக் கிடக்க அவர் மேனி நிறம் குறியழியாமே பசுகுபசுகென்றிருக்கிற அழகு என்னே! என்று நைகின்றாளென்கை. நீடுலகுண்ட திறம் கிளர்வாய் = *அண்டரண்ட பகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரை முற்றுமுண்ட கண்டம் * என்கிறபடியே அன்று உலகமெல்லாம் பிரளயாபத்து அடையாதபடி காத்தருளின திருவாயையுடையவன் என்று கதைகளில் கேட்கிறோமத்தனையன்றி அத்தகைய ரக்ஷகத்வம் நம்மளவில் ஒன்றுமில்லையே! என்று உருகுகின்றாளென்கை.

சிறுக்கள்வரவற்கு = "சிறு வயிற்றிலே பெரிய லோகங்களை வைத்து, பரிச்சேதிக்கவொண்ணாத சேஷ்டிதத்தையுடையவனுக்கு" என்பது ஈடு. அந்த சேஷ்டிதத்திலீடுபட்டு நைகின்றாளென்றவாறு. "சிறுக்கள்ளனவற்கு" என்றும் பாடமுண்டு.

கறங்கிய சக்கரக்கையவனுக்கு = கையுந்திருவாழியுமான அழகைக்காட்டி என்னுள்ளங் கொள்ளைகொண்டபெருமான் இப்போது இங்ஙனே உபேக்ஷித்திருத்தல் தகுதியோவென்று நைகின்றாளென்கை. அன்றியே, * காசிவிப்லோஷ சைத்யக்ஷபண தரணிஜத் வம்ஸ ஸௌர்யாபிதாக க்ராஹ த்வேதாத்வ மாவித்ருடா * (ஸுதர்சநசதகம்) என்கிறபடியே காசீதஹனத்திலும் சிசுபால வதத்திலும் நரகாஸுர ஸம்ஹாரத்திலும் ஜயத்ரத

வதத்தில் ஸூர்யனைமறைப்பதிலும் முதலையைத் துணித்தலிலும் மாவியை மடித்தலிலும் மற்றும் பலபல. கிரிசைகளிலும் தனது விக்கிரமத்தை வலிதாகக் காட்டின திருவாழியாழ்வான் என்னுடைய விரோதிநிரஸனத்திலே வியாபரியாதிருத்தல் என்னோவென்று நைகின்றாளென்னவுமாம். ... ... ... 3

பீடுடைநான்முகனைப் படைத்தானுக்கு *
மாடுடைவையம் அளந்தமணாளற்கு *
நாடுடைமன்னர்க்குத் தூதுசெல்நம்பிக்கு * என்
பாடுடையல்குல் இழந்ததுபண்பே. 4

| | | | |
|---|---|---|---|
| பீடு உடை நான் முகனை | பெருமைபொருந்திய பிரமனை | நாடு உடை மன்னர்க்கு | நாட்டுக்குக் கடவரான பாண்டவர்களுக்காக |
| படைத்தானுக்கு | (தனது திருநாபிக்கமலத்தில்) படைத்தவனும் | தூது செல் நம்பிக்கு | தூதுசென்றவனுமான பெருமான் விஷயத்தி லீடுபட்டதனால் |
| மாடு உடை வையம் | வளமுதியான பூமியை | என் பாடு உடை அல்குல் | பரந்த நிதம்பத்தை யுடையவளான என்மகள் |
| அளந்த மணாளற்கு | (திரிவிக்கிரமனாகி) அளந்துகொண்ட மணவாளனும் | இழந்தது பண்பு | இழந்தது தன் இயற்கையை. |

* * * [பீடுடை நான்முகனை.] இப்பாட்டில் தன்மகள் பண்பிழந்தாளாகக் கூறுகின்றாள். பண்பாவது இயற்கையான தன்மை. எம்பெருமானது ஓரோகுணங்களை நினைத்து விகாரப் படுகின்றாளென்றவாறு.

பீடுடைநான்முகனைப் படைத்தானுக்கு = உலகில் ருத்ரனுக்கு மேற்பட தெய்வமில்லையென்று பலர் மயங்கிக்கிடப்பார்கள்; அந்த ருத்ரனையோ நான்முகன் படைத்தவன்; அந்த நான்முகனையும் திருநாபிக்கமலத்திலின்று படைத்தவன் எங்கள் பெருமான்; ஆகவே *யாம் கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ? * (திருவரங்கக்கலம்பகம்) என்னும்படியான பரத்வம் பெற்றிருக்க, அந்தப்பரத்வம் காட்டி என்னை யிடுபடுத்திக்கொண்டவன் என்று சொல்லி நைகின்றாளென்க.

மாடுடைவையமளந்த மணாளற்கு = தன் திருவடியின்கீழே ஒதுங்கவேணுமென்னும் நினைவு இல்லாதாரையும் ஹடாத்தாக [உலகளக்கிற வியாஜத்தாலே] தன்னடிக்கீழ் ஆக்கிக் கொண்டவன் அபிநிவேசம்மிக்க என்னை மாத்திரமேயோ திருவடிக்கு அகப்படுத்திக்கொள்ளாதொழிவது! என்று சொல்லி நைகின்றாள்.

காடுடைமன்னர்க்குத் தூதுசெல்நம்பிக்கு = சிலர், கழுத்திலே ஓலைகட்டித் 'தூதுபோ' என்றால் அப்படியே செய்து பாண்டவ தூதனென்று பேர்படைத்த மஹாஸௌலப்ய குணத்தை நினைத்து உருகுகின்றாளென்கை. எம்பெருமான் ஸ்ரீராமனாக ஓர் அவதாரமெடுத்தான்; அப்போது மாருதி தூதக்ருத்யம் செய்த பெருமையைப் பார்த்து 'இங்ஙனே தூதுசெல்லப்பெறும் பாக்கியம் நமக்கும் கிடைக்கவேண்டாவோ?' என்று சாலவும் குதூகலித்திருந்தான்; அப்போது தான் க்ஷத்ரிய ஜாதியிலே அவதரித்திருந்தமையாலே தன்னைத் தூது போகவிடுவார் ஒருவருமில்லையாயிற்று; அக்குறைதீர இடைப்பிள்ளையாய்ப்பிறந்து * தூதுசென்றாய் குருபாண்டவர்க்காய் * இன்னார் தூதனென நின்றான் * என்கிறபடியே தூதனாகி, அவாப்தஸமஸ்தகாமனாக ஆனானென்று அடியறிந்தவர்கள் ஈடுபடுவர்கள். இங்கு நம்பி என்ற சொல்லால் இவ்வர்த்தம் தெரிவிக்கப்படுகின்றது. நம்பி—குணபூர்ணன் என்கை. 'தூது செல் நம்பி' என்கையாலே தூதுசெல்லப்பெறுகையினாலேயே குணபூர்ணனானானென்கிறது. "நாடுடைய ராஜாக்களான பாண்டவர்களுக்குத் தூதுபோய் அத்தாலே பூர்ணனானவனுக்கு" என்பது ஈடு.

கண்ணபிரான் துரியோதனனிடம் தூதுசெல்கிற காலத்திலே பாண்டவர்கள் நாட்டை யிழந்து கிடக்கையாலே அப்போது அவர்களை நாடுடை மன்னராகச் சொல்லலாமோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; இதற்கு நம்பிள்ளை அருளிச்செய்கிறார்—"இருக்கைக்கு ஒரு குரிச்சியும் கொடோம் என்று ராஜ்யம்பண்ணுகிறவர்கள் துர்யோதனாதிகளாயிருக்க, பாண்டவர்களை நாடுடை மன்னரென்கிறது பகவதபிப்ராயத்தாலே" என்று. ... ... ... 4

பண்புடைவேதம் பயந்தபரனுக்கு *
மண்புரைவையம் இடந்தவராகற்கு *
தெண்புனற்பள்ளி எம்தேவபிரானுக்கு * என்
கண்புனைகோதை இழந்ததுகற்பே. 5

| | | | |
|---|---|---|---|
| பண்பு உடை வேதம் பயந்த பரனுக்கு | சீர்மைமிக்க வேதங்களைப் (பிரமனுக்கு) உபகரித்தருளின பரம புருஷனும், | தெண் புனல் பள்ளி எம் தேவ பிரானுக்கு | தெளிந்த நீரையுடைய சமுத்திரத்திலே பள்ளிகொண்ட தேவபிரானுமான எம்பெருமான் விஷயத்தில் (ஈடுபட்டு) |
| மண்புரை வையம் இடந்த வராகற்கு | மண்மிக்க பூமியை யிடந்தெடுத்த வராஹமூர்த்தியும், | என் கண்புனை கோதை இழந்தது கற்பு | கண்ணைக்கவர்கின்ற கூந்தலையுடையளான என்மகள் இழந்தது அறிவுடைமை. |

* * * [பண்புடை வேதம்.] இப்பாட்டில் தன்மகள் கற்பிழந்தாளாகக் கூறுகின்றாள்- "கற்பு—கல்வி; அதாவது ஜ்ஞானம்" என்பது ஈடு. தன்னறிவையிழந்தாளென்றபடி. அறிவு புஷ்கலமாயிருக்கையாவது - எதிலும் ஸந்தேஹமில்லாமலும் விபரீதவுணர்ச்சியில்லாமலும் மறப்பில்லாமலுமிருத்தல். அறிவையிழக்கையாவது - ஸந்தேஹவுணர்ச்சியும் விபரீத வுணர்ச்சியும் மறப்புமுடைமை. எம்பெருமான் அடியார்களுக்குப் பல காரியங்கள் செய்தருளினதாக சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகின்றதே! அதெல்லாம் உண்மையாயிருக்குமோ இராதோ என்று தன்மகள் சிலஸமயங்களில் ஸந்தேஹப்படுவதாகவும், சிலஸமயங்களில் 'அதெல்லாம் பொய்தான், வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளுக்குக் கைக்கூலிகொடுத்து எழுதுவித்துக்கொண்டதத்தனையே' என்று விபரீத நிச்சயம் கொள்வதாகவும் தாய் கூறுகின்றாளென்க.

பண்புடைவேதம் பயந்தபரனுக்கு = *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை * என்று உபநிஷத்து ஓதினபடியே வேதங்களைப் பிரமனுக்கு ஓதுவித்தானென்கிறபடியையுணர்ந்து, இங்ஙனே கண்ணிழந்தார்க்குக் கண் கொடுத்து அறிவிழந்தார்க்கு அறிவு கொடுத்துப் பேருதவிசெய்யுமவன் எனக்கு உள்ளதையும் கொள்ளை கொள்ளாநின்றானே! என்று நைகின்றாள் என்க. வேதத்திற்குப் பண்புடைமையாவது—ஈச்வரனை உள்ளபடியே காட்டித்தரும் நீர்மையாம்.

ஆசார்யஹ்ருதயம் முதல் பிரகரணத்தில் "பண்ணார்பாடல் பண்புரையிசைகொள் வேதம்போலே" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் — "பண்புடை வேதம் என்றொழிய பண்புரை வேதம் என்ற பாடம் வியாக்கியானங்களில் கண்டதில்லையேயாகிலும் ஆப்ததமரானவிவர் இப்பிரபந்தத்திலே இப்படி அருளிச்செய்கையாலே இப்படியும் கொள்ளவேணும்" என்று அருளிச்செய்திருக்கையாலே இங்கு மூலத்தில் 'பண்புரை வேதம்' என்பதாகவும் ஒரு பாடம் கொள்ளத்தகும். "பண்புரை வேதம் என்றது பண்ணைப் புரைந்திருக்கிற வேதமென்றதாய் அப்பண்ணுக்கு ஆச்ரயமான வேதமென்றபடி" என்று மாமுனிகளே வியாக்கியானமும் செய்தருளினர்.

மண்புரை வையமிடந்த வராகற்கு = * பாசி தூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள் மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாந்தேசுடைய தேவர் * என்கிற படியே, என்னைப்போலே ஒருத்தியை உத்தரிக்கைக்காகத் தன்னையழியமாறியும் இழிவான வடிவெடுத்து அரிய பெரிய காரியஞ்செய்தவன் எனக்கு அந்தத்திருக்கோலத்தைக் காட்டவும் மாட்டேனென்கிறானேயென்று நைகின்றாளென்க. * எறிதிரை வையம்முற்றும் ஏனத் துருவாயிடந்தபிரான் ஞானப் பிரானையல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே * என்று முதல் பிரபந்தத்திலும், * கோலவராகமொன்றாய் நிலங் கோட்டிடைக் கொண்ட வெந்தாய் ! உன்னைப் பெற்றினிப் போக்குவனோ * என்று சரமப் பிரபந்தத்திலும் ஆழ்வார் மிக ஈடுபட்ட திருக்கோலம் இதுவேயன்றோ.

தெண்புனற்பள்ளி = அழிந்த ஜகத்தை மீண்டும் படைத்தற்காக ஏகார்ணவத்திலே பள்ளிகொண்டு ஸங்கல்பித்து ஸ்ருஷ்டி செய்வதாக நூற் கொள்கை. இங்ஙனே மேன்மேலும் படைக்கவிருக்கிறவர் ஏற்கனவே படைத்த வென்னைப் பாழ்படுத்தலாமோ வென்று கரைகின்றாளென்க. இங்கே ஈடு :— "ஸத்தையே பிடித்து உண்டாக்கி அறிவு கொடுக்கக்கடவ அவன்கிடீர் உண்டான அறிவை வாங்கிக் கொள்ளுகிறான் !"

எம் தேவபிரானுக்கு = பிரயோஜநாந்தரபரர்களான தேவர்களுக்காக அரியன செய்து உபகாரங்கள் பண்ணுபவன் ஒரு பிரயோஜனத்தையும் விரும்பாத என்திறத்திலே இப்படி உபேக்ஷித்திருக்கவேணுமோவென்று நைகின்றாள். * பேணலமில்லாவரக்கர் முந்நீரபெரும்பதிவாய் நீணகர் நீளெரிவைத்தருளாயென்று, நின்னைவிண்ணோர் தாள்நிலம் தோய்ந்து தொழுவர் நின்மூர்த்தி பல்கூற்றிலொன்று காணலுமாங்கொலென்றே வைகல் மாலையுங் காலையுமே * (திருவிருத்தம்.) என்று, இந்திரன் முதலிய தேவர்கள் எம்பெருமானை முச்சந்தியும் தொழுவது 'எங்கள் விரோதிகளைத் தொலைக்க எழுந்து வரவேணும்' என்றே தவிர, அவனது திவ்யமங்கள விக்ரஹத்தின் அழகை சேவிக்கவேணுமென்கிற அவாவினால் ஒருவராவது தொழுவதுண்டோ? இல்லை ; நான் அப்படி ஒரு பிரயோஜனத்திற்காக வன்றிக்கே ஸ்வயம் பிரயோஜனமாகத் தொழச் செய்தேயும் என்னளவிலே கருணை பிறக்கவில்லையே ! என்று நைகின்றாளென்பது உள்ளுறை.

கண்புனை கோதை—கண்டார் கண்ணைக் கவரும்படியான மயிர் முடியையுடைய இப் பெண்பிள்ளை என்றபடி. ... .... ... ... 5

கற்பகக்காவன நற்பலதோளற்கு *
பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு *
நற்பலதாமரை நாண்மலர்க்கையற்கு * என்
விற்புருவக்கொடி தோற்றதுமெய்யே. 6

| | | | |
|---|---|---|---|
| கற்பகம் கா அன நல் பல தோளற்கு | கற்பகச்சோலைபோன்ற நல்ல பல திருத்தோள்களையுடையவனும் | நல் பல தாமரை நாள் மலர் கையற்கு | அப்போதலர்ந்த தாமரைப்பூப் போன்று விலக்ஷணமான பல திருக்கைகளையுடையவனுமான எம்பெருமான் திறத்தில் ஈடுபட்டதனால் |
| சுடர் பொன் குன்று அன்ன பூ தண் முடியற்கு | சுடர்மிக்க பொற்குன்றம் போன்ற மிகவழகிய திருவபிஷேகத்தையுடையவனும் | என் வில் புருவம் கொடி | வில்போன்றபுருவத்தையுடையளான என் பெண்கொடி |
| | | தோற்றது | இழந்தது |
| | | மெய் | தன்னுடம்பையாம். |

* * * [கற்பகக்காவன] இப்பாட்டில் 'தோற்றது மெய்யே' என்று, தன்மகள் சரீரத்தை இழந்தாளாகச் சொல்லுகிறாள். சரீரம் தன்வசமாயிருக்கையன்றியே பரவசமாகப் பெற்றாளென்றபடி. அதாவது = * காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் என்னும்படியான நிலைமையை எய்தினாளென்கை.

கற்பகக்காவன நற்பல தோளற்கு = கற்பகக்கா—கற்பகச்சோலை; அன என்றது 'அன்ன' என்றபடி (தொகுத்தல் விகாரம்.) கற்பகச் சோலையையொத்த நல்ல பல தோள்களையுடையவன் என்றவாறு. ஸர்வஸ்வதானம் பண்ணிப் புகழ்படைத்த திருக் கைகளாகையாலே கற்பகச் சோலையோடு ஒப்பிடப்பட்டன வென்க. * தோள்களா யிரத்தாய் * என்னும்படியாக, அடியார்களை வாரியெடுத்து அணைக்கைக்குப் பல்லாயிரம் திருத்தோள்கள் உண்டாயிருக்க, பாவியேனைத் தழுவாதே உபேக்ஷிக்கிறபடி என்னே! என்று நைகின்றாள்.

பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு = ஒளியையுடைய பொன்மலைபோலே யாய் ஸ்ப்ருஹணீயமான திருவபிஷேகத்தை யுடையவன். * ஆதிராஜ்யமதிகம் புவனா நாம் ஈச தே பிசுநயந் கில மௌலி: * என்கிறபடியே உலகங்களுக்கெல்லாம் ஒரு தனி நாயகனாயிருக்கின்ற தன்மைக்கு ஸூசகமாகத் திருவபிஷேகமணிந்திருந்து என் னொருத்தியை உபேக்ஷித்திருத்தல் தகுதியோ! என்கிறாளென் மகள்;

நற்பலதாமரை நாண்மலர்க்கையற்கு = நல், பல என்பவை கைக்கு விசேஷணம். விலக்ஷணமாயும் பலவாயும் தாமரை மலர்போன்றனவாயுமிருக்கிற திருக்கைகளுடைய வன். *பறவையேறு பரம்புருடா! நீ யென்னைக் கைக்கொண்டபின்* என்கிறபடியே என கையைப் பிடிப்பதற்காகவன்றோ அவன் இப்படி விலக்ஷணமான திருக்கைகள் படைத்தது! என்கிறாளென் மகள்.

என்விற்புருவக்கோடி = கொடியென்றது பெண்ணுக்கு வாசகம்; கொடிபோன்ற வன் என்கை; வில்போன்ற புருவத்தையுடைய என் மகள் என்றதாயிற்று. ஆழ்வார் புருவம் நெறித்தவிடத்தே எம்பெருமான் காரியம் செய்யவேண்டும்படி யிருக்கை. அதா வது—ஆழ்வார்ஸம்பந்தமுடையார் பக்கலிலே எம்பெருமானுடைய விஷயீகாரம் செல் லும்படியாகை. * யத்ப்ருபங்கா: ப்ரமாணம் * என்னுமாபோலே. .... ... 6

மெய்யமர்பல்கலன் நன்கணிந்தானுக்கு *
பையரவினணைப் பள்ளியினானுக்கு *
கையொடுகால்செய்ய கண்ணபிரானுக்கு * என்
தையலிழந்தது தன்னுடைச்சாயே. 7

| | | | |
|---|---|---|---|
| மெய் அமர் பல் கலன் நன்கு அணிந்தானுக்கு | திருமேனிக்குப் பொருந்தமான பல திருவாபரணங் களை நன்றாக அணிந்து கொண்டிருப்பவனும் | கையொடு கால் செய்ய கண்ண பிரானுக்கு | திருக்கைகளும் திருவடிகளும் சிவந்திருக்கப் பெற்றவனு மான கண்ணபிரான் விஷ யத்தி லீடுபட்டதனால் |
| பை அரவு இன் அணை பள்ளியினானுக்கு | படமெடுத்த ஆதிசேஷனென்ற இனிய படுக்கையிலே துயி லமர்ந்தவனும் | என் தையல் இழந்தது தன்னுடைய சாய் | என் மகள் இழந்தது தனது ஒளியாம். |

* * * [மெய்யமர்பல்கலன்.] இப்பாட்டில் 'என்தையலிழந்தது தன்னுடைச்சாய்' என் கிறாள். சாயா என்னும் வட சொல் சாய் எனத்திரிந்தது. சாயையாவது ஒளி. லாவண்ய மிழந்தாளென்கை. உரு வேறுபாடுற்றாளென்றவாறு.

மெய்யமர் பல்கலன்நன் கணிந்தானுக்கு = * செங்கமலக்கழலில் சிற்றிதழ் போல் விரலில்சேர் திகழாழிகளுங் கிண்கிணியும் அரையில் தங்கிய பொன்வடமும் தாள நன் மாதுளையின் பூவொடு பொன்மணியும் மோதிரமும் கிறியும் மங்கலவைம்படையும் தோள்வளையும் குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியுமொத்திலக * என்கிறபடியே ஸகல திவ்யாபரணங்களுமணிந்துகொண்டு விளங்குவது என்னோடு ஸம்ச்லேஷிக்கைக் கன்றோ; அது செய்யாமையாலே இத்தனையும் காட்டி வெறித்த நிலாவாகா நின்றதே! என்கிறாளென் மகள்.

பையரவினணைப் பள்ளியினானுக்கு = திருவனந்தாழ்வானொருவனையேதான் படுக்கையாகக் கொள்ளவேணுமோ? * சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம் நின்றால் மரவடியாம் நீள் கடலுள் என்றும் புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு மணையாம் திருமாற்கரவு * என்கிறபடியே ஸகலவித கைங்கர்யங்களையும் அவனொருவனிடத்திலேயே கொண்டு சேஷனென்னும் பெயர் அவனுக்கேதான் தரவேணுமோ? என்னையும் சிறிது சேஷப்படுத்திக் கொண்டாலாகாதோ வென்கிறாளென்மகள். அன்றியே, * பாவியேன் தோன்றிப் பாம்பணையார்க்கும் தம்பாம்புபோல் நாவுமிரண்டுள வாயிற்று நாணிலியேனுக்கே * என்கிறபடியே இரட்டை நாவுடையனான பாம்பரசனோடே கலந்துபழகி இப்படி பொய்யனாய்விட்டானே! என்று தளர்கின்றாளென்மகள் என்னவுமாம்.

கையொடுகால்செய்ய கண்ணபிரானுக்கு = நீலத்தடவரையிலே செந்தாமரை பூத்தாற்போலே பச்சை மாமலைபோன்ற திருமேனிக்குப் பரபாகமாகக் கையுங்காலும் சிவந்து விளங்கும்படியான ஆச்சரியமான அழகுபடைத்திருப்பது என்னோடே கலக்கைக்காகவென்றிருந்தேன்; அந்தோ! அப்படியில்லையே! என்று தளர்கின்றாளென்மகள் என்கிறாள் திருத்தாய். ... ... ... 7

சாயக்குருந்தம் ஒசித்தநம்பியற்கு *
மாயச்சகடம் உதைத்தமணாளற்கு *
பேயைப்பிணம்படப் பாலுண்பிரானுக்கு * என்
வாசக்குழலி இழந்ததுமாண்பே. 8

| | |
|---|---|
| குருந்தம் சாய ஒசித்த நம்பியற்கு | குருந்தமரம் வேரோடு பறியுண்டு சாயும்படி அதனை முறித்த அத்விதீயனும் |
| மாயம் சகடம் உதைத்த மணாளற்கு | க்ருத்ரிமமான (அஸுராவேசங்கொண்ட) சகடத்தைப் பொடிபடுத்தின மணவாளனும் |
| பேயை பிணம் பட பால் உண் பிரானுக்கு | பூதனையென்கிற பேய்ச்சி பிணமாகும்படி அவளது முலைப்பாலை யுண்டவனுமான எம்பெருமான் விஷயத்திலீடுபட்டதனால் |
| என் வாசம் குழலி | வாசனைபொருந்திய கூந்தலையுடையவளான என்மகள் |
| இழந்தது மாண்பு | இழந்தது தன் மாட்சிமையாம். |

* * * [சாயக்குருந்தம்.] இப்பாட்டில், என்னுடைய பெண்பிள்ளை தன்னுடைய மாட்சியை யிழந்தாளென்கிறாள். எவ்வளவோ பெருமையாக வாழ்ந்தவள் அப்பெருமையெல்லாம் போய் இங்ஙனே தரைப்பட்டுக்கிடக்கின்ற பரிதாபம் என்னே! என்கிறாள்.

சாயக்குருந்த மொசித்த நம்பியற்கு = கண்ணபிரான், யமுனையில் நீராடும் ஆயர் மங்கைகளின் துகிலை வாரிக்கொண்டு "குருந்திடைக்கூறை பணியாய்" என்று அவர்கள் இரக்கும்படி குருந்தமரத்தின்மேல் ஏறியிருப்பது வழக்கம். இதனையறிந்தவனும் கம்ஸனால் ஏவப்பட்டவனுமான ஓர் அஸுரன் கண்ணனை நலிவதற்காக அக்குருந்த மரத்தை ஆவேசித்துக்கிடந்தான்; அதையறிந்த கண்ணபிரான் அந்தமரத்தை முறித்து அவ்வசுரனைப் பிணமாக்கினன் என்பது வரலாறு. இப்படி குருந்தொசித்தும் மாயச் சகடினையுதைத்தும் பூதனையென்கிற பேய்ச்சியைப் பிணமாக்கியும் அவன் செய்த சிறுச் சேவகங்களை என்மகள் பாடிப்பாடி நைகின்றாளென்றதாயிற்று. ... ... 8

மாண்பமைகோலத்து எம்மாயக்குறளற்கு *
சேண்சுடர்க்குன்றன்ன செஞ்சுடர்மூர்த்திக்கு *
காண்பெருந்தோற்றத்து எம்காகுத்தநம்பிக்கு * என்
பூண்புனைமென்முலை தோற்றதுபோற்பே. 9

| | |
|---|---|
| மாண்பு அமை கோலத்து | அழகமைந்த வடிவை யுடையனான |
| எம் மாயம் குறளற்கு | எம்மையீடுபடுத்திக்கொள்ளும் மாயவாமனமூர்த்தியும் |
| சென் சுடர் குன்று அன்ன | உயர்ந்த சோதிமயமான குன்றுபோன்ற |
| செம் சுடர் மூர்த்திக்கு | செவ்விய சுடரையுடைய வடிவு கொண்டவனும் |
| காண் பெரு தோற்றத்து | அனைத்துலகும் காணப்பெற்ற சிறந்த ஆவிர்ப்பாவத்தை யுடைய |
| என் காகுத்தன் நம்பிக்கு | இராமபிரானுமான எம்பெருமான் விஷயத்திலீடுபட்டதனால் |
| என் பூண் புனை மென்முலை | ஆபரணங்களையணிந்த மெல்லிய முலைகளை யுடையளான என்மகள் |
| தோற்றது பொற்பு | இழந்தது அழகாம். |

* * * [மாண்பமை கோலத்து.] இப்பாட்டில் என்மகள் - அழகிழந்தாளென்கிறாள். தன்னழகாலே அவனைவசப்படுத்திக் கொள்ளப் பிறந்தவிவள் அவனழகிலே யீடுபட்டுத் தன்னழகை யிழந்தாளென்று வருந்துகிறாள்.

மாண்பமை கோலத்தெம்மாயக்குறளற்கு = * மன்னன் தன் தேவிமார் கண்டு மகிழ்வெய்த முன்னிவ்வுலகினை முற்றுமளந்தவன் * என்கிறபடியே மாவலியின் வேள்வியிலே குறட்பிரமசாரியா யெழுந்தருளின அழகை அந்த மாவலியின் தேவிமார் கண்டு ஊா! ஊா! இப்படியும் ஓரழகுண்டோ வென்று வியந்து 'இச்சிறுபிள்ளை எது கேட்டாலும் தானம் பண்ணியாகவேணும்' என்று கூறினார்களாம்: * க்ருத்திம் க்ருஷ்ணம்ருகஸ்ய வக்ஷஸி வஹந் ஆஷாடமம்ஸேர்ப்பயந், ஸ்வாத்யாயஸ்வரஸம்பதா பரிஷதாம் ப்ரீதிம் ஸமுத்பாதயந், யாச்ஞாயை பலியஜ்ஞவாடநிகடம் ப்ராப்தோ வடு: பாது வ: * என்னும்படியான அவ்வடிவழகை நினைந்து என்மகள் அழகிழந்தாளென்கிறாள். அப்படிப்பட்ட வடிவழகிலே சிறிதும் நெஞ்சு பறிகொடுக்கமாட்டாதே ஸ்வராஜ்யம் வேணுமென்றிவ்வளவே ஆசை கொண்டுவந்த இந்திரனுக்காக இத்தனைகாரியம் செய்பவன் என்னை இப்பாடுபடுத்துகிறானேயென்று தளர்கின்றாளென்கின்றாள். ... 9

பொற்பமைநீண்முடிப் பூந்தண்டுழாயற்கு *
மற்பொருதோளுடை மாயப்பிரானுக்கு *
நிற்பனபல்லுருவாய் நிற்குமாயற்கு * என்
கற்புடையாட்டி இழந்தது கட்டே. 10

| | |
|---|---|
| பொற்பு அமை நீள் முடி | அழகமைந்து உயர்ந்த கிரீடத்திலே. |
| பூ தண் துழாயற்கு | அழகிய குளிர்ந்த திருத்துழாயையுடையவனும் |
| மல் பொரு தோள் உடை | மல்லர்களோடு போர்செய்த திருத்தோள்களை யுடையவனும் |
| மாயம் பிரானுக்கு | அற்புதச் செயல்களைச் செய்யும் மஹோபகாரகனும் |
| நிற்பன பல் உரு ஆய் நிற்கும் | ஸ்தாவர ஜங்கமங்களாய் நிற்கின்ற பலவகைப் பதார்த்தங்களுமா யுள்ளவனும் |
| மாயற்கு | (அப்படி யிருக்கச் செய்தேயும் அவற்றின் குற்றங்கள் தன் மீது ஏறப்பெறாமலிருக்கும்) மாயனுமான பெருமான் திறத்திலீடுபட்டதனால் |
| என் கற்புடையாட்டி | தக்க அறிவுடையளான என் மகள் |
| இழந்தது கட்டு | இழந்தது எல்லாமுமாம். |

* * * [பொற்பமைநீண்முடி] இப்பாட்டில் 'என் கற்புடையாட்டி யிழந்தது கட்டே' என்கிறாள் திருத்தாய். கட்டு என்பதற்கு ஸ்த்ரீத்வமர்யாதை என்றும் 'எல்லாம்' என்றும் பொருள். ஸ்த்ரீத்வமர்யாதையையிழக்கையாவது — லஜ்ஜையோடும் அடக்கத்தோடும் கூடியிருக்கவேண்டிய தன்மையை இழத்தலாம். இப்பதிகத்தில் ஒவ்வொன்றை யிழந்தாளாகச் சொல்லிவந்தாள். பலசொல்லியென்? இழவாதது ஒன்றுண்டோ? எல்லாமுமிழந்தாள் என்கிறாள்.

பொற்பு — அழகு; அது அமைந்த திருவபிஷேகத்தின்மேலே திருத்துழாய் மாலை சாத்தியிருக்குமழகிலே என்மகள் நைகின்றாள்.

மற்போரு தோளுடை மாயப்பிரானுக்கு = கண்ணபிரான் பலராமனுடன் வில்விழவுக் கென்று கம்ஸன் மாளிகைக்கு எழுந்தருளும்போது இடைவழியில் கூனியிடம் சாந்து இரந்து பெற்றுத் திருமேனியில் பூசிக்கொண்டான்; உடனே கம்ஸனது அரண்மனை வாயிலில் மல்லர்களோடே போர்புரிய நேர்ந்தது. மல்லயுத்தமாவது ஆயுதசகாயம் சிறிதுமின்றிக்கே உடம்போடு உடம்பு பொருது செய்யும் சண்டை: அப்படிப்பட்ட சண்டை நிகழ்ந்தவளவிலும் திருமேனியிற்பூசின சாந்து சிறிதும் குறியழியாமேயிருந்த படியத்திலே யீடுபட்டு நைகின்றாளென்மகள் என்கிறாள். * ஏவிற்றுச்செய்வான் என்றெதிர்ந்து வந்த மல்லரைச் சாவத் தகர்த்த சாந்தணிதோள் சதுரன் * என்றபெரியாழ்வார் திருமொழிப் பாசுரம் இங்கு நினைக்கத்தகும்.

நிற்பன பல்லுருவாய் நிற்கும் மாயற்கு = ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான ஸகல பதார்த்தங்களுக்கும் அந்தர்யாமியாய் நிற்கச்செய்தே அவ்வவற்றிலுள்ள தோஷம் சிறிதும் தன்னளவில் தட்டாதபடியிருக்கிற ஆச்சரியத்திலே யீடுபட்டமை கூறிற்றாயிற்று. ()

கட்டெழில்சோலை நல்வேங்கடவாணனை *
கட்டெழில்தென்குருகூர்ச் சடகோபன்சொல் *
கட்டெழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர்*
கட்டெழில்வானவர் போகமுண்பாரே. 11

| | | | |
|---|---|---|---|
| கட்டெழில் சோலை | நறுமணம் மிக்க சோலையை யுடைத்தான | கட்டெழில் ஆயிரத்து | தொடையழகை யுடைத்தான ஆயிரத்தினுள்ளே |
| நல் வேங்கடம் வாணனை | திருவேங்கட மலையிலே வாழ் பவனான எம்பெருமான் விஷயமாக | இபத்தும் வல்லவர் | இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| கட்டெழில் தென் குருகூர் சடகோபன் சொல் | அரணழகு பொருந்திய தென் குருகூரில் அவதரித்த ஆழ்வார் அருளிச்செய்த | கட்டெழில் வானவர் போகம் உண்பார் | பரமவிலக்ஷணமான நித்ய ஸூரி போகத்தை அனுபவிக்கப் பெறுவர்கள். |

*** [கட்டெழில் சோலை] இப்பதிகம் கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிற பாசுரமிது. முழுதும் மிக அழகாக விளங்குகின்ற சோலைகளையுடைத்தான திருவேங்கட மலையிலே நித்யவாஸம் செய்தருளாநின்ற எம்பெருமான் விஷயமாக ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரத்தினுள்ளும் இப்பதிகம் வல்லார் ஸ்வரூபாநுரூபமான திவ்யபோகத்தை அநுபவிக்கப் பெறுவர்களென்று பயனுரைத்ததாயிற்று.

கீழ்ப் பத்துப் பாசுரங்களிலும் திருவேங்கட முடையானுடைய ப்ரஸ்தாவமே இல்லாமலிருக்க, இப்போது நிகமத்தில் "நல் வேங்கடவாணனை" என்று திருவேங்கடமுடையானைக் குறித்து இத்திருவாய்மொழி அருளிச்செய்ததாகக் கூறினவிது என்னே? எனின்; கீழே மூன்றாம் பத்தில் * சொன்னால் விரோதத்தில் * தென்னா தெனாவென்று வண்டு முரல் திருவேங்கடத்து என்னானையென்னப்பனெம்பெருமானுளனாக—என்னாவில்கவி யானொருவர்க்குங் கொடுக்கிலேன் * என்றருளிச் செய்தவராகையாலே இங்ஙனே கூறக்குறையில்லை யென்பர். 11

ஆழ்வார் திருவடிகளே சரணம் நம்பிள்ளை திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி - ஆறாம்பத்து - ஏழாந் திருவாய்மொழி.

## உண்ணுஞ்சோறு பருகுநீர்.

உரையவதாரிகை:—கீழ்த்திருவாய்மொழி போலே இத்திருவாய்மொழியும் தாய்பாசுரமாகவே செல்லுகிறது. படுக்கைத்தலையிலே பராங்குச நாயகியாகிய மகளுடன் கூடவே படுத்துக் கொண்டிருந்து மகளின் விரஹதாபத்துக்கு உபசாரங்கள் பண்ணிக் கொண்டிருந்த திருத்தாயார் படுக்கையைத் தடவிப்பார்த்தாள்; எங்கும் தேடிப்பார்த்தாள்; மகளைக் கண்டிலள். 'பேய் கொண்டதோ? பிசாசு கொண்டதோ?' என்று சங்கிக்கலாமாயினும் இவளுக்குத் திருக்கோளூரெம்பெருமானிடத்திலிருந்த ஆவலின் மிகுதியை நன்கு அறிந்தவளாகையாலே அத்திருப்பதிக்கே சென்றிருக்கவேணுமென்று அறுதியிட்டுஅதை வெளியிட்டுரைக்கும் பாசுரமாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

திருக்கோளூர் சென்று அவ்விடத்து எம்பெருமானோடே நித்யஸம்ச்லேஷம் பண்ணவேணுமென்றிருந்த ஆழ்வாருடைய விருப்பம் இத்திருவாய்மொழியாகப் பரிணமித்து விட்டது போலும்.

ஸ்வாபதேச முறைமையில் இங்கு அறியவேண்டிய விஷயமாவது—உலகத்தில் பெற்று வளர்த்துப் பெண்பிள்ளை யௌவனபருவத்தில் நாயகனிடத்துள்ள அன்புமிகுதியால் அவனிருப்பிடம் நோக்கிச் செல்லவேணுமென்று பதறுமளவில், படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் பொருந்ாதென்று தடுப்பவள் தாய் எனப்படுவாள். ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்தும் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணுமென்னுங் காதல் கிளர்ந்து அதனால் படிகடந்து நடக்கவேண்டி வந்த வளவில், இது ப்ரபந்நர் குடிக்கட்டுப்பாட்டுக்குச் சேராததென்று விலக்கி 'எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்க வேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்கப் பார்க்கிற நம: பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பது. ஆழ்வார்க்குப் பேற்றில் த்வரை விஞ்சுதமை ஒரு பக்கத்திலும், அவனுடைய பேற்றுக்கு நாமோ த்வரிப்பது! என்று ஆறியடங்கியிருத்தல் ப்ராப்தம் என்கிற அத்யவஸாயம் செல்லுகின்றமை ஒரு பக்கத்திலும் ஆக இவ்விரண்டும் கலந்து பரிமாறுகின்றமை இத்திருவாய்மொழியிலே தெரியும்.

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் மூன்றாம்பத்தில் * கள்வன் கொல்யானறியேன் * என்கிற பதிகம் ஒருபுடை இத்திருவாய்மொழியோடொத்திருக்கும். வயலாலிமணவாளன் பரகால நாயகியின் கையைப் பிடித்துக்கொண்டு போகிறபடியைக் கண்ணாலே கண்டு தாய் சொன்னது அங்கு. இங்கு அப்படியன்றிக்கே மகளுடைய தனிப்போக்கைத் தாய் சொல்லுகிறபடி.

ஆளவந்தார் கோஷ்டியிலே * உண்ணுஞ்சோற்றிற் பிராட்டிக்கு அஞ்சவேண்டுவது அதிகமோ, * கள்வன் கொல்லிற் பிராட்டிக்கு அஞ்சவேண்டுவது அதிகமோ? என்று விசாரம் நிகழ்ந்ததாம். "* கள்வன் கொல்லில் இருவராய்ப் போனமை சொல்லுகிறது; * உண்ணுஞ்சோற்றில் மகள் தனியே போனமை சொல்லுகிறது; இருவராய்ப் போனவர்களுக்கு வயிறெரியவேண்டுவது அத்தனை அவசியமன்றே; தனியே வழி போனவளுக்கன்றோ அதிகம் வயிறெரியவேண்டுவது" என்று அங்கிருந்த முதலிகள் சிலர் சொன்னார்களாம். அப்போது ஆளவந்தார் அருளிச்செய்தாராம்—"அங்ஙனன்று காண்மின், தனியே போனவளைப்பற்றி ஒரு பயமில்லை; இருவராய்ப் போனவிடத்திற்குத் தான் வயிறெரியவேணும்" என்று. இதன் கருத்தாவது—தனியே போனவள் தன்னுடைய லக்ஷ்யமான இடத்திற்கு நிரபாயமாகச் சென்று சேர்ந்திடுவள். இரு-

வரும் பரஸ்பரம் வ்யாமோஹத்துக்கு ஊற்றுவாயாகையாலே ஒருவரால் ஒருவர் மயங்கி விழுந்து என்னாகுமோ! என்று வயிறெரியவேண்டிற்றாகும் என்பதாம்.

ஈடு :—"ஆனாலும் எங்கேனும் போகிலும் இருவராயல்லதிராது அங்கு; தனியே போனவிவள் என்படுகிறாளோவென்று மிகவும் நொந்து கூப்பிடுகிறாள் இவளுடைய திருத்தாயார்." ... .... ... ... ... ... ... *

உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாம்
கண்ணன் * எம்பெருமானென்றென்றே கண்கள்நீர்கள்மல்கி*
மண்ணினுள்ளவன்சீர் வளம்மிக்கவனூர்வினவி*
திண்ணமென்னிளமான்புகுமூர் திருக்கோளூரே. 1

| | | | |
|---|---|---|---|
| உண்ணும் சோறு | உண்டு பசிதீர்க்க வேண்டும் படியான சோறும் | என் இள மான் | இளமான் போன்ற என் மகள் |
| பருகும் நீர் | குடித்து விடாய் தீர்க்கவேண்டும்படியான நீரும் | மண்ணினுள் | பூமண்டலத்துள்ளே |
| தின்னும் வெற்றிலையும் எல்லாம் | தின்று களிக்கவேண்டும்படியான வெற்றிலையுமாகிய எல்லாப் பொருள்களும் | சீர் வளம் மிக்கவன் | சீரும் சிறப்பும் மிகுந்தவனுடைய |
| கண்ணன் எம்பெருமான் என்று என்றே | (எனக்கு) ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவே யென்று பலகாலும் சொல்லி | அவன் ஊர் | அப்பெருமானுடைய திவ்யதேசத்தை |
| கண்கள் நீர்கள் மல்கி | கண்ணீர் தாரைதாரையாகப் பெருகப்பெற்றிருந்து | வினவி | விசாரித்துக்கொண்டு சென்று |
| | | புகும் ஊர் | சேர்ந்தவிடம் |
| | | திருக்கோளூரே | திருக்கோளூராகவே யிருக்க வேணும்; |
| | | திண்ணம் | இதில் ஸந்தேஹமில்லை. |

***—படுக்கைத்தலையிலே மகளைக்காணாத திருத்தாயார் 'என்மகள் திருக்கோளூர்க்குத்தான் சென்றிருக்கவேணும்' என்று அறுதியிட்டுக் கூறுகின்றாள். ஆழ்வாருடைய உண்மையான தன்மை முன்னிரண்டடிகளிற் கூறப்படுகின்றது. ஆசார்யஹ்ருதயத்தில் ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்க்கு வெடுவாசியருளிச் செய்யுமிடத்து "அவர்களுக்குக் காயோடென்னு மிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாங் கண்ணனிறே" என்றருளிச்செய்துள்ள சூர்ணை இங்கு அநுஸந்தேயம். ரிஷிகளானவர்களுக்கு * காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து* என்றும் * வீழ்கனியு மூழிலையு மென்னுமிவையே நுகர்ந்து * என்றும் சொல்லுகிறபடியே பலமூல பத்ரவாயு தோயங்களே தாரக போஷக போக்யங்களாயிருக்கும்; * க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம் * என்னும்படியான இவ்வாழ்வார்க்கோ வென்னில் தாரகாதிகள் அவையன்று. * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமான வெல்லாம் எம்பெருமானேயாம் என்கை.

"சோறும் நீரும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன்" என்றால் போதுமே; உண்ணுஞ்சோறு என்றும், பருகும் நீர் என்றும், தின்னும் வெற்றிலையென்றும் அடைமொழி கொடுத்தும் பேசவேணுமோ? சோறாகில் அது உண்ணக்கடவதுதானே; நீராகில் அது பருகக் கடவதுதானே; வெற்றிலையாகில் அது தின்னக் கடவதுதானே: உண்ணும் பருகும் தின்னும் என்கிற இவ்வடைமொழிகள் வியர்த்தமேயன்றோ என்று நினைக்க வேண்டா. வயிறு நிறைய உண்டவனுக்குப் பரமான்னம் கிடைத்தாலும் அது உண்ணுஞ் சோறாகாது; கங்கைக் கரையிலே திரியுமவனுக்குக் கிணற்றுநீர் பருகு நீராகாது; அவ்வவற்றுக்கு அபேக்ஷை சில ஸமயங்களிலும் அநபேக்ஷை சில ஸமயங்களிலும் இருப்பது உலகவியல்பாதலால், பெரும் பசியனுக்குக் கிடைத்த சோறுதான் உண்ணுஞ்சோறு, பெருவிடாயனுக்குக் கிடைத்த நீர்தான் பருகுநீர் என்று கொள்ள வேணும். பெரும் பசியனுக்குச் சோற்றிலும் விடாய்த்தவனுக்குநீரிலும் எப்படிப்பட்ட அபிநிவேசமோ அப்படிப்பட்ட அபிநிவேசம் ஆழ்வார்க்கு பகவத்விஷயத்தில் என்றதாயிற்று.

எல்லாம் கண்ணன் = * வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று கீதாசார்யன் இழவோடே பேசினான் : (அதாவது) 'எல்லாம் கண்ணன்' என்றிருக்கிற மஹாத்மா கிடைப்பது மிகவும் அரிது என்கை. அவ்விழவுதீர வகுளாபரண மஹாத்மா வந்து தோன்றினாராயிற்று.

கண்ணனெம்பெருமானென்றென்றே கண்கள் நீர்கள்மல்கி = 'எனக்கு ஸகலவிதமான தாரகபோஷக போக்யங்களும் கண்ணனெம்பெருமானே' என்று பலகால் சொல்லிக் கொண்டு நீர்மல்கு கண்ணினராயிருப்பதே ஆழ்வாருடைய இயல்பாம். இப்படிப்பட்ட பராங்குசநாயகி "அப்பெருமானுடைய திருக்குணங்களும் திவ்யமான ஐச்வர்யமும் மிக மிக விளங்குமிடமான திருக்கோளூர் எங்கிருக்கிறது ? எத்தனை தூரம் போரும் ?" என்று கேட்டுக்கொண்டே திருக்கோளூர்க்கே சென்று புகுந்திருப்பாள் ; வேறு எங்கும் போயிருக்க ப்ரஸக்தியில்லை, இது திண்ணம் என்கிறாள் திருத்தாயார்.

புகுமூர் என்றவிடத்து ஈடு :—"காட்டுத்தீயிலே அகப்பட்டவன் பொய்கையும் பொழிலும் தேடிப்புகுமாபோலே ஸம்ஸாரமாகிற பாலைநிலத்தில் காட்டுத்தீயிலே அகப்பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய்கையும் பொழிலும் போலேயிறே. 'புகுமூர்' என்கையாலே புக்கார் போகுமூர் அன்றென்கை."

எம்பெருமானார் திவ்ய தேசயாத்திரையாக எழுந்தருளுகையில் திருக்கோளூர்க்கு எழுந்தருளாநின்றார் ; அப்போது அங்கு நின்றும் வெளியேறுகின்றாளொரு அம்மையாரைப் பார்த்து 'எங்கு நின்றும் புறப்பட்டபடி ?' என்று கேட்க, அவள் 'திருக்கோளூரில் நின்றும்' என்று சொல்ல, அதுகேட்டு எம்பெருமானார் "அவ்வூரில் புக்க பெண்களும் வெளியே போகக் கடவராயிருப்பர்களோ ?" என்றாராம். புகுமூர் என்ற சந்தையின் சுவடறிந்து அருளிச்செய்தபடி.

திருக்கோளூர் = பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று : திருக்குருகூர் முதலாய நவதிருப்பதிகளுள் ஒன்று. ஸ்ரீமதுர கவிகளின் திருவவதாரஸ்தலம் இதுவே.

ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல் * அவனுடைய
பேரும்தார்களுமேபிதற்றக் கற்புவானிடறி *
சேருநல்வளஞ்சேர் பழனத்திருக்கோளூர்க்கே *
போருங்கொலுரையீர் கோடியேன்கொடி பூவைகளே ! 2

| | | | |
|---|---|---|---|
| பூவைகளே | பூவைப்பறவைகளே ! | வான் கற்புஇடறி | சிறந்த ஸ்த்ரீத்வமர்யாதையைக் கடந்து |
| ஊரும் நாடும் உலகமும் | தானிருந்த ஊரும் நாடும் உலகமுமெல்லாம் | நல் வளம் சேர் பழனம் | விலக்ஷணமான வளம் பொருந்திய நீர் நிலங்களையுடைத்தான |
| தன்னை போல் | தன்னைப்போலவே | திருக்கோளூர்க்கே சேரும் | திருக்கோளூரிலேயே சென்று சேர்ந்திருப்பள் ; |
| அவனுடைய | எம்பெருமானுடைய | போரும் கொல் | (உங்களை நினைத்தாகிலும்) திரும்பி வருவளோ ? |
| பேரும் தார்களுமே பிதற்ற | திருநாமங்களையும் சின்னங்களையுமே பிதற்றும்படி (செய்யுமவளான) | உரையீர் | சொல்லுங்கள். |
| கொடியேன் கொடி | பாவியேனுடைய மகள் | | |

*** [ஊரும் நாடும்.] பராங்குச நாயகியின் லீலோபகரணங்களுள் ஒன்றான பூவையென்னும் பறவைகளை நோக்கித் திருத்தாயார் கேட்கிறாள் ; என்பக்கலில் நசையற்று ஒழிந்தாளாகிலும் உங்களை நினைத்தாவது என்மகள் இங்கு மீண்டு வரக்கூடுமோ ? சொல்லுங்கள் என்கிறாள். பூவைப்பறவை விடையளிக்க மாட்டாத அஃறிணையென்றறிந்தும் மதிகலங்கிக்கேட்கிறபடி.

ஆழ்வாருடைய நித்யக்ரமத்தைச் சொல்லுவன முன்னடிகள். தான்பிறந்த ஊரிலுள்ளாரும் அவ்வூர்க்குத் தலையான நாட்டிலுள்ளாரும், கிம்பஹுநா? இவ்வுலகத்திலுள்ளாரெல்லாருமே தன்னைப்போல் எம்பெருமானுடைய திருநாமங்களையும் லக்ஷணங்களையும் இடையறாது சொல்லிக்கொண்டிருக்கும்படி செய்து போருமவள் என்மகள் என்கிறாள். இப்போது இது சொல்லுகைக்கு ப்ரஸக்தி யென்? 'திருக்கோளூரிலே போனவள் திரும்பி வருவளோ'? என்று கேட்கிற திருத்தாயார், இங்கிருக்கிற நாளில் இவள் செய்து கொண்டிருக்கும்படியைச் சொல்லுவானேன்? என்னில்; தானிருந்த தேசத்தை விட்டு வேறோரிடம் போவது உசாத்துணைக்கு அங்கே ஆளுண்டென்று நினைத்தன்றோ; இங்குள்ளாரெல்லாரையும் தன்னைப் போலேயாக்குகையாலே அது இங்கே குறையற்றிருக்க எதுக்குப்போனாள்? என்கைக்காக. இங்கே ஈடு:—"இவ் விருப்பில் என்ன குறையுண்டு? இங்கே ஒரு குறையுண்டாய் அங்கே அது தீரப்போனாளோ? இங்கே* போதயந்தः பரஸ்பரம்பண்ணுகைக்கு ஆளில்லாமே ஒரு தேச விசேஷம் தேடிப்போனாளோ?"

ஆறாயிரப்படியில்—"திருநாமங்களையும் திவ்ய சிஹ்நங்களையுமே சொல்லிக் கூடிப்பிடிப்பாடியாகக் கூப்பிடுகிறவிவள்" என்று அருளிச்செய்திருக்கக் காண்கையாலும், இருபத்தினாலாயிரப்படியிலும் ஈட்டிலும் "சொல்லும்படி பண்ணி" என்று அருளிச்செய்திருக்கக் காண்கையாலும் 'பிதற்ற' என்னும் செய்வெனெச்சத்திற்கு 'பிதற்றும்படி பண்ணிவைத்து' என்கிறவரையில் அர்த்தம் கொள்ளவேணும்.

கற்புவானிடறி = வான் கற்பு இடறி என்று மொழிமாற்றிப் பொருள் கொள்வது திவ்யமான தன்னுடைய ஸ்த்ரீத்வ மர்யாதையை அதிக்ரமித்துச் சென்று என்றபடி.

நல்வளஞ் சேர்பழனத் திருக்கோளூர்க்கே சேரும் கொடியேன்கொடி போருங்கொல் உரையீர் = சென்று சேர்ந்த விடமான திருக்கோளூரானது நீர்வளமும் நிலவளமும் மற்றுமுள்ள வளங்களும் பொருந்திய தாகையாலே என்மகள் அங்கேயே ஈடுபட்டுக் கொண்டு கிடப்பளோ? அன்றி உங்களை நினைத்தாகிலும் இங்கே வந்து சேருவளோ? என்று கேட்டாளாயிற்று.

ஊரும் நாடுமுலகமும் என்றதற்கு ஸ்வாபதேசார்த்தமாவது, ஊரார் என்பது ஆத்ம ப்ராப்திகாமரான கேவலரை; நாட்டாரென்பது புத்ரபசுவந்நாதி ரூப இஹலோக ஐச்வர்ய காமரை; உலகர் என்பது ஸ்வர்க்காதி பரலோக ஐச்வர்ய காமரான ஸ்வதந்த்ரரை. ஆசார்ய ஹ்ருதயத்தில் "ஊரார் நாட்டாருலகர் கேவலைச்வர்யகாம ஸ்வதந்த்ரர்" என்ற சூர்ணை இங்கே அநுஸந்தேயம். 2

*** *** ***

பூவைபைங்கிளிகள் பந்துதுதைபூம்புட்டில்கள் *
யாவையும்திருமால் திருநாமங்களேகூவியெழும் *. என்
பாவைபோயினித் தண்பழனத்திருக்கோளூர்க்கே *
கோவைவாய்துடிப்ப மழைக்கண்ணொடென்செய்யுங்கொலோ? 3

| | | | |
|---|---|---|---|
| பூவை | பூவைகளென்ன | திருமால் திருநாமங்களே | பகவானுடைய திருநாமங்களினுடையேயாம்படி |
| பைங்கிளிகள் | பசுமை தங்கிய கிளிகளென்ன | கூவி | அத்திருநாமங்களைச் சொல்லியழைத்து |
| பந்து | பந்துகளென்ன | எழும் | உஜ்ஜீவிப்பவளான |
| துதை | சிறுசோறு சமைக்கும் பானைகளென்ன | என் பாவை | எனது பெண்பிள்ளையானவள் |
| பூம்புட்டில்கள் | பூவிடும் கூடைகளென்ன ஆகிய (லீலோபகரணங்களான) | இனி | இங்கே ஒரு குறையற்றிருக்கச் செய்தேயும் |
| யாவையும் | இவை எல்லாவற்றாலும் உண்டாகக்கூடிய இன்பம் | தண் பழனம் திருக்கோளூர்க்கே போய் | குளிர்ந்த நீர் நிலங்களையுடைய திருக்கோளூர்க்கே புறப்பட்டுப்போய் |

| | | | |
|---|---|---|---|
| கோவை வாய் துடிப்ப | கோவைப் பழம்போன்ற அதரம் துடிக்கும்படியாக | என் செய்யும் கொலோ | என்னபாடுபடுவளோ! (அவ்விருப்பை நான் காணப் பெற்றிலேனே! என்று அலமருகின்றாளென்க.) |
| மழை கண்ணொடு | நீர்பெருகப்பெற்ற கண்களோடே நின்று | | |

* * * [பூவைபைங்கிளிகள்.] ஐயோ! என்மகள் திருக்கோளூரிலே எப்பாடு படுகிறாளோ வென்கிறாள் தாய்.

முன்னடிகளுக்குப் பொருள் கொள்ளுதலில் சிறிது அவதானம் வேண்டும். பூவைபைங்கிளிகள் முதலானவையும் எம்பெருமானுடைய திருநாமங்களையே கூவியெழும்படியாகச் செய்த என்மகள்—என்று சிலர்க்குப் பொருள் தோன்றக்கூடும்; இது ஆபாதப்ரதீதி மாத்ரமே; பந்து தூதை முதலான அசேதநப் பொருள்களையும் கூட்ச் சேர்த்திருக்கையாலே அவற்றுக்கு வாக்வ்யவஹாரப்ரஸக்தி யில்லாமையாலே அப்பொருள் பொருந்தாது. பூவைபைங்கிளிகள் பந்து முதலான லீலோப கரணங்களைக் கண்டால் வரும் லீலாரஸமும் தனக்கு எம்பெருமானைக் காணுமதுவேயாயிருக்கும் என் மகன் என்பதே பொருத்தமான பொருள். இங்கே ஈடு ;—'வேறொன்றைக் கொண்டு போது போக்க வேண்டும் பருவத்திலும் திருநாமத்தையே கொண்டு ஜீவித்திருக்குமவள் கிடீர் போனாள். இங்கிருந்தநாள் மற்றொன்று தாரகமாய் அங்கே போய் அவனாலே தரிக்கப்போனாளோ? பூவை தொடக்கமான லீலோப கரணங்களால் பிறக்கும் ஹர்ஷமெல்லாம் ச்ரிய:பதியென்கிற திருநாமத்தைச் சொல்லி அத்தாலேயிறே உண்டாகாநின்றது.''

[என்பாவைபோயினி இத்யாதி.] இங்கு நின்றும் இவள் போகவேணுமோ? இங்கே இவளுடைய ஹர்ஷத்துக்கு ஏதேனுங் குறையுண்டோ? என்ன நினைத்துப் போனாளோ அறிகிலேன். போனாளாகையாலே இனிச்செய்யலாவதொன்றில்லை; போன விடத்திலாவது இவள் குறையற நன்கு அநுபவிக்க வேணுமே. ஒரு பேச்சுப் பேச வாயெடுத்தவாறே வாய்விட்டுப் பேசமாட்டாமே உதடு நெளிக்குமே; கண்ணநீர் வெள்ளமிட்டுப் பெருகுமே; இப்படி என்ன பாடுபடுகிறாளோ வென்று தடுமாறுகிறாள்தாய். 3

கொல்லையென்பர்கொலோ? குணம்மிக்கனளென்பர்கொலோ? *
சில்லைவாய்ப்பெண்டுகள் அயற்சேரியுள்ளாருமெல்லே! *
செல்வம்மல்கி யவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
மெல்லிடை நுடங்க இளமான்செல்லமேவினளே. 4

| | | | |
|---|---|---|---|
| இள மான் | இளமான் போன்ற என்மகள் | சில்லை வாய் பெண்டுகள் | வம்புவாயரான ஊர்ச்சேரிப் பெண்களும் |
| செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே | செல்வம் நிரம்பப்பெற்று அப்பெருமான் கண்வளர்ந்தருளப்பெற்ற திருக்கோளூரைக்குறித்தே | அயல் சேரி உள்ளாரும் | அயல் சேரியிலுள்ள பெண்களும் |
| மெல் இடை நுடங்க | மெல்லிய (தனது) இடை நோகும்படி | கொல்லை என்பர் கொலோ | 'இவள் வரம்பு கடந்து நடந்தவள்' என்று சொல்லிப் பழிப்பர்களோ? (அல்லது) |
| செல்ல மேவினளே | புறப்பட்டுச் செல்ல நெஞ்சு பொருந்திவிட்டாளே!, (இதைப்பற்றி) | குணம் மிக்கனள் என்பர் கொலோ | 'விலக்ஷணகுண முடையவள்' என்று சொல்லிக் கொண்டாடுவர்களோ? |
| | | எல்லே | என்னுருமோ! |

* * * [கொல்லை யென்பர்கொலோ.] என் மகளுடைய நடவடிக்கையைக் கண்டு உலகத்தார் உகப்பர்களோ! அன்றி, வெறுப்பர்களோ வென்று சங்கிக்கிறாள் தாய். 'பேறு தப்பாதென்று துணிந்திருப்பதே கடமை' என்று திண்ணிய அத்யவஸாய முடையார் இவள் இங்ஙனே படிகடந்து செல்லுகைக்காவதென்?'' என்று நெருக்கக்கூடும்; 'பேற்

நுக்கு த்வரிக்கவும் வேணும்' என்றிருக்குமவர்கள் உகக்கக்கூடும். இரண்டும் ஸ்வரூப மென்று காட்டுகிறபடி.

கொல்லை யென்பர் கொலோ = கொல்லை யென்று வரம்பில்லாததுக்குப் பெயர். 'இவள் வாசற்கடந்து புறப்படக் கடவதல்லாத மரியாதை குலைந்தாள், நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினள்; வரம்பழிந்த செயல் செய்தாள்' என்று நிந்திப்பர்களோ வென்கை. குணம்மிக்கன ளென்பர் கொலோ? = 'குணாதிக விஷயத்திலே ஈடுபட்டவளாகையாலே இதற்குத் தக்கபடி நன்று செய்தாள்' என்று இவளது குணத்தைச் சொல்லிக் கொண்டாடுவர்களோ?

இப்படி சங்கிக்க ப்ரஸக்தி யென்? என்ன, சில்லிவாய்ப் பெண்டுகள் அயற் சேரியுள்ளாருமெல்லே! என்கிறாள். ஸ்த்ரீகளின்வாய் வெறுமனிராது; ஓட்டை வாயைக் கொண்டு ஓயாமல் வம்பளப்பதே அவர்களுடைய பணியாயிருக்கும்; அவ்வளவுமன்றிக்கே பகையாளருமுண்டு; பகைமிக்கால் சொல்லுஞ் சொல்லுக்கொரு வரம்புண்டோ? என்கை.

அயற் சேரியுள்ளாரும் என்றதற்கு ஸ்வாபதேசார்த்தம் ஆசார்யஹ்ருதயத்தில் "நாலயலார் அயற்சேரியார் உபாயசதுஷ்டயாந்தர்யாமித்வபரர்" என்கிற சூர்ணையில் அருளிச்செய்ததாம். [அர்ச்சாவதாராதிகளில் ஊற்றமற்று தேவதாந்தர்யாமித்வத்திலே ஊன்றியிருக்குமவர்களை] அதாவது, அவன் கடைத்தலையிருந்து வாழாதே குளக்கரையிலே போது போக்கித் திரியுமவர்களை அயற்சேரியரென்கிறதென்க.

"கொல்லை யென்பர்கொலோ குணம்மிக்கன ளென்பர் கொலோ" என்கிற சங்கை இப்போது எதற்காக வென்ன, பின்னடிகளால் அதற்கு ப்ரஸக்தி சொல்லுகிறது.

'இளமான் சென்றாள்' என்ன வேண்டியிருக்க 'இளமான் செல்லமேவினளே' என்னலாமோ? செல்ல விரும்பினளென்று பொருள் படுகிறதேயன்றிச் சென்றாளென்று பொருள் படவில்லையே யென்னில்; செல்லுகைக்கு முன்னம் இச்சை யிருந்து தீர வேண்டுமாதலால் அந்த இச்சையைச் சொன்னது தத்கார்யமான போக்கைச் சொன்னபடியேயாம். ... ... ... 4

மேவிநைந்துநைந்துவிளையாடலுறாள் என்சிறுத்
தேவிபோய் * இனித்தன் திருமால் திருக்கோளூரில் *
பூவியல்பொழிலும் தடமுமவன்கோயிலும்கண்டு *
ஆவியுள்குளிர எங்ஙனேயுகக்குங்கொலின்றே. 5

| | | | |
|---|---|---|---|
| என் சிறு தேவி | வயது முதிராதவளும் திவ்ய ஸ்வபாவமுடையவளுமான என் மகள். | பூ இயல் பொழிலும் | பூக்களை இயல்பாகவுடைய சோலைகளையும் |
| மேவி | பகவத் குணங்களிலே வீடுபட்டு | தடமும் | தடாகங்களையும் |
| நைந்து நைந்து | மிகவும் இளைத்து | அவன் கோயிலும் | அவனது திவ்ய ஸந்நிதியையும் |
| விளையாடல் உறாள் | (தன் வயதுக்குரிய) விளையாட்டிலும் பொருந்தாதவளாய் | கண்டு | பார்த்து |
| போய் | இங்கு நின்றும் போய் | ஆவி உள் குளிர | நெஞ்சு குளிரும்படியாக |
| தன் திருமால் திருக்கோளூரில் | தனக்கு அஸாதாரணனான எம்பெருமானுடைய திருக்கோளூரில் | இன்று எங்ஙனே உகக்கும் கொல் | இன்று எவ்வண்ணம் களித்திருப்பளோ! (அந்நிலைமையை நான் காணப்பெற்றிலேனே!) |

** * [மேவிநைந்து நைந்து.] திருக்கோளூர்க்கு நடந்த என்மகள் அங்குச் சோலைகளையும் பொய்கைகளையும் அவன் கோயிலையுங்கண்டு ஆச்சரியமான உகப்பை அடைவளே; அந்தோ! அவ்வுகப்பை நான் காணக் கொடுத்து வைக்கவில்லையே! என்று தளர்கின்றாள் தாய்.

இவள் விளையாட்டுப் பருவத்திலிருக்கச் செய்தேயும் தோழிகளோடே விளையாட வென்று போனால் விளையாட்டிலே அந்வயிக்க மாட்டாள்; அப்போதும் எம்பெருமானை யனுபவிக்க வேணுமென்கிற ஆசையேவிஞ்சி அது தன்மனோரதப்படி ஸித்தியாமை யாலே நைந்து கிடப்பள். *அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து* என்கிறபடியே அப்படி இளமையே தொடங்கி பகவத் விஷயத்தி லீடுபட்டிருந்தவிவள் இப்போது திருக்கோளூர்க்குச் சென்றாளாயிற்று. அதுதான் ஸாமாந்யமான ஸ்தலமோ? பூஞ்சோலைகளும் தடாகங்களும் மதிளும் மாடமாளிகையும் மண்டபங்களுமாகிற ஸந்நிவேசங்கள் ஆச்சரியமான காட்சியைத் தருமே. அவற்றையெல்லாம் இவள் காணும்போது ஆவியுள்குளிர உகக்குமழகு அத்விதீயமாயிருக்குமே; அவ்வழகு காணக் கொடுத்து வைப்பார் ஆரோ? அந்த பாக்யம் எனக்கு இல்லையாயிற்றே! என்று தளர்கின்றாள் தாய்.

"அவன் கோயிலுங்கண்டு" என்றவிடத்து ஈட்டில் ஒரு ஐதிஹ்யம்;—"பிள்ளை திருநறையூரரையரும் பட்டருமாக உள்ளே ப்ரதக்ஷிணம்பண்ணா நிற்க, இட்டவடிமாறிடமாட்டாதே கண்களாலே பருகுவாரைப்போலே பார்த்து ஆழ்ந்து கொடு போகிறபடியைப் பின்னே நின்று கண்டு அநுபவித்தேன். என்று நஞ்சீயர் அருளிச்செய்வர்."

"ஆச்சானும் ஆண்டானுமாகக் கிழக்கே நடக்கிறபோது திருப்பேருக்குக் கிழக்குப்போகவும் மாட்டாதே ஏறித்திருவடித் தொழவும் மாட்டாதே திருப்பேர்நகரான் கோயிலைப்பார்த்துக் கொண்டிருந்தார்களாம்."

"ஆவியுள்குளிர" என்கிற சந்தையை மேலெழுந்த வாரியாகச் சொல்லிவிடாமல் "உள்குளிர" என்று ஆழ்ந்து ஊற்றத்தோடு உறைப்பாக அநுஸந்திக்க வேணுமென்று ஆசாரியர்கள் சிக்ஷிப்பார்கள். ... ... 5

இன்றெனக்குதவாதகன்ற இளமானினிப்போய் *
தென்திசைத்திலதமனைய திருக்கோளூர்க்கே
சென்று * தன்திருமால்திருக்கண்ணும் செவ்வாயும்கண்டு *
நின்றுநின்றுகையும் நெடுங்கண்கள்பனிமல்கவே. 6

| | | | |
|---|---|---|---|
| எனக்கு | தன்னைப்பிரிந்து சோகப்பட்டுக் கிடக்கிற எனக்கு | தன் திருமால் | தன்னை வசீகரித்த அத்திருமாலினுடைய |
| இன்று | இப்போது | திரு கண்ணும் செம் வாயும் கண்டு | திருக்கண்களையும் சிவந்த அதரத்தையும் கண்டு |
| உதவாது அகன்ற | உசாத்துணையாக இராதே கைகழிந்துபோன | நெடு கண்கள் பனிமல்க | தனது விசாலமான கண்களில் ஆனந்த பாஷ்பம் நிரம்பப் பெற்று (ஹர்ஷப்ரகர்ஷத்தாலே) |
| இள மான் | இளமான் போன்ற என் மகள் | | |
| போய் | வருந்தி வழிநடந்து போய் | | |
| தென்திசை திலதம் அனைய | தெற்குத் திசைக்கு அலங்காரமான | | |
| திருக்கோளூர்க்கே சென்று | திருக்கோளூரிலே பிரவேசித்து | நின்று நின்று உகையும் | ஒன்றுஞ் செய்யமாட்டாதே நிலையாக நிற்பள். |
| இனி | அங்ஙனம் புகுந்த பின்பு | | |

* * * [இன்றெனக்கு.] கீழ்ப்பாட்டில் "எங்ஙனே யுகக்குங்கொல்!" என்றாள்; அவள் உகக்கும்படியைப் பாசுரமிட்டுச் சொல்லுகிறது இப்பாட்டு. இப்படியிப்படி உகப்பள் என்கிறாள் திருத்தாய்.

என்னோடு கூடவிருந்து எனக்கு உசாத்துணையாயிருந்து என்னைத் தரிப்பிக்க வேண்டிய விவள் இந்நிலைமையிலே என்னைத் தனியாக விட்டுக் கைகழிந்தாளே யென்று நோகின்றாள் முதலடியில். ஈடு :—“பின்னை பெற்று வளர்க்கிறது ஆபத்துக்கு உதவு கைக்கன்றோ ; தன்னைப் பிரிந்த இத்தனிமைக்கும் இத்தசைக்கும் மேற்பட எனக்கு ஓராபத்து உண்டோ? இன்று எனக்கு உதவாதொழிவதே !.”

என்னையும் உடன் கூட்டிக்கொண்டு போனால் நான் வரமாட்டேனென்பேனோ? அவனை பகவத்விஷயத்திலே அவகாஹிக்கும்படி செய்தவள் நானேயன்றோ. தனக்குக் கூட்டான வென்னை அயலாக நினைத்து என்னைவிட்டுத் தனியே அகன்று போக வேணுமோ? என்கிற கருத்து முதலடியில் தொனிக்கும்.

தென்திசைத் திலதமனைய திருக்கோளூர்க்கே சென்று = முற்காலத்தில் தென்திசையானது, மிலேச்சபூமி யென்று ஆர்யர்கள் இகழ்ந்ததாயிருக்குமாம்; அத்திசைதானே திருக்கோளூர் முதலான திவ்யதேசங்கள் தோன்றப் பெறுகையாலே பரமபவித்திரமாயிற்றாம். இங்கே ஈடு :—“தெற்குத்திக்கு என்று கொண்டு ஆரியர்கள் இகழ்ந்த ம்லேச்ச பூமியிறே ; இங்ஙனே யிருக்கச் செய்தே ஓர் ஆபரணந்தானே எல்லாவாபரணங்களுக்கும் நிறங்கொடுக்க வற்றுமாப்போலே திருக்கோளூருண்டாகையாலே திக்காக ச்லாக்யமானபடி. * தக்ஷிணா திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணா * என்னுமாபோலே.

“தன் திருமால் திருக்கண்ணும் செவ்வாயும் கண்டு நெடுங்கண்கள் பனிமல்கவே நின்று நின்று நையும்”=தன் மகள் அங்கே யிருக்கும்படி இதுவாயிற்று. * பெருங் கேழலார் தம் பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் * (திருவிருத்தம்) என்று தானே பேசும்படி தன்னை விசேஷித்து விஷயீகரித்த திருக்கண்களை மூந்துற முன்னம் நோக்குவள் ; அபிமத ஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்த ஹாஸவிலாஸம் பொங்குமிடமான செவ்வாயைப் பிறகு காண்பள் ; ஆக இரண்டு திவ்யாவயவங்களையும் கண்டு, மஹாப்ரவாஹத்திலே இளகின கரைபோலே உடை குலைப்பட்டு நைந்து கொண்டிருப்பள் ; இதுவன்றோ அவளிருக்கும்படி ; அது காணப்பெற்றிலேனே ! என்றாளாயிற்று. ... ... ... ... 6

மல்குநீர்க்கண்ணொடு மையலுற்றமனத்தனளாய் *
அல்லுநன்பகலும் நெடுமாலென்றழைத்தினிப்போய் *
செல்வம்மல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
ஒல்கியொல்கிநடந்து எங்ஙனேபுகுங்கொலோசிந்தே ? 7

| | | | |
|---|---|---|---|
| மல்கு நீர் கண்ணொடு | (என் மகளானவள்) நீர் நிரம்பிய கண்களையுடையவளாயும் | இனி | இப்போது |
| மையல் உற்ற மனத்தனள் ஆய் | வியாமோஹம் கொண்ட நெஞ்சையுடையவளாயும் | ஒல்கி ஒல்கி நடந்து | ஒடுங்கியொடுங்கி அசைந்து நடந்து |
| நல் அல்லும் பகலும் | நல்ல இரவிலும் பகலிலும் (தவறாது) | ஒசிந்து போய் | தளர்ந்து சென்று |
| நெடுமால் என்று அழைத்து | ஸர்வேச்வரனே ! என்று கூப்பிட்டுக்கொண்டிருந்து, | | செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே—; |
| | | எங்ஙனே புகும் கொல் | எப்படி போய்ச் சேர்ந்திருப்பளோ? |

**[மல்கு நீர்க்கண்ணொடு.] தன்மகள் திருக்கோளூரெம்பெருமானுடைய திருக்கண்ணும் செவ்வாயுங்கண்டு கண்ணீர் பெருகநிற்பள் என்று கீழ்ப்பாட்டில் ஊஹித்துப்பேசின திருத்தாயார், அவள் திருக்கோளூரளவும் சென்று சேர்ந்தாளாகிலன்றோ அங்ஙனே

நிருப்பது: இவள் தான் அத்தனை தூரம் வழிநடந்து முடிந்து சென்று சேர்ந்த பிறகு நடக்கக்கூடியதை இப்போது சிந்திக்க இடமேது? என்கிறாள்.

மல்கு நீர்க்கண்ணொடு மையலுற்ற மனத்தனளாய் = வழி நடந்து போகைக்கு இரண்டு ஸாதனங்கள் வேண்டும்; கண் நன்றாகத் தெரியவேணும்; மனம் தெளிவுற்றிருக்கவேணும்; இவ்விரண்டும் ஒழுங்காக இல்லையே என்மகளுக்கு; கண்களோ நீர் மல்கிக் கிடக்கின்றன; மனமோ மையலுற்றுக் கிடக்கிறது. ஆகவே இவள் வழிநடந்து உத்தேச்யமான இடத்திலே சென்று சேருகைக்கு ப்ரஸக்திதானே யில்லையேயென்று காட்டினபடி.

அல்லும் நன்பகலும் நெடுமாலென்றழைத்து = 'என்னையிப்படி பிச்சேறப்பண்ணின ஸர்வேச்வரனே! என்று இரவும் பகலும் கூப்பிடுகைக்கு ஸ்வஸ்தானத்தில் ஏதேனும் விரோதமுண்டோ? இங்கிருந்தே கூப்பிடலாமே; எதற்காகப் புறப்பட்டுப் போனாளோ' என்கிறாள்.

[செல்வம்மல்கி யித்யாதி] தானிருந்த விடத்திலே * பொலிந்து நின்ற பிரானுகையாலே நின்ற வழகு காணலாமத்தனை போக்கி, கிடந்ததோர் கிடக்கை காண விரகில்லை; அக்கிடையழகைத் திருக்கோளூரிலே சென்று காணலாமென்று ஆசைப்பட்டுப் போனாள்போலும்; நன்றே; ஒல்கி யொல்கி ஒசிந்து நடந்து எங்ஙனே புகுங்கொல்?—ஒடுங்கியொடுங்கித் துவண்டு நடந்து போமிவள் அவ்வூர் சென்று சேர ஸம்பாவனையில்லையே! என்னாய் முடிந்திருக்குமோ வென்கிறாள். ... ... ... 7

ஒசிந்தநுண்ணிடைமேல் கையைவைத்துநொந்துநொந்து *
கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல்? *
ஒசிந்தவொண்மலராள்கொழுநன் திருக்கோளூர்க்கே *
கசிந்தநெஞ்சினளாய் எம்மைநீத்தவெம்காரிகையே. 8

| | | | |
|---|---|---|---|
| ஒசிந்த ஒண் மலராள் கொழுநன் | துவண்ட திருமேனியையுடையபெரிய பிராட்டியாருக்கு வல்லபனான எம்பெருமான் வர்த்திக்கிற | ஒசிந்த நுண் இடை மேல் | ஏற்கனவே துவண்ட மெல்லிய இடுப்பின் மீது |
| திருக்கோளூர்க்கே | திருக்கோளூரையே நோக்கி | கையை வைத்து | (இளைப்பினால்) கையை வைத்துக் கொண்டு |
| கசிந்த நெஞ்சினள் ஆய் | ஈரநெஞ்சையுடையவளாய்க் கொண்டு | நொந்து நொந்து | மேன்மேலும் நோவு பெற்று |
| எம்மை நீத்த | எங்களை விட்டுப் பிரிந்து சென்ற | கசிந்த நெஞ்சினள் ஆய் | ஈரமான மனத்தையுடையவளாய் |
| எம் காரிகை | அழகியளான என் பெண்பிள்ளை | கண்ண நீர் துளும்ப | கண்ணீர் பெருகும்படி |
| | | செல்லும் கொல் | (அவ்வூர்) சென்று சேர்ந்திருக்குமோ? |

*** [ஒசிந்தநுண்ணிடை] என் மகள் தான் எந்த எம்பெருமானை விரும்பிச் சென்றாளோ அவன் பெரியபிராட்டியார்க்கு வல்லபன் என்னுமிடம் இவள் அறியாள்போலும். "அவன் பக்கலிலே வ்யாமோஹங் கொண்டிருக்குமிவள் நம்மை லக்ஷியம் பண்ணுவனோ?" என்று இப்பெண்பிள்ளை நினைக்கவேண்டியிருக்க அங்ஙனம் நினையாமல் அப்பெரிய பிராட்டியாருடைய புருஷகாரபலத்தாலே நமக்கொரு குறையிராது என்று நினைத்தோ, அவ்விருவருமான சேர்த்தியழகைச் சேவிப்போமென்று நினைத்தோ திருக்கோளூர்க்கே செல்லப் புறப்பட்டாள்; இவள் அத்தனை தூரம் வழிநடந்துசெல்ல வல்லளோ? எங்ஙனே சென்று சேர்ந்திருப்பள் என்கிறாள் திருத்தாய்.

வழி நடக்கும்போது சிறிதும் சிரமமின்றியே நடந்து செல்பவர்கள் கையை வீசிக்கொண்டு போவர்கள் ; அப்படியல்லாமல் சிரமத்தினால் இளைத்துப் போமவர்கள் இடுப்பின்மீது கையை ஊன்ற வைத்துக்கொண்டு சிரமம் ஸ்பஷ்டமாகத் தெரியும்படி செல்வார்கள் ; இஃது உலகிற் காணும் இயற்கையாதலால், தன்மகளுடைய மேனி மெலிவை அநுஸந்தித்த திருத்தாயார் அவள் மிகவும் சிரமத்தோடுதான் செல்ல நேரு மென்பதை ஊஹித்து முதலடி கூறுகின்றாள்.

சிரமத்தை ஸஹித்துக்கொண்டு ஒருபடி நடந்துசென்றாலும், நெஞ்சு ஸ்வாதீனமாய், கண் நிராபாதமாயிருந்ததாகில் குறையில்லை ; நெஞ்சும் கசிந்து கண்ணும் நீர் அரும்ப நிற்குமிவள் எங்ஙனே வழிதெரிந்து போகவல்லள் என்கிறாள் இரண்டாமடியால்.

இப்பெண்பிள்ளை, தானும் நானுமாக இருந்த சேர்த்தியைத் தவிர்த்தது, பெருமானும் பிராட்டியுமான சேர்த்தியைக் காணவேண்டியே போலுமென்கிறாள் பின்னடிகளால். காரிகை—அழகுடைய பெண். ... ... 8

காரியம்நல்லனகளவைகாணில் என்கண்ணனுக்கென்று *
ஈரியாயிருப்பாள் இதெல்லாம்கிடக்க, இனிப்போய் *
சேரிபல்பழிதூயிரைப்பத் திருக்கோளூர்க்கே *
சேரிழைநடந்தாள் எம்மையொன்றுநினைத்திலளே. 9

| | |
|---|---|
| சேர் இழை | சேர்த்தியான ஆபரணங்களை யணிந்துள்ள என் மகள், |
| காரியம் நல்லனகள் அவை காணில் | பதார்த்தங்களில் நல்லதானவற்றைக் கண்டால் |
| என் கண்ணனுக்கு என்று | 'இவை எம்பெருமானுக்கு ஆம்' என்று அநுஸந்தித்து |
| ஈரியாய் இருப்பாள் | ஈரநெஞ்சையுடையளாக இருப்பவள் ; |
| இது எல்லாம் கிடக்க | இங்கே அளவற்ற ஐச்வரியங்கள் கிடக்கவும் |
| இனி | இப்போது |
| போய் | வெளியேறிச் சென்று |
| சேரி பல் பழி தூய் இரைப்ப | சேரியிலுள்ளார் பல பழிமொழிகளைத் தூற்றி கோஷிக்கும் படியாக |
| திருக்கோளூர்க்கே நடந்தாள் | திருக்கோளூரை நோக்கியே நடந்து சென்றாள் ; |
| எம்மை ஒன்றும் நினைத்திலள் | எங்களை ஒரு பொருளாக மதித்திலள். |

*** [காரியம் நல்லனகள்.] திருக்கோளூரெம்பெருமான் பக்கலிலே ப்ராவண்யமே வடிவெடுத்த இப்பெண்பிள்ளை ஊராருடைய பழிமொழிகளுக்கும் அஞ்சாதே எங்களையும் ஒரு பொருளாக மதியாதே நடந்து சென்றாளே யென்கிறாள் திருத்தாய். உலகத்தவர்கள் ஏதேனும் நல்ல பொருள்களைக் கண்டால் 'இது நம்முடைய குட்டிக்கு ஏற்றிருக்கும், இது நம்முடைய குழந்தைக்கு ஒத்திருக்கும்' என்று சொல்லிக்காண்பர்கள் ; பராங்குச நாயகியோவென்னில், அங்ஙனன்றிக்கே எந்த நல்லபொருளைக்கண்டாலும் 'இது எம்பெருமானுக்குத் தகுந்திருக்கும், இது என் கண்ணனுக்கு ஏற்றிருக்கும்' என்றே சொல்லுவது வழக்கமாம். அங்ஙனம் சொல்லுமிடத்து நெஞ்சு நெகிழ்ந்திருக்குமிருப்பு வெகு ஆச்சரியமாயிருக்கும். அசோகவனத்திலே பிராட்டியைக்கண்ட திருவடி சொல்லுகிறான்— * த்ருஷ்ட்வா பலம் வா புஷ்பம் வா யத்வாந்யத் ஸுமநோஹரம். பஹுசோ ஹா ப்ரியேத்யேவம் ச்வஸந் த்வாமபிபாஷதே * என்கிறான். பழமோ பூவோ மற்றும் எதுகாணப்பெற்றாலும் நம் பிராட்டிக்கு ஆகுமென்றே பெருமாள் காண்பது போல, நம் பெருமானுக்காகு மென்றே இப்பிராட்டி காண்கிறபடி.

"இதெல்லாங் கிடக்க" என்றதற்குப் பலபடியாகக் கருத்துக்கொள்ளலாம். * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்று பேசிக்கொண்டு கண்கள் நீர்மல்க இங்கே யிருக்கலாகாதோ ? ஊரும் நாடுமுலகமும் தன்னைப்

பேரவாக்கிக்கொண்டு இங்கே யிருந்தாலாகாதோ? இங்கிருக்குமிருப்பிலே என்ன குறை? இவையெல்லாம் விட்டு அங்கேபோகவேணுமோ?

போனுலென்ன? இங்கிருந்து செய்கிற பகவதநுபவத்தை அங்குச்சென்று செய்தாளாகில் என்ன கெடுதி? என்று ப்ரஸ்தாவமாக; சேரிபல்பழிதூயிரைப்ப என்கிருள். இவ்வுலகில் பிறந்து வைத்துப் பழிக்கு அஞ்சவேண்டாவோ? பலர் பலவகையாக வன்றோ பழிதூற்றுவர்கள். * தத் தஸ்ய ஸத்ருசம் பவேத் * என்றுசொல்லி இருந்த விடத்திலேயிருந்த பிராட்டியைப்போலே செறிதவருது இருக்கவேண்டியிருக்கப் படிகடந்து சென்றுளே! என்று பழிதூற்றுர்களோ? அதற்கு அவகாசம் கொடுத்துக் கொண்டு எதற்குப்போனுளென்கிருள். * மனக்குற்றமாந்தர் பழிக்கில் புகழ் * என்று அமுதனர் அருளிச் செய்தபடியே பிறர் பழிதூற்றுவதே ஸத்துக்களுக்குப் பரமபூஷணமாதலால் தாயின் உள்ளத்தினுள்ளே உகப்பேயுள்ளது.

நேரிழை நடந்தாள்—இழை என்று ஆபரணத்திற்குப்பெயர்; நேர்த்தியான ஆபரணங்களை யணிந்துள்ள என்மகள் மெல்லிய அடிகளைக்கொண்டு நடந்தாளே!. பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்தில் * கேஹாந்நித்யஸஹாயிநீ * என்கிற ச்லோகத்தில் * ஜாதோதிக் கருணும் நிகஸ்து யுவயோ: ஸ்வாதந்த்ர்யமத்யங்குசம் * என்று வயிறெரிந்து பேசினுப்போலே இவளும் பேசுகிறபடி. தனமகளின் ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்திருக்கும் திருத்தாயார் 'ஐயோ! நடந்தாளே!' என்கிருள். நடந்து செல்லுகிறபோது முன்னும் பின்னும் ஆபரணஸந்நிவேச ஸௌந்தர்யாதிசயத்தைத் தான் காணப்பெருத இழவும் தொனிக்கும். 'நடந்தாள்' என்கிற சொல் ஸம்பிரதாயத்தில் 'எழுந்தருளினுள்' என்பதற்குப் பர்யாயமாக வழங்கும். ஆனதுபற்றியே ஈட்டிலருளிச் செய்வது பாரீர்:— "(நடந்தாள்) தன் பெண்பிள்ளையேயாகிலும் இருக்கோளூர் போகவென்று நாலடியிட்டவிவளை இங்ஙனல்லது சொல்லவொண்ணுதிறே. தன்மகளை எங்ஙனே கனக்க நினைத் திருக்கிறுள் தான்!. வயிற்றில் பிறக்கவுமாம், சிஷ்யர்களாகவுமாம்; பகவத் விஷயத்தில் ப்ரத்யாஸந்நர் உத்தேச்யராமத்தனை."

இவ்விடத்தில் ஓர் ஐதிஹ்யமும் ஈட்டிலுள்ளது;— "ஒரு நாள் நம்பிள்ளையை ஜீயர் கோஷ்டியிலே வைத்துப் போரக் கொண்டாடியருளி 'தன்சிஷ்யனைத் தான் கொண்டாடா நின்றுன்' என்றிராதே கிடிகோள்; * கணபுரங் கைதொழும் பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப் பெறுவரேயென்று பண்டு சொன்னருமுண்டுகிடிகோள் என்றருளிச் செய்தார்."

மற்றொரு ஐதிஹ்யமும் காண்மின்—"அம்முணியாழ்வான் தன் சிஷ்யனைத்தான் தெண்டனிடா நிற்குமாம்; இதுவென்? என்று கேட்க, அல்லாத வைஷ்ணவர்களை வ்ருத்தத்தாலே அறியவேணும்; இவர்கள் நானறிய வைஷ்ணவர்களென்று ஆதரிப்பேன் என்றுன்."

எம்மை ஒன்றும் நினைத்திலளே—எங்களை த்ருணீகரித்துப போய்விட்டாளே! என்பது மேலெழுந்த பொருள். இப்படிப்பட்ட மஹாநுபாவையின் அபிமானம் எமக்கு இல்லாமற் போயிற்றே! எம்மைப்பற்றிச் சிறிதேனும் தன் நெஞ்சிலே நினைத்திருந்தாளாகில் ஒரு குறையில்லை யெமக்கு என்பது உள்ளுறையும் பொருள். ... 9

நினைக்கிலேன்தெய்வங்காள் நெடுங்கணிளமானினிப்போய் *
அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை *
தினைத்தனையும்விடாள் அவன்சேர் திருக்கோளூர்க்கே *
மனைக்குவான்பழியும் நினையாள்செல்லவைத்தனளே. 10

| | |
|---|---|
| தெய்வங்காள் | தெய்வங்களே ! |
| நினைக்கிலேன் | எனக்கு ஒன்றும் தோன்றவில்லை ; |
| நெடுங்கண் இளமான் | பெருத்த கண்களையுடைய இளமான் போன்ற என் மகள் |
| இனி போய் | இப்போது சென்று |
| அனைத்து உலகும் உடைய | ஸர்வலோக ஸ்வாமியான |
| அரவிந்த லோசனனை | செந்தாமரைக் கண்ணனை |
| தினை தனையும் விடாள் | சிறிது போதும் விடாதவளாய்க்கொண்டு |
| அவன் சேர் திருக்கோளூர்க்கே | அவன் வர்த்திக்கும் திருக்கோளூரை நோக்கியே |
| செல்ல வைத்தனள் | சடக்கெனச் சென்றாள் ; |
| மனைக்கு வான் பழியும் நினையாள் | தன் குடிக்கு இது பெரிய பழிப்பாகு மென்பதையும் நினைத்திலள். |

*** [நினைக்கிலேன்] அன்பர்களின் பிரிவுகாலம் * த்ருடி யுகாயதே * ஒருபகலாயிரமூழியாலோ *பலபல ஆழிகளாயிடும்* என்கிறபடியே ஒரு கணப்பொழுதும் ஒரு கல்பமாகத்தோன்றுமாதலால், தன் மகள் தன்னைப் பிரிந்துபோய்ப்பல காலம் ஆய்விட்டதாக நினைத்து, அந்தோ! திருக்கோளூர்க்குப் போனவள் போய் ஸேவித்துவிட்டு மீண்டு வரலாகாதோ? அவ்விடத்திலேயே மண்டி விட்டாளே! அங்குறையும் அரவிந்தலோசனனை ஒருக்ஷணகாலமும் விட்டுப் பிரியாதே அவ்விடத்து அநுபவமே யாத்திரையாக ஆய்விட்டாளே! இக்குடிக்கு வரும் பெரும்பழியை நினையாதே கிடக்கிறாளே! என்று அலறுகின்றாள் தாய்.

தெய்வங்காள் நினைக்கிலேன்—தன்னருகிலுள்ளாரைப் பார்த்துச் சொல்லுகையன்றிக்கே ஆகாசத்தை நோக்கித் தெய்வங்களைப் பார்த்துச் சொல்லுகிறாள். இவ்வுலகிலுள்ளாரைப் போலே தேவதைகள் பழி சொல்லமாட்டாதவர்களாதலால் அவர்களோடே உறவு கொண்டாடுகிறாள். நினைக்கிலேன் என்றால் எதை நினைக்கிலேனென்கிறாளென்று கேள்வி வரும். என்னெஞ்சில் எதுவுமே தோன்றவில்லை; ஹ்ருதயம் சூந்யமாய் விட்டது என்றவாறு. என்மகளின்படி என்னால்சிந்திக்கப்போகிறதில்லை யென்கிறாளென்னவுமாம்.

நெடுங்கணிளமான்—அரவிந்த லோசனனையும் ஒரு மூலையிலே அடக்கலாம்படி பரப்புடைத்தான கண்ணையுடையவளன்றோ இவள். இவளிருக்குமிடத்தைத் தேடி ஓடிவரவேண்டியிருக்க அவனைத்தேடி இவள் செல்வது என்னே! என்பது உட்கருத்து. "அனைத்துலகு முடைய அரவிந்தலோசனனை" என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"இவ்வளவே கிடீர் அவன் கண்ணுக்குத் தோற்றிருப்பது, ஓர் உபய விபூதிமாத்ரங் கிடீர் அவன் கண்ணுக்கு ஈடுபட்டிருப்பது. அவன் தன்னையும் தோற்பிக்குங் கண்ணிறே இவளது......அவன் தானும் தன் விபூதியு மிவள்கண்ணிலே ஒரு மூலையிலே யடங்கும்படியாயிருக்கை."

தினைத்தனையும்— க்ஷணகாலமும் என்றபடி. தினை என்கிற தானியம் எவ்வளவு சிறிதோ அவ்வளவு சிறுபொழுதும் என்றவாறு. ... 10

வைத்தமாநிதியாம் மதுசூதனையேயலற்றி *
கொத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பத்துநூற்றுளிப்பத்து அவன் சேர்திருக்கோளூர்க்கே *
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே. 11

| | |
|---|---|
| வைத்த மாநிதி ஆம் | சேமித்துவைத்த மஹாநிதி போன்ற |
| மதுசூதனையே அலற்றி | எம்பெருமானையே வாய்வெருவி |
| கொத்து அலர் பொழில் சூழ் குருகூர்சடகோபன் சொன்ன | பூங்கொத்து அலருகிற சோலைகளால் சூழப்பட்ட திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் அருளிச் செய்த |
| பத்து நூற்றுள் | ஆயிரத்திலுள்ளே |
| இப் பத்து | இத்திருவாய்மொழியை |
| அவன் சேர் திருக்கோளூர்க்கே சித்தம் வைத்து | அவன் வர்த்திக்கிற திருக்கோளூரிலேயே மனம் பதித்து |
| உரைப்பார் | உரைக்க வல்லவர்கள் |
| திகழ் | நித்யமாக விளங்குகின்ற |
| பொன் உலகு ஆள்வார் | பரமபதத்தை ஆளப் பெறுவர்கள். |

*** [வைத்தமா நிதி] இப்பத்தும் கற்பார் யாவரோ அவரிட்ட வழக்காயிருக்கும் திருநாடு என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். திருக்கோளூரெம்பெருமானுக்கு வைத்த மாநிதிப்பெருமாளென்று திருநாமம். புதைத்து வைக்கப்படும் பொருள் நிதி யெனப்படும். *யோவேத நிஹிதம் குஹாயாம்* என்ற தைத்திரீய உபநிஷத்தினால் எம்பெருமான் நிதியாக அறியப்படுவன். நிலத்திலுள் புதைத்துவைத்து ஆளவேண்டியதாயிருக்கும் நாட்டிலுள்ள நிதி; எம்பெருமானாகிற நிதி அங்ஙனல்லாமல் நெஞ்சிலே புதைத்து ஆளத்தக்கதென வாசிகாண்க.

நிதியானது தன்னையுடையவர்களை இரவும் பகலுங் கண்ணுறங்க வொட்டாது; எந்த வேளையில் யார் கொள்ளை கொள்வரோவென்று துஞ்சாதிருப்பர் நிதியுடையார். எம்பெருமானை யுடையவர்களுமப்படியே; * கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே * என்கிறபடியே காண்பதற்கு முன்பும் உறக்கமில்லை, கண்டாலும் * ஸதாபச்யந்தியாகையாலே உறக்கமில்லை.

நிதியானது ஸித்தாஞ்ஜனமணிந்த சில பாக்யசாலிகளுக்கே கிடைக்கும்; எம்பெருமானும் பக்தி ஸித்தாஞ்ஜனம் பெற்ற ஆழ்வார்கள் போன்ற சில பாக்யவான்களுக்கே கிடைப்பன்.

நிதியுடையவன் மார்பு நெறிப்பன்; எம்பெருமானைக் கைக்கொண்டவர்களும் * எனக்காரும் நிகரில்லையே * மாறுளதோ விம்மண்ணின் மிசையே * இல்லையெனக் கெதிரில்லை யெனக் கெதிரில்லையெனக் கெதிரே* என்று செருக்கிப்பேசுவர்கள்.

நிதிபடைத்தவனை உலகமெல்லாம் அநுவர்த்திக்கும்; எம்பெருமானைக் கைக்கொண்டவனையும் அப்படியே. * மைத்ரேய: பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்யச * இத்யாதிகள் காண்க.

நிதியையிழந்தவன் கதறிக்கதறியழுவன்; எம்பெருமானை யிழந்தவனுமப்படியே. ஸ்ரீராம பிரானாகிற வைத்தமாநிதியை யிழந்த பரதாழ்வான் ஸபையிற் புரண்டு கதறியழுதானன்றோ. * விலலாப ஸ்பாமத்யே * என்றது காண்க. * பழுதே பலபகலும் போயினவென்று கதறியழுவார்கள். * இன்பத்தையிழந்த பாவியேன் எனதாவி நில்லாதே * எழில்கொள் நின்திருக்கண்ணிணை நோக்கந் தன்னையு மிழந்தேனிழந்தேனே * உன்னைக் காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கியழுவன் * என்றிப்படியெல்லாம் கதறியழுவர்கள். * ஏகஸ்மிந்ப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யானவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம் * எம்பெருமானுடைய சிந்தனையை யிழந்து ஒரு கணப்பொழுது கழியப்பெற்றாலும், கள்வர் ஸர்வஸ்வத்தையும் கொள்ளை கொண்டால் எப்படி கதறியழக்கூடுமோ அப்படி கதறியழவேணுமென்பர் அறிவுடையார். இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் கண்டுகொள்க.

நிதியுள்ளதென்று அறிந்தவாறே அங்கு விரோதிகள்பலரும் சேருவர்கள்; அப்படியே இந்த வைத்தமா நிதிக்கும் விரோதிகள் உண்டாக, அவர்களைத் தானே தொலைத்துத் தன்னைக் காத்துத் தரும்படி சொல்லுகிறது மதுசூதனே என்றவிது. இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாக ஆழ்வார் அலற்றிச் சொன்ன ஆயிரத்துள் இத்திருவாய்மொழியை, திருக்கோளூர்க்கே ப்ரவணமான நெஞ்சை யுடையராய்க்கொண்டு சொல்லுவார் திருநாட்டை ஸ்வாதீனமாக ஆளப்பெறுவர் என்றதாயிற்று. 11

---

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி-ஆறும்பத்து-எட்டாந் திருவாய்மொழி.

## பொன்னுலகாளீரோ.

---

உரையவதாரிகை — இத்திருவாய்மொழிக்கு இரண்டுபடியாக ஸங்கதியருளிச் செய்வர்கள் பூருவர்கள். கீழ்த் திருவாய்மொழியில் * அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனைத் தினைத்தனையும் விடாள் * என்றதை நோக்குங்கால், பராங்குச நாயகிக்குத் திருக்கோளூரெம்பெருமானோடே ஸம்ச்லேஷம் விளைந்ததாகத் தெரிகின்றது; * திருக் கோளூர்க்கே ஒல்கியொல்கி நடந்தாள் எங்ஙனே புகுங்கொலோசிந்தே *என்றதைநோக் குங்கால், பராங்குசநாயகி திருக்கோளூர் சென்று சேர்ந்திருக்கமாட்டாளென்றதாகத் தெரிகின்றது. சென்று சேர்ந்து ஸம்ச்லேஷம் விளைந்ததாகக் கொண்டால், ஸம்ச்லே ஷத்திற்கு அடுத்தபடி விச்லேஷம் ப்ராப்தமாகையாலே பிரிவு உண்டாகி ஆற்றாமை யாலே அவனைக் குறித்துச் சில பக்ஷிகளைத் தூதுவிடுகிறாள் இத்திருவாய்மொழியில் என்று ஸங்கதியாகிறது. திருக்கோளூர்க்குச்சென்று சேரவேயில்லையென்று கொண் டாலும் தூதுவிடுகைக்கு எளிதாகவே ப்ரஸக்தியுண்டாயிற்றதாகிறது.

ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின் :—“ இப்படி திருக்கோளூரிலே யெழுந்தரு ளின பிராட்டியோடுள்ள சிரகால ஸம்ச்லேஷ ஜநித அநவதிகாநந்த மஹார்ணவாந்தர் நிமக்னனான எம்பெருமான் அந்த ஆனந்த வெள்ளம் தனக்கு அஸாத்மியமானவாறே அது ஸாத்மிக்கைக்காக விச்லேஷித்து நெடுங்கால மெழுந்தருளாதிருந்தவாறே தத்விச் லேஷத்தாலே அத்யந்தம் அவஸந்நையான பிராட்டி தன்னுடையவாற்றாமையாலே அவனைக் குறித்துச் சில பக்ஷிகளைத் தூதாக விடுகிறாளென்றுமாம். திருக்கோளூரிலே போய்ப்புக வேணுமென்று புறப்பட்ட இப்பிராட்டி தன்னுடைய அவஸாதத்தாலே பின்னைப் போக க்ஷமையன்றியே அங்கே உத்யானத்திலேயிருந்து எம்பெருமானைக் குறித்து தூதப்ரேஷணம் பண்ணுகிறாளென்றுமாம்.”

ஈட்டு ஸ்ரீஸூக்தி :— “ பன்னிரண்டாண்டு தண்ணீர்த் தூரும்பறக் கலந்து பிரிந்த பிராட்டியைப் போலே அங்கே புக்கு நெடுங்காலம் அவனையநுபவித்துப் பிரிந்து தூது விடுகிறாள் என்று பிள்ளான். புறப்பட்டவள் முடியப்போக மாட்டாதே நகரோபவனத் திலே கிடந்து தூதுவிடுகிறாள் என்று பட்டரருளிச் செய்யும்படி.”

கீழே * துவளில் மாமணிமாடமென்கிற திருவாய்மொழியாதியாக இத்திருவாய் மொழியளவும் நாற்பது பாசுரங்களும் ஸ்த்ரீ பாவனை நெடுக அநுவர்த்தித்தே வரு கின்றமை உணர்க. தோழிபாசுரமாக ஒருபதிகமும், தாய்பாசுரமாக இரண்டுபதிக ங்களும் தலைவிபாசுரமாக இப்பதிகமும்.

சில பறவைகளை எம்பெருமான்பக்கலிலே தூதுபோக விடுகையாகிற இது—சில பாகவதர்களைக் குறித்துப் புருஷகாரக்ருத்யம் செய்யும்படி ப்ரார்த்திக்கையாம். பகவத் விஷயத்தில் அந்வயிப்பிக்குமவர்களைப் பக்ஷிகளாக ப்ரதிபத்திபண்ணுகிறதென்று ஸ்வா பதேசார்த்த மறிவது. பறவையானது இரண்டு சிறகுகளாலே உயர்கதியை அடையுமா போலே ஞானம் அனுட்டான மென்ற இரண்டினால் உயர்கதியை அடைகின்றவர் களான மஹான்களே பக்ஷிகளாக மறைத்துப் பேசப்படுகின்றார்கள். ஆசார்யர்கள், ஸப்ரஹ்மசாரிகள் [ உடன் கல்வி பயின்றவர்கள் ], புத்திரர்கள், சிஷ்யர்கள் ஆகிய இவர் கள் தூதுவிடப்படுகின்றவர்களாக ஆங்காங்கு ஸந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு கொள்க.

இத்திவ்வியப் பிரபந்தத்தில் தூதுவிடும் பதிகங்கள் நான்கில் இது மூன்றாவது. எம்பெருமானுடைய வியூஹஸ்திதியை நோக்கி [அஞ்சிறைய மடநாரையில்] முதல் தூது விடப்பட்டதென்றும், விபவாவதாரத்தை நோக்கி [வைகல் பூங்கழிவாயில்] இரண்டாந் தூது விடப்பட்டதென்றும், பரத்வத்தையும் அந்தர்யாமித்வத்தையும் நோக்கி [இப்பதிகத்தினால்] மூன்றாந் தூது விடப்படுகிறதென்றும் ஆசாரியர்கள் நிரூபித்துக் காட்டியருள்வர்கள். ஆசார்யஹ்ருதயத்தில் "தம் பிழையும் சிறந்த செல்வமும்" இத்யாதியாகவுள்ள சூர்ணையும் அவ்விடத்து வியாக்யானமும் இங்கு உணரத்தக்கன.

இந்தத்தூதில் *தன் மன்னுநீள் கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்* என்று ஆச்ரிதரோடு ஒரு நீராகக் கலந்திருக்கையாகிற ஐகரஸ்யமென்னும் குணம் வெளியிடப்படுகிறது. இப்பதிகத்தில் *மூன்னுலகங்களெல்லாம் படைத்த முகில் வண்ணன் கண்ணன் என்னலங்கொண்ட பிரான் தனக்கு *என்கிற பாசுரம் உயிராயிருக்கும். எம்பெருமான் அடியார்களோடு ஒரு நீராகக் கலந்து பரிமாறுகையாகிற ஐகரஸ்யமுடையனாயினும் தான் படைத்த ஜகத்தின் பரப்பை ரக்ஷிக்கிற பராக்காலே அந்த ஐகரஸ்யத்தை மறந்து என்னை நினையாதிருக்கிறானத்தனை; அத்தையறிவிக்கவே, [அதாவது *தன் மன்னுநீள் கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றிநல்கான்* என்று உறுதி கொண்டிருக்கைக்கு உறுப்பானவரல்லீரோ நீர் என்று உணர்த்தவே] கடுக வந்து சேர்வனென்று தூது விடப்படுகிறது.

இதில் *வானவர்கோனைக் கண்டு யாமிதுவோ தக்கவாறென்னவேண்டும்* என்ற பாசுரத்தையும்* எங்குச் சென்றாகிலுங் கண்டு இதுவோ தக்கவாறென்மின்* என்கிற பாசுரத்தையும் உயிராகக் கொண்டு இத்திருவாய்மொழி—பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூதுவிட்டபடியாமென்பர்.

பொன்னுலகாளீரோ? புவனிமுழுதாளீரோ?*
நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன்நானிரந்தேன் *
மூன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன் கண்ணன் *
என்னலம்கொண்டபிரான் தனக்கு என்னிலைமையுரைத்தே. 1

| | | | |
|---|---|---|---|
| நல் நலம் புள் இனங்காள் | சிறந்த சற்குணமுடைய பறவைத் திரள்களே! | கண்ணன் | அடியார்க்கு எளியனும் |
| வினையாட்டியேன் நான் இரந்தேன் | பிரிவாற்றாமைக்குரிய பாபத்தைப்பண்ணின நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன்; (எதற்காகவென்னில்) | என் நலம் கொண்ட | எனது நன்மைகளை யெல்லாம் கவர்ந்து கொண்டவனுமாயிருக்கிற |
| மூன் உலகங்கள் எல்லாம் படைத்த | முதலில் உலகங்களை யெல்லாம் உண்டாக்கின | பிரான் தனக்கு | எம்பெருமானுக்கு |
| முகில் வண்ணன் | காளமேக நிறத்தனும் | என் நிலைமை உரைத்து | எனது அவஸ்தையைச் சொல்லி |
| | | பொன்உலகு ஆளீர் புவனி முழுது ஆளீர் | உபய விபூதியையும் ஆளுங்கோள். (இதுவே எனது வேண்டுகோள்.) |

* * *[பொன்னுலகாளீரோ.] எம்பெருமான் திறத்தில் புருஷகாரக்ருத்யம் பண்ணுமவர்களுக்கு உபயவிபூதியையும் பரிசளித்தாலும் போதாது என்கிற சாஸ்த்ரார்த்தம் இப்பாட்டில் வ்யக்தமாகிறது. ஸ்ரீவசநபூஷணத்தில் "ஆசார்யனுக்கு ஸத்ருசப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதிசதுஷ்டயமும் ஈச்வரத்வயமும் உண்டாகில்" என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். இவ்விடத்தில் மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"உபய விபூதியையும் விபூதிமானான ஈச்வரனையும் தானிட்ட வழக்காம்படி பண்ணிக்கொடுத்த ஆசார்யன் பண்ணின உபகாரத்துக்கு ஸத்ருசமான ப்ரத்யுபகாரம் பண்ணலாவது இப்படியே இரண்டு விபூதியும் விபூதிமானாயிருப்பான் ஓர் ஈச்வரனும் வேறே யுண்டாகிலென்கை" என்பதாம்.

*பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ* என்று சொல்லுகிற ஆழ்வாருடைய உக்தி ஸாம்ராஜ்யத்தை நோக்குங்கால் உபய விபூதியும் ஆழ்வார் கையிலே ஸ்வாதீனமாகவுள்ள தென்னுமிடம் நன்கு தெரிகின்றதன்றோ. எம்பெருமான் தன்னுடைய தான சரக்கையும் தன்னடியார்க்கு இஷ்டவிநியோக யோக்யமாகவன்றோ ஆக்கி வைத்திருக்கிறான். *பரமபதமதாண்டாநி ஆத்மதேஹஸ ததாத்மா வரத! ஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த* என்று கூரத்தாழ்வானுமருளிச்செய்தார். வேதாந்த தேசிகனும் *தந்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ* என்கிறார். எம்பெருமான் அடியார்களுக்குத் தன் விபூதியைக் கொடுக்க நினைத்தால் ஆசார்யர்களின் ஆஜ்ஞையை எதிர்பார்த்தே கொடுக்கிறானென்று இந்த ச்லோகத்தின் தாத்பரியம். ஸர்வேச்வரன் ஆசார்யர்களின் ஆணையை எதற்காக எதிர்பார்க்கவேணும்? இது அதிசயோக்தியன்றோ என்று நினைக்க வேண்டா; உண்மையில் *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்றிருக்கிற எம்பெருமான் தனது விபூதிகளையெல்லாம் ஞானிகளுடையதாக இலச்சினைப்படுத்தி வைத்திருக்கையாலே அந்த ஞானிகளின் ஆணையின்றி ஒருவர்க்கும் ஒன்றுங் கொடுக்கவில்லான். இவ்வர்த்தங்களையெல்லாம் ஆழ்வார் இங்கு மெய்ப்பிக்கிறார் 'பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ' என்ற கம்பீரமான பாசுரத்தினால்.

பக்ஷிகளே! நீங்கள் எம்பெருமான் பக்கலிற்சென்று எனது நிலைமையை உரைத்து வந்தால் அதற்கு கைம்மாறாக நான் உங்களுக்கு உபய விபூதிகளையும் பரிசளிப்பேன் என்பது முதலடியின் கருத்து. இங்கே சிலர் சங்கிக்கக் கூடியதுண்டு; ஆழ்வார் பரமபதம் பெறுகைக்குத் தானே திருவாய்மொழி முகத்தாலே மிகவும் சிரமப்படுகிறார்; பொன்னுலகாளீரோ என்று தைரியமாகச் சொல்லும்படியாய் பரமபதம் இவர் கைப்பட்டதாயிருக்குமாகில் இந்த சிரமம் வேண்டாவன்றோ—என்பதாக. இது அரஸிக சங்கையேயாகும். *தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுகைக்காக வன்றோ எம்பெருமான் ஆழ்வாரை இங்கு வைத்துத் துவளப் பண்ணுவது. இவ்வளவால், உபய விபூதியையும் தாமிட்ட வழக்காம்படி பெற்றிருக்கிற ஆழ்வாருடைய ப்ரபாவத்திற்கு ஒரு குறையுண்டோ? ஸ்ரீவசநபூஷணத்தில் "சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது" என்ற விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "பிராட்டியென்னாதே சிறையிருந்தவளென்றருளிச் செய்தது அவளுடைய தயாதிசயத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக" என்று தொடங்கி விசிவாக அருளிச் செய்துள்ளவை இங்கே அநுஸந்தேயம்.

நன்னலப் புள்ளினங்காள்!— நன்னலமென்பதனாலே தேஹகுணங்களும் ஆத்மகுணங்களும் விவக்ஷிதங்கள். ஆசார்யனிடத்தில் இரண்டும் உத்தேச்யமாகும். சமதமாதி குண ஸம்பத்திகள் போலவே திருமேனி நலமும் உபஜீவ்யமாகையாலே இவற்றால் நிறைந்த ஆசாரியர்களே ஸ்வாபதேசத்தில் விவக்ஷிக்கிறது. வினையாட்டியேன் நானிரந்தேன்— தூது செல்லவேணுமென்று இரக்கிறாளல்லள்; உபய விபூதியையும் உங்களுக்கு நான் கொடுக்க நீங்கள் அவற்றை ஆளவேணும் என்றிரக்கிறாள். எம்பெருமானார் கோஷ்டியிலே சிஷ்யர்கள் ஒரு சர்ச்சை பண்ணினார்களாம்; இவள் உபய விபூதியையுங்கொடுத்து விட்டாளாகில் அவன் வந்தால் தானுமவனும் எங்கேயிருப்பது? என்று. அப்போது அனந்தாழ்வான் பணித்தாராம்— இக்குருவி காட்டின விடத்தே என்று. ரஸிக ஸார்வ பௌமர்களின் சங்கையும் ஸமாதானமும் பரமபோக்யமாயிருக்கும். இங்கே மற்றொரு சங்கையு முண்டு; 'பொன்னுலகாளீரோ' என்று சொன்னது பொருந்தும்; அது சொன்னவாயாலே 'புவனிமுழுதாளீரோ' என்னவும் தகுமோ? உத்தேச்யமான நித்யவிபூதியைக் கொடுத்தவள் த்யாஜ்யமான லீலாவிபூதியையும் கொடுக்கத் தேடவேணுமோ? என்று. இவை பண்ணுகிற உபகாரத்தை நினைத்து இன்னது கொடுப்போமென்றறியாமல் கலங்கிச் சொன்னபடி.

உபய விபூதியையும் ஆளுங்கோள் என்றவாறே, 'ஆளத் தடையுண்டோ? கொடுத்தால் ஆளுகிறோம்' என்று புள்ளினங்கள் நெருங்கிவர, என்காரியத்தை நான் செய்யும்போது உங்கள் காரியத்தை நீங்கள் செய்யவேண்டாவோ? அது செய்து வந்து உபயவிபூதியையும் ஆளுங்கோளென்கிருள் பின்னடிகளால். எம்பிரான் இறந்து என்நிலையை யுரைக்கவேணும். எம்பெருமானுக்கு நான்கு விசேஷணமிடுகிருளிங்கு. 1. பிரானே! நீ உலகங்களெல்லாம் படைத்தவனன்றோ? 'செடிவைத்தவன் தண்ணீர் வார்ப்பது' என்ற கணக்கிலே படைத்த நீ அளிக்கவும் வேண்டாவோ என்று சொல்லுங்கோள். 2. பிரானே! நீ முகில்வண்ணனல்லையோ? உன் வடிவழகைக்காட்டி யீடுபடுத்திக்கொண்டாயானபின்பு மேன்மேலும் அவ்வடிவழகை உபகரிக்க வேண்டாவோ? என்று சொல்லுங்கோள். 3. பிரானே! நீ கண்ணனாக அவதரித்த காலத்து ஒவ்வொருவர்க்கும் கையாளாயிருந்துவைத்து இப்போது ஒருத்திக்கு அருமைப்படுவது தகுதியோ? என்று சொல்லுங்கோள். 4. ஒருத்தியை இங்ஙனே ஸர்வஸ்வாபஹாரம் பண்ணிப் படுகொலையடிப்பது பாங்கோ? என்று சொல்லுங்கோள் என்றவாறு.

'என்னிலைமையுரைத்தே' என்றவிடத்து என்னிலைமை என்பதற்கு நம்பிள்ளை யருளிச் செய்யும் பொருள் மிக அற்புதம். "ஜகத் காரணத்வம் அவதாரம் தன் பக்கல் பண்ணின விசேஷ கடாக்ஷம் இவையெல்லாம் கண்ணழிவறச் சொன்னாள்; அவன் குணங்களிலே அவகாஹித்த தன்படி தன்னாலும் பேசப்போகிறதில்லை" என்று. எம்பெருமான படிகளை விரிவாகப் பாசுரமிட்டுப் பேசுமிவர் தம் நிலைமையைப்பற்றிச் சிறிது பேசலாகாதா? என்று சங்கை. பேச்சுக்கு நிலமல்லாததை எங்ஙனே பேசுவது என்று ஸமாதானம். தன் வடிவைக்காட்டி "என்னைக்கண்ட நீங்களே பாசுரமிட்டுச் சொல்லுங்கோள்" என்றுளென்க. ... .... ... 1

மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்பென்கையிருந்து *
நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ? *
கையமர்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள்! விரைந்தோடிவந்தே. 2

| | | | |
|---|---|---|---|
| கிளிகாள் | கிளிகளே! | விரைந்து ஓடி வந்து | உடனே இவ்விடம் வந்து சேர்ந்து |
| கை அமர் சக்கரம் | திருக்கையில் அமர்ந்த திருவாழியையுடையனும் | மை அமர் வாள் நெடு கண் | மையணிந்து அழகிய நீண்ட கண்களையுடைய |
| கனிவாய் | சொல்லைக்கனிபோன்ற அதரத்தை யுடையனுமான | மங்கைமார் முன்பு | தோழிமார் முன்னிலையிலே |
| என் பெருமானை கண்டு | எம்பெருமானைச் சேவித்து | என் கை இருந்து | என்கையிலே வீற்றிருந்து |
| மெய் அமர் காதல் சொல்லி | உடம்போடே அணையவேண்டும்படி எனக்குண்டாயிருக்கிற என் காதலைத் தெரிவித்து | நெய் அமர் இன் அடிசில் | நெய்யோடு பொருந்திய இனிய அடிசிலை |
| | | பாலொடு | பாலோடுக்கூட |
| | | நிச்சல் மேவீர் | நித்தியமாக ஸ்வீகரிக்க வேணும். |

* * * [மையமர்வாள்.] என்னுடைய ஆற்றாமையை எம்பெருமானுக்கு அறிவித்து வந்து, நானும் என் தோழிமாரும் கொண்டாட அத்தை அங்கீகரிக்க வேணுமென்று சில கிளிகளை நோக்கி வேண்டுகின்றாள். தலைவி தான் செய்ய நினைத்திருக்கும் கைம்மாறுதன்னை மூந்துற முன்னம் சொல்லிவிட்டுப் பிறகு அவை செய்யவேண்டிய காரியத்தைச் சொலலியிருக்கையாலே பாகவத ஸத்காரமே தனக்குப் பரமோத்தேச்யமென்னுமிடம் காட்டப்பட்டது. கீழ்ப்பாட்டிலே உபயவிபூதியையும் கொடுப்பதாகச் சொல்லியற்ற பிறகு இனிமேல் கொடுக்கக்கூடியது என்ன இருக்கிறது? என்று சிலர் சங்கிக்க நேரும். அதற்குப் பரிஹாரமாக நம்பிள்ளை யருளிச்செய்கிறபடி பாரீர் — "முதற்பாட்டில் அவன் பதங் கொடுத்தாள்; அதுக்குமேலே யொருபதம் தேடிக்கொடுக்கிருள் இப்

பாட்டில். அவன் பதமாகிறது உபயவிபூதியுமிறே. அதுக்கு மேலான பதமாகிறது அவனாலே விரும்பப்படும் தன்னைக் கொடுக்கை. தன்னைக் கொடுக்குமிடத்திலும் பின்னை முன்னை யென்னாதே எல்லாருங் காணக் கைமேலேயிறே கொடுக்கப்புகுகிறது.”

மையமர்வாள் நெடுங்கண் மங்கைமார் முன்பு — இவ்வாக்கியம் அவசியம் வேணுமோ? ‘என் கையிருந்து’ என்றால் போராதோ? என்னில்; பரிஜனங்களோடே கூடிக்குலாவி ஸத்கரிக்க வேணுமென்று ஆசையாகையாலே அது தன்னைக் காட்டுகிறபடி. மையணிந்த நெடுங் கண்களையுடைய மங்கைமார்களென்றதற்கு அழகிய ஸ்வாப தேசார்த்தம் குறிக்கொள்க. * மனஸி விலஸதாக்ஷ்ணு பக்திஸித்தாஞ்ஜநோ * என்று பட்டரும், * ஸித்தாஞ்ஜநோ பவதைவ விபூஷிதாக்ஷா: * என்று தேசிகனும் பணித்த படியே பக்தியை மையென்கிறது. கண் என்கிறது ஞானத்தை: பக்தி பரிகர்மிதமான ஞானத்தையுடையார் என்றபடி.

நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலோடுமேவீரோ? நெய் அடிசில் பால் என்று மூன்றைச் சொன்னது தத்வ ஹித புருஷார்த்தங்களைச் சொன்னபடி. போதயந்த: பரஸ்பரம் * என்ற கணக்கிலே இவற்றை உபகரிக்க நினைத்தபடி. பகவத்வைபவம், பாகவத வைபவம், ஆசார்யவைபவம் என்ற மூன்றையும் சொல்விற்றாகவுமாம். இப்பேற்றுக்கு நாங்கள் என்ன செய்யவேணுமென்ன, அவை செய்யவேண்டிய காரியத்தைச் சொல்லுவன பின்னடிகள். கிளிகளே! ஒரு தாமரையிலே ஒரு தாமரை பூத்தாற்போலே திருக்கையும் திருவாழியும் சேர்ந்திருக்கிற வழகாலும், திருவாழியைக் கண்ட வுகப்பாலே புதுக் கனித்த திருப்பவளத்தினழகாலும் என்னை யடிமைகொண்டவனுடைய அழகைக் கண்டு நீங்கள் உள்ளம்பூரித்து என்னுடைய காதலை அவனுக்கு வெளியிட்டு, அவனருளிச்செய்யும் வார்த்தைகளை விரைந்தோடிவந்து எனக்குச் சொல்லி என்னைத்தரிப்பித்து நெய்யமரின்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ.

மெய்யமர் காதல்— “அவளுக்கு உன்பக்கலுள்ள ஸ்நேஹம் மெய்யான ஸ்நேஹமென்று அவனுக்குச் சொல்லி” என்பது ஆறாயிரப்படி யருளிச்செயல் “திருமேனியிலே அணையவேண்டும் படியான காதலென்னுதல்; என்னுடம்போடே யணையவேண்டும் படியான காதலென்னவுமாம்.” என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

கிளிகாள்! — கிளி வலையில் அகப்படுமாபோலே * மாதரார்கயற்கணென்னும் வலையுள்படாதே * தாமரைத் தடங்கண் விழிகளின் அகவலைப்படுப்பான் * என்கிற படியே எம்பெருமானது திருக்கண்ணோக்கவலையில் அகப்பட்டும், கிளி வளர்த்தெடுப்பாருடைய கைவசமாயிருப்பதுபோலே போஷகர்களான ஆசாரியர்களுக்கு அதீனர்களாயிருந்துகொண்டும், * சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை * என்கிறபடியே கிளி கற்பித்ததையே சொல்லுமாபோலே * முன்னோர்மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுமவர்களாயுமுள்ளவர்கள் கிளியாக விவக்ஷிதர்கள். 2

ஓடிவந்தேன்குழல்மேல் ஒளிமாமலருதீரோ?*
கூடியவண்டினங்காள் குருநாடுடையைவர்கட்காய் *
ஆடியமாநெடுந்தேர்ப்படை நீறெழச்செற்றபிரான் *
சூடியதண்துளவமுண்ட தூமதுவாய்கள்கொண்டே. 3

| | | | |
|---|---|---|---|
| கூடிய வண்டு இனங்காள் | கூடிக் களித்திருக்கின்ற வண்டு திரள்களே! | ஆடிய மா நெடு தேர்ப்படை | ஆட்டித் திறந்த குதிரைகளையும் பெரிய தேர்களையும் மற்றுமுள்ள சேனைகளையும் |
| குருநாடு உடைய ஐவர்கட்கு ஆய் | குருக்ஷேத்திரத் தலைவர்களான பஞ்சபாண்டவர்களுக்காக | நீறு எழ செற்ற பிரான் | பொடியாம்படி முடித்த எம்பெருமான் |

| | | | |
|---|---|---|---|
| சூடிய | திருக்குழலில் அணிந்து கொண்டிருக்கிற | ஓடி வந்து | விரைந்து வந்துசேர்ந்து |
| தண் துளபம் உண்ட | குளிர்ந்த திருத்துழாயிலே விருந்து மதுபானம் பண்ணின | என் குழல் மேல் | என் கூந்தலிலுள்ள |
| தூ மது வாய்கள் கொண்டு | தெளிந்த மதுவையுடைத்தான வாயையுடையீர்களாய்க் கொண்டு | ஒளி மா மலர் | ஒளி பொருந்திய சிறந்த பூவிலே |
| | | ஊதீர் | உங்களுடைய உத்ஸாஹச் செயல்களைச் செய்யுங்கள். |

* * * [ஓடிவந்து.] எம்பெருமான் பக்கலிற்சென்று என் நிலைமையை அறிவித்து வந்து என்தலைமேலே வர்த்தியுங்கோளென்று சில வண்டுகளைக் குறித்துச் சொல்லுகிறாள். நீங்கள் தூது சென்றால் உங்களைத் தலைமேலே வைத்துக் கொண்டாடுவேனென்கை. கூடிய வண்டினங்காள்!— எம்பெருமான் பக்கலிலே ஒருவரிருவராய்ச் சென்று தூது சொன்னால் அவன் செவி கொடுத்துக் கேளான்; ஒரு கூட்டமாகச் சென்று சொல்லவேணும்: அதற்கு, இனிமேல் கூட்டம் திரட்டவேண்டாமல் ஏற்கனவே திரண்டிருக்கின்றீர்களே, இது என்னுடைய பாக்கியம் என்கிறாள் போலும். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி:— "மஹாராஜரைப்போலே படைதிரட்ட வேண்டாவிறே உங்களுக்கு; என்னுடைய ரக்ஷணத்திலே ஒருப்பட்டு முன்பே திரண்டிருக்கப் பெற்றதிறே. இளையபெருமாள் கிஷ்கிந்தாத்வாரத்திலே சென்று குணகீர்த்தனம் பண்ணின பின்பிறே படை திரட்டிற்று.

இப்பாட்டின் ஆறாயிரப்படி யருளிச்செயல் பரமபோக்யதையே வடிவெடுத்ததாயிருக்கும். "ராஜ்யப்ராப்தராய் ஸமாச்ரிதருமான பாண்டவர்கள் பக்கலுள்ள வாத்ஸல்யத்தாலே த்ரைலோக்ய விஜயோபகரண பூதமாய் அத்யுந்நதமாயிருந்த திருத்தேரிலே நின்ற அவர்களுக்கு ஸாரத்யம் பண்ணித் தத்விரோதிகளை நிரஸித்தருளின ஸமயத்திலே பரமபக்தியுக்தரான திவ்ய ஜனங்கள் சிரோபசாரமாகச் சாத்தியருளப் பண்ணின திவ்யகந்தமான திருத்துழாய் மதுவைப் பானம்பண்ணி அத் தூமதுவாய்களைக்கொண்டு ஓடிவந்து அம்மதுவையும் அதிசீதளமான திவ்ய கந்தத்தையும் என் குழல்மேல் ஒளிமா மலர்களிலே வர்ஷிக்கவேணும்: வர்ஷிக்கவே அம்மலர்களும் மலர்ந்து புதுக்கணிக்கும் என்னிறம் பண்டு பண்டுபோலாக்கும்; கெண்டை யொண்கணும் துயிலுமென்று...... வண்டுகளை நோக்கிச் சொல்லுகிறாள்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல்.

பரமபுருஷனிடம் நாங்கள் செல்லக்கூடுமோ! ஒருவாறு சென்று விண்ணப்பஞ் செய்தாலும் முகங்கொடுத்துக் கேட்கும்படியாயிருக்குமோ? காரியம் செய்யப் பெறுமோ? என்று வண்டுகட்கு நினைவாக, அவன் பரமஸௌலப்யனாயிற்றே, * பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப் பாரதத்துக் கந்தார் களிற்றுக் கழல்மன்னர் கலங்கச் சங்கம் வாய்வைத்தான் * என்கிறபடியே ஒருத்தி விரித்த கூந்தலை முடிப்பிக்கப் பாண்டவர்களுக்குப் பக்ஷபாதியாயிருந்து கழுத்திலே ஓலைகட்டித் தூது சென்று விரோதிகளைப் பிணம் படுத்த பெருமானன்றோ வென்று ப்ரக்ருதத்திற்கு உபயுக்தமான குணங்களை விளக்கினபடி.

ஸாரக்ராஹிகளான ஆசார்யர்களையோ சிஷ்யர்களையோ வண்டென்கிறது. தேனையே தாரகமாகக்கொண்டிருக்கும் வண்டு; *உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறிய தேன் * எனப்பட்ட பகவத்விஷயமாகிற தேனையே தாரகமாகக் கொண்டிருப்பார்கள் இவர்கள். ... ... ... 3

தூமதுவாய்கள்கொண்டுவந்து என்முல்லைகள்மேல்தும்பிகாள்! *
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்பொய்செய்தகன்ற *
மாமதுவார் தண்துழாய்முடி வானவர்கோனைக்கண்டு *
யாமிதுவோ தக்கவாறு என்னவேண்டுங்கண்டீர் நுங்கட்கே, 4

| | |
|---|---|
| முல்லைகள் மேல் என் தம்பிகாள் | முல்லைப்பூக்களிலே வாழ்கிற எனக்கு இனிய தம்பிகளே! |
| தூ மது வாய்கள் கொண்டு வந்து | தூய மதுவிலே படிய வேண்டிய வாயைக் கொண்டுவந்து |
| பூ மது உண்ண செல்லில் | அந்த முல்லைப்பூக்களில் மதுவை புண்ணச் செல்லகினைத்தீர்களாகில், (அதற்காக நீங்கள் செய்ய வேண்டியதொன் றுண்டு; அது என்னென்னில்) |
| வினையேனை | பிரிந்து வருந்தவேண்டிய பாவத்தைப் பண்ணின என்னோடே |
| பொய் செய்து | க்ருத்ரிமமான கலவியைப் பண்ணி |
| அகன்ற | பிரிந்துபோன |
| மா மது வார் தண் துழாய் முடி | பெருவெள்ளமான மது ஒழுகுகின்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையை முடியிலணிந்துள்ள |
| வானவர்கோனை கண்டு | நித்யஸூரிநாதனை நேரில் ஸேவித்து |
| யாம் இதுவோ தக்க ஆறு என்னவேண்டும் நுங்கட்கு | 'நாம் இப்படி மேன்மை கொண்டாடியிருப்பதோ தகுதி?' என்று நீங்கள் சொல்லவேண்டும். |

* * * [தூமதுவாய்கள்.] என்னை நோவுபடுத்திப்போய் எட்டாநிலத்திலே ஓலக்கமிருக்கைதான் ஒரு ஸ்ரீமத் காம்பீர்யமோவென்று கேளுங்கோளென்று திருநாட்டிலே சில தும்பிகளைத் தூது விடுகிறாள். பூமதுவுண்ணச் செல்லில்— தும்பிகள் எங்கேனும் மதுவைத் தேடிப்பருகுவதற்கு ஆசையோடே எங்கும் திரியும்; பரமபதநாதனுடைய திருமுடியிலே மதுநிரம்பிய செவ்வித்துழாய் மலர் மிகமிகவுள்ளதென்று தெரிந்துகொண்டு அங்கும் செல்லக் கூடுமென்றெண்ணிச் சொல்லுகிற வார்த்தை இது.

வினையேனைப் பொய்செய்து அகன்ற—“பாக்யஹீநையான வெனக்கு ஸம்ச்லேஷமென்று ஓர் இந்த்ரஜாலத்தைக் காட்டி” என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். மாமதுவார் தண்டுழாய்முடி வானவர்கோனைக் கண்டு— இது பரிதாபம் தோற்றச் சொல்லுகிற வார்த்தை; என் தலையிற் பூ சருகாய் வாடியுலர்ந்து கிடக்க, அவர் மாமதுவார் தண்டுழாய் முடியராய் விளங்கா நின்றார்; பிரிவாற்றாமையாலே நான் ஒரு மூலையிலே முகத்தை மூடிக்கொண்டு உருவிக்கிடக்க, அவர் நித்ய ஸூரிகளுக்கு ஓலக்கங் கொடுத்துக்கொண்டு வானவர்கோனாக வீற்றிராநின்றார்! என்று காட்டுகிறபடி. அன்னவரைக்கண்டு “யாமிதுவோ தக்கவாறு” என்னுமிவ்வளவே நீங்கள் சொல்லவேண்டிய வார்த்தை. இங்கு யாம் என்றது நீர் என்றபடி; எம்பெருமானே! நீர் பராங்குசநாயகியின் துடிப்பறியாதே இங்ஙனே போது போக்குகை தகுதியோ? என்ன வேண்டுமென்றபடி.

இப்பாட்டில் * வானவர் கோனைக்கண்டு * என்றதை உயிராகக்கொண்டு இது பரத்வத்தில் விடுகிற தூது என்பர். ... ... 4

நுங்கட்குயானுரைக்கேன்வம்மின் யான்வளர்த்தகிளிகாள்! *
வெங்கண்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சங்கவர்ந்த *
செங்கண்கருமுகிலைச் செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை *
எங்குச்சென்றாகிலும்கண்டு இதுவோதக்கவாறென்மினே: 5

| | |
|---|---|
| யான் வளர்த்த கிளிகாள் | நான் வளர்க்க வளர்ந்த கிளிகளே! |
| வம்மின் | இப்படி வாருங்கள் |
| நுங்கட்கு யான் உரைக்கேன் | உங்களுக்கு நான் ஒன்று சொல்லுகின்றேன்; |
| வெம் கண் புள் | வெவ்விய கண்ணையுடைய பெரிய திருவடியை |
| ஊர்ந்துவந்து | நடத்திக்கொண்டு என் பக்கலிலே வந்து |
| வினையேனை நெஞ்சம் கவர்ந்த | பாவியான என்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட |
| செம் கண் | புண்டரீகாக்ஷனும் |
| கரு முகிலை | காளமேகச்யாமனும் |
| செய்யவாய் | சிவந்த அதரத்தை யுடையவனும் |
| செழு கற்பகத்தை | விலக்ஷண கல்பவ்ருக்ஷம்போன்றவனுமான எம்பிரானை |
| எங்கு ஆகிலும் சென்று கண்டு | எவ்விடத்திலாவது சென்று ஸேவித்து |
| இதுவோ தக்க ஆறு என்மின் | இது தானோ தகுதியென்று சொல்லுங்கோள். |

* * * [நுங்கட்கு யான்.] மீண்டும் கிளிகளை விளித்துச் சொல்லுகிறாள். எங்கேனும் போயாகிலும் அவனைக் கண்டு 'உம்முடைய தக்கவாறு இதுவோ' வென்னுங்கோளென்கிறாள். சொல்ல நினைத்த வார்த்தையை ஆரம்பித்துச் சொல்லலாமே; "நுங்கட்கு யானுரைக்கேன் வம்மின்" என்றவிது அவசியமோ? என்று சங்கை தோன்றக்கூடும்: இதற்குப் பரிஹாரமாக நம்பிள்ளையருளிச் செய்வது பாரீர்;—"தனக்கு முன்னே ஆற்றாமையோடே யிறே அவையிருக்கிறது; ஆருக்குச் சொல்லும் வார்த்தையை ஆருக்குச் சொல்லுகிறது: ஆற்றாமை சொல்லுவியாததில்லையிறே." என்று (இதன் கருத்தாவது—) எனது நிலைமையை நான் வாய்விட்டுச் சொல்லாமலே நீங்கள் தாமாகவே அறிந்துகொள்ள வல்லி கோள்; தூதுபோக வேண்டுந் தசை இவளுக்குள்ளதென்று நீங்களே உணர்ந்து தூதுபோகக் கடமைப்பட்டிருக்கிறீர்கள்; உங்களுக்கு நான் சொல்ல வேண்டியதேயில்லை; ஆனாலும் என்னாற்றாமையாலே சொல்லாதிருக்க முடியவில்லை, சொல்லுகிறேன் வாருங்கள் என்கிறாள் என்பதாம்.

தூதுபோகைக்காகவன்றோ உங்களை நான் வளர்த்தது என்கிற கருத்துத்தோன்ற யான் வளர்த்த கிளிகாள்! என்கிறாள். * வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக வென்று மடக் கிளியைக் கைகூப்பி வணங்கினாளே *. என்கிறாள் எங்கள் தோழிமார்களிலே யொருத்தி; அப்படியே நானும் கைகூப்பி வணங்கும்படியாகக் காரியம் செய்யுங்கோளென்கிறாள்.

நாங்கள் யாரிடம் செல்லவேணும்? எங்கே செல்லவேணும்? யாது சொல்லவேணும்? என்று கிளிகள் கேட்க, மூன்றுக்கும் விடை கூறுகின்றாள் பின்னடிகளால். * அருளாழிப்புள் * என்று முன்பு சொன்ன வாயாலே இப்போது "வெங்கட்புள்" என்கிறாள்: என் பக்கலிலேயே தங்கியிருக்கவேண்டிய தலைவனை கண்பாராதே பிரித்துக்கொண்டுபோன புண்ணியனன்றோ அப்புள்ளரையன் என்று வயிறெரிந்து சொல்லுகிறபடி. அப் பெரிய திருவடியை நடத்திக்கொண்டு வந்து என்னுடைய நெஞ்சைக் கவர்ந்துசென்றவன் இன்னானென்று உங்களுக்குத் தெரியுமே: அவனைத்தான் காளமேகமென்றும் கற்பகமென்றும் கவி பாடித்திரிவர்கள்; அவன் என்னைப்போலே இன்னும் பலரையும் துடிக்கவிட்டு ஒருவர்க்கும் அகப்படாமே எங்கேனு மிருப்பன்; எங்கிருந்தாலும் கண்டுபிடிக்க உங்களால் முடியுமே; எங்குச்சென்றாகிலும் காணுங்கோள்: கண்டு அதிகமான பேச்சுக்கள் பேசவேண்டா; "இதுவோ தக்கவாறு" என்றிவ்வளவே சொன்னாற் போதுமானது என்கிறாள்.

இப்பாட்டில் "எங்குச்சென்றாகிலுங்கண்டு" என்றதை உயிராகக் கொண்டு இத்திருவாய்மொழி அந்தர்யாமித்வத்திலும் தூதுவிடுகிறதாக நிர்வஹிப்பார்கள். இங்கே சட்டு ஸ்ரீஸூக்தி:- யமாத்மா என்றருளித்திருக்குமிடமெங்கும் புக்கு." என்றும். 5

என்மின்னுநூல்மார்வன் என்கரும்பெருமானென்கண்ணன் *
தன்மன்னுநீள்கழல்மேல்தண்துழாய் நமக்கன்றிநல்கான் *
கன்மின்களென்றும்மையான் கற்பியாவைத்தமாற்றம்சொல்லி *
சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே! 6

- தீ வினையேன் வளர்த்த சிறு பூவைகளே — கொடிய பாபியான நான் வளர்க்க வளர்ந்த சிறுபூவைப் பறவைகளே!
- என் மின்னு நூல் மார்வன் — மின்போலே விளங்குகின்ற யஜ்ஞோபவீதமணிந்த திருமார்பை எனக்கு அநுபவிப்பித்தவனும்
- என் கரும் பெருமான் — தன் திருமேனி நிறத்தை எனக்கு அநுபவிப்பித்த பெருமானும்
- என் கண்ணன் — எனக்கு ஸர்வாத்மநா விதேயனுமான எம்பெருமான்
- தன் நீள் கழல் மேல் மன்னு தண் துழாய் — தனது நெடிய திருவடிகளின் மீது பொருந்தியுள்ள திருத்துழாயை

| | | | |
|---|---|---|---|
| நமக்குஅன்றி நல்கான் | நமக்குத் தவிர வேறொருவர்க்கும் கொடுக்கவில்லான் ; | யான் உம்மை கற்பியா வைத்த | நான் உங்களுக்குக் கற்பித்து வைத்த |
| என்மின்கள் என்று | 'நான் சொல்லிக்கொடுப்பதை அப்யஸியுங்கோள்' என்று சொல்லி | மாற்றம் சொல்லி | பாசுரங்களைச் சொல்லிக் கொண்டு |
| | | சென்மின்கள் | அப்பெருமானிடம் செல்லுங்கோள். |

* * * [என்மின்னுநூல்.] சில பூவைகளைத் தூது விடுகிறாள். பூவைகளை இவள் அழைக்கும்போதே அவை சிறிது பராமுகமாயிருந்தன ; பராத்பரனிடத்தில் நம்மை இவள் தூதுபோகச் சொல்லுவள் ; அவன் நம் வார்த்தையைக் கவனிப்பனோ? ஒன்று கொடுப்பனோ? இதெல்லாம் வீண் ப்ரயாஸந்தானே என்றிருந்தனவாகக் கொண்டு அவற்றுக்கு உத்ஸாஹம் பிறக்குமாறு உரைக்கின்றாள். இப்பாட்டில் இரண்டாமடி உயிரானது. அலங்காரத்தாலும் வடிவழகாலும் ஸௌலப்யத்தாலும் என்னையீடுபடுத்திக் கொண்டவன், தன்மன்னுநீள்கழல்மேல்தண்டுழாய் நமக்கன்றி நல்கான்— * தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந் துழாயுடையம்மான் * என்னும்படி திருத்தோள் முதலான பல அவயவங்களில் அவர், திருத்துழாய் அணிந்துகொள்வர் ; எதை ஆர்க்குக் கொடுத்தாலும் அடிமேல் புனையுமது அடியார்களுக்கே யாகையாலே திருவடிகளில் சாத்தின திருத்துழாயை நமக்கன்றி மற்றையோர்க்குத் தந்திடமாட்டார் ; ஆகையாலே நீங்கள் சங்கையின்றிச் செல்லலாம் என்றவாறு.

நெடுந்தூரம் செல்லவேணுமே ; பாதேயம் [வழிச்சாதம்] ஏதேனுமுண்டோ வென்று கேட்க, * பாதேயம் புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம் என்பது உங்களுக்குத் தெரியாமையில்லையே ; உங்களுக்கு நான் கற்பித்துவைத்த வார்த்தைகள் பலவுமுண்டே ; * தயிர்ப்பழஞ் சோற்றொடு பாலடிசிலும் தந்து பயிற்றிய சொற்கள் இல்லையோ? அவற்றைச் சொல்லிக்கொண்டே செல்லுங்கோளென்கிறாள். த்வயாநுஸந்தாநம் பண்ணிக்கொண்டே செல்லுங்கோளென்பது உள்ளுறை.

கற்பியா—செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். கற்பித்துஎன்றபடி.

தீவினையேன்வளர்த்த என்பதற்கு மர்மஸ்பர்சியான பொருளை நம்பிள்ளை வெளியிட்டருளுகிறார்.—"என்னுடைய பாபமிருந்தபடி பாருங்கோள் ; அவனும் நானும் கூடவிருந்து உங்களைக் கொண்டாடுகையன்றிக்கே உங்களைக்கொண்டு காரியங் கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன். வயிற்றில் பிறந்தாரையிடுவித்து அபிமதனை அழைத்துக்கொள்ளுகையோபாதி புன்மையில்லையே." ... 6

பூவைகள்போல்நிறத்தன் புண்டரீகங்கள்போலுங்கண்ணன் *
யாவையும்யாவருமாய் நின்றமாயனென்னாழிப்பிரான் *
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்கென்மாற்றம்சொல்லி *
பாவைகள் தீர்க்கிற்றிரே வினையாட்டியேன் பாசறவே. 7

| | | | |
|---|---|---|---|
| பாவைகள் | எனது லீலோபகரணங்களான மரப்பாச்சிகளே ! | மாவை வல் வாய் பிளந்த | குதிரை வடிவுகொண்டு நலிய வந்த கேசியென்னு மசுரனுடைய வலிய வாயைக் கீண்டு அவனை முடித்தவனுமான |
| பூவைகள் போல் நிறத்தன் | பூவைப்பூவண்ணனும் | மதுசூதற்கு | மதுஸூதனனுக்கு |
| புண்டரீகங்கள் போலுங் கண்ணன் | புண்டரீகாக்ஷனும் | என மாற்றம் சொல்லி | எனது தூதுவாக்களைச் சொல்லி |
| யாவையும் யாவரும் ஆய்நின்ற மாயன் | ஸகல சேதநாசேதந ஸ்வரூபியும் ஆச்சர்ய சக்தியுக்தனும் | வினையாட்டியேன் பாசறவு | பாவியான என்னுடைய நிறக்கேட்டை |
| என் ஆழி பிரான் | கையுந்திருவாழியுமான அழகை எனக்குக் காட்டித் தந்தவனும் | தீர்க்கிற்றிரே | தீர்க்க வல்லீர்களோ? (தீர்க்கவேணும் என்றபடி.) |

* * * [பூவைகள் போல்.] இப்பாட்டுக்கு விளி ஈற்றடியிலேயுள்ளது; 'பாவைகள்' என்றது அண்மைவிளியாகையாலே பாவைகாள்! என்றபடி. பாவையாவது மரப்பாச்சி; அறிவில்லாமைக்கு எல்லைநிலமான பாவைகளையும் பார்த்து இரக்கிறாள். பரமசேதநனான ஸர்வேச்வரனே உபேக்ஷித்துக் கைவாங்கி நின்றான்; சிறிது சைதந்யமுள்ள பக்ஷிகளோ பறந்து போவனவும் அங்யபரங்களுமாயிருந்தன; இனி அசேதனங்களைக் கொண்டு காரியம் பார்க்கையே உற்றதென்று நினைத்தாள் போலும்.

"அசேதநமுங்கூட வெழுந்திருந்து காரியஞ் செய்ய வேண்டும்படி காணும் இவளவஸ்தை" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

• எம்பெருமான் உபேக்ஷித்திருந்தால் இவள் வாளா கிடக்கலாகாதோ என்று நாட்டார் சொல்லுவர்கள்; அந்தோ! அப்படி என்னாலிருக்கப் போகிறதில்லையே! அவனுடைய திருமேனி நிறமும் திருக்கண்ணழகும் மற்றுமுள்ள ப்ரபாவமும் குணசேஷ்டிதங்களும் நினைக்க நினைக்க வாளா விருக்க வொண்ணுமோ? என்கிறாள்.

பூவைகள்போல் நிறத்தன்—"ஆண் பெண்ணும்படியான நிறம் படைத்தவன்" என்பர் கம்பினை. வால்மீகி பகவான் ஸ்ரீராமபிரானைப் பற்றிப் பேசுமிடத்தில் "ஸர்வேஷாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்னலாமாயிருக்க, அங்ஙனம் சொல்லாது "பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்றான். ஆண்களையுங்கூட ஆகர்ஷிக்கும் வடிவு படைத்தவன் என்றபடி. பாஞ்சாலியைக் கண்ட பெண்டிர்கள் * பும்பாவம் மநஸா யயு: * என்னும்படி ஆண்மையை விரும்பினது போல, என் திருமாலைக் காணுமவர்கள் ஆண்களாயிருந்தாலும் பெண்ணுடையுடுக்கும்படியாகு மென்கிறாளென்க.

புண்டரீகங்கள் போலுங்கண்ணன்— ஒரு பூவின்மேலே மற்றொரு பூ உண்டாகுமதிசயம் எங்குங்கண்டதில்லை; திருமேனியோ பூவைப்பூ; திருக்கண்களோ அந்தப் பூவில் தோன்றிய புண்டரீகங்கள் என்று வியந்து சொல்லுகிறபடி. "காயாம்பூவிலே தாமரை பூத்தாற்போலே யிராநின்றது" என்பது ஈடு.

யாவையும் யாவருமாய் நின்றமாயன்— எந்த வஸ்துவோடு அவன் கலக்கப் புகுந்தாலும் வேறுபாடு தோற்றுமே ஏகவஸ்து வென்னலாம்படி கலக்கவல்லவன் என்பது இங்கு விவக்ஷிதம். என்னாழிப்பிரான்— சக்கரம் வந்தவிடத்தே சங்கும் வருமாகையாலே, இங்கு ஆழியைச் சொன்னது சங்குக்கும் உபலக்ஷணமாகி, திவ்யாயுதச் சேர்த்தியழகைக் காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்டவனென்றவாறு.

எவ்வளவு பேசினாலும் அவதார சேஷ்டிதங்களையும் கூடவே பேசினாலல்லது தரிப்பில்லாமையாலே கேசி நிரஸந, மதுகைடப ஸம்ஹார வ்ருத்தாந்தங்களை மூன்றாமடியிற் பேசுகிறபடி. அப்படிப்பட்ட எம்பெருமானுக்கு என் வார்த்தைகளைத் தெரிவித்து என் துக்கத்தைத் தீர்க்கமாட்டீர்களா? என்றாளாயிற்று. ... .... 7

பாசறவெய்தியின்னே வினையேனெனையூழிநைவேன்? *
ஆசறுதூவிவெள்ளைக்குருகே! அருள்செய்தொருநாள் *
மாசறுநீலச்சுடர்முடி வானவர்கோனைக்கண்டு *
ஏசறும்நும்மையல்லால் மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. 8

| | |
|---|---|
| ஆசு அறு தூவி வெள்ளை குருகே | பழிப்பற்ற சிறகையுடைய பரிசுத்தமான குருகே! |
| வினையேன் | பாவியான நான் |
| பாசறவு எய்தி | நிறமழிந்து |
| இன்னே | இவ்வண்ணமாகவே. |
| எனை ஊழி நைவேன் | எத்தனை காலம் வருந்திக்கிடப்பேன்! |
| ஒரு நாள் அருள் செய்து | ஒருநாள் க்ருபை பண்ணி |

| | |
|---|---|
| மாசு அறு நீலம் சுடர் முடி | மாசற்ற நீலச்சுடர் பொருந்திய மயிர்முடியையுடையனை |
| வானவர் கோனை கண்டு | தேவாதிதேவனைக்கண்டு |
| ஏசு அறும் நும்மை அல்லால் | "பழிப்பற்ற உம்மையொழிய |
| பேர்த்து மற்று மறு நோக்கு இலள் | பின்னை வேறொரு கதியுடையளல்லள்" (என்று சொல்லு.) |

* * * [பாசறவெய்தி.] முன்னே நின்றதொரு குருகைத் தூதுவிடுகிறாள். உலகில் துக்கப்பட்டவர்கள் இஷ்ட ஜனங்களைக் கண்டவாறே துக்கம் மேலிடப்பெற்றுக் கதறி யழுமாபோலே, குருகேயென்று விளிப்பதற்கு முன்னமே தன் துக்கமேலீட்டை வெளியிடுகிறாள் முதலடியில். பாசறவு எய்தி— பாசு என்று பசுமையைச் சொல்லிற்றாய், அதன் அறவு - நிறவேறுபாடு என்க. பசலை நிறங்கொண்டு என்றபடி. அதைப் பாசுரமிட்டுச் சொல்லமாட்டாமல் இன்னே என்று படியெடுத்துக் காட்டுகிறாள். என்னுடைய வைவர்ணியமிருக்கும்படியை நீங்களே பார்த்துக்கொள்ளுங்கோ ளென்கிறாள். எந்த விஷயத்திலீடுபட்டு இந்த நிறவேறுபாடு உண்டாயிற்றோ அந்த விஷயம் பேச்சுக்கு நிலமானாலன்றோ இதுவும் பேச்சுக்கு நிலமாவது.

வினையேன்— உலகத்தில் ஒரு விஷயம் அருமைப்பட்டதென்று அறியப்பெற்றால் அதை விட்டுக் கைவாங்கி நிற்கிறோமன்றோ; அப்படியே இந்த எம்பெருமான் அருமைப் படுகிறானென்று அறிந்தவாறே நான் இவனை மறந்து பிழைக்கலாமே; அப்படி மறக்க மாட்டாமல் நிச்சலும் நினைந்து உருகியலற்றும்படியான பாபத்தைப் பண்ணின நான் என்றபடி. எனையூழிநைவேன்—ஸம்ச்லேஷம் அல்பகாலத்தளவாக இருப்பதுபோல விச்லேஷமும் அப்படியே யிருக்கலாகாதா? ஸம்ச்லேஷம் ஒரு கொடிப்பொழுதாயிருக்க வேணும், விச்லேஷம் பல பல ஊழிகளாயிருக்கவேணும் என்று இப்படியும் ஒரு ஸங்கல்பமா? எத்தனை யூழிகாலம் இப்படி நைவேன் என்கிறாள்.

ஆசறுதூவி வெள்ளைக்குருகே!— தூவியென்று இறகுக்குப் பெயர்; இறகுகள் நிஷ்கல்மஷமாயிருக்கையாவது - ஞானமும் அநுட்டானமுமாகிற இரண்டும் களங்கமற்றிருக்கை. ‘வெள்ளை’ என்று சுத்தியைச் சொல்லுகிறது. உள்ளும் புறமும் ஒருபடியாக நிர்மலமாயிருக்கப்பெற்ற சுத்தியைச் சொன்னவாறு. * மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம் * என்கிறபடியன்றியே * மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம் * என்கிறபடியே மனமொழி மெய்கள் ஒன்றியிருக்கப் பெற்றவர்கள் இங்கு விவக்ஷிதர்கள்.

“அருள் செய்து ஒருநாள்” என்கிற பாடமே நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் காலத்தில் வழங்கிவந்தது. இப்பாடத்தில் இப்பாட்டுக்கு வினைமுற்று [க்ரியா பதம்] இல்லையாகிறது. ‘நீபோய்ச் சொல்லவேணும்’ என்கிற ப்ரார்த்தனை இருக்க வேணுமே; அது இப்பாட்டில் இல்லை; ஆனாலும் வருவித்துக் கொள்ளலாமென்று நம்பிள்ளை திருவுள்ளம் பற்றுகிறார். பன்னீராயிர வுரைகாரரான வாதிகேஸரி “அருள் செய்யொருநாள்” என்று பாடங்காட்டுகிறார்; “அருள் செய்து என்று பாடமானபோது ‘என்று சொல்’ என்று வாக்யசேஷமாகக் கடவது” என்றும் எழுதியுள்ளார். ‘அருள் செய்து’ என்று வினையெச்சமான பாடமே ப்ரஸித்தம். ஈற்றடியின் முதலிலுள்ள ‘ஏசறு’ என்பதை வினைமுற்றாகக் கொள்ளுகிற வழியையும் நம்பிள்ளை காட்டியருளுகிறார். ஏசறு— துக்கப்படு என்றபடி. நான் படுகிற துக்கத்தை உன் வடிவிலே ஏறிட்டுக் கொண்டு காட்டு என்று தாற்பரியம்.

“மாசறுநீலச் சுடர்முடி” என்றவிடத்து நீலச்சுடர் என்ற விசேஷண ஸ்வாரஸ்யத்தினால் முடியென்பது மயிர் முடியையே காட்டுமென்று கொண்டு பிள்ளான் நம்பிள்ளை முதலானோர் அப்படியே வியாக்கியானம் செய்தருளுகிறார்கள். “நீலஜ்யோதிர்மய குந்தலபாராலங்க்ருதனாய்” என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் இப்பாசுரத்தை நோக்கி * ஸாம்ராஜ்யயோகாத் * என்றருளிச் செய்திருக்கையாலே முடியென்பதற்குத் திருவபிஷேகமென்று பொருள் கொண்டமை தெரிகின்றது. நீலமணிகளழுத்தின கிரீடமென்கிற பொருளும் பொருந்தும். 8

பேர்த்துமற்றோர் களைகண் விளையாட்டியேன் நானொன்றிலேன் *
நீர்த்திரைமேலுலவி இரைதேரும்புதாவினங்காள்! *
கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு *
வார்த்தைகள்கொண்டருளியுரையீர் வைகல்வந்திருந்தே. 9

| | | | |
|---|---|---|---|
| நீர் திரை மேல் உலாவி | நீரலைகளின்மேலே உலாவி | கார் திரள் மா முகில் போல் | கார்காலத்தில் திரண்ட மஹாமேகங்கள் போன்றவனான |
| இரை தேரும் | உணவுப்பொருள்களை ஆராய்கின்ற | கண்ணன் விண்ணவர் கோனை கண்டு | கண்ணபிரானான தேவாதி தேவனைக் கண்டு |
| புதா இனங்காள் | பெருநாரைக் கூட்டங்களே! | வார்த்தைகள் கொண்டு | அவன் கூறும் வார்த்தைகளைப் பெற்றுக்கொண்டு |
| விளையாட்டியேன் நான் | பாவியான நான் | அருளி வந்து இருந்து | என் பக்கலில் க்ருபைபண்ணி வந்திருந்து |
| பேர்த்து மற்று ஓர் களைகண் ஒன்று இலேன் | (உங்களையொழிய) வேறொரு தஞ்சமுடையேனல்லேன்! | | |
| | (எனக்காக நீங்கள் செய்ய வேண்டியதென்னவென்றால்) | வைகல் உரையீர் | (இதுவே போதுபோக்காம்படி) எப்போதும் சொல்லிக்கொண்டிருங்கள். |

* * * [பேர்த்துமற்றோர்.] புதா வென்பது நாரையிலேயே அவாந்தரஜாதிபேதம்: பெருநாரையென்பர். அப்பறவைகளைப் பிரார்த்திக்கிறாள். பயிர்கள் உலராநிற்க மேகங்கள் வீணாகக் கடலிலே வர்ஷிக்குமா போலே, தன்னுடைய கடாக்ஷமொழிய வேறொரு கதியின்றியே நான் தளர்ந்து உலர்ந்துகிடக்க, ஆனந்தமஹார்ணவத்திலே நித்ய நிமக்நராயிருக்கின்ற நித்ய ஸூரிகளுக்கே தன்னை யநுபவிக்கக் கொடுத்துக்கொண்டு அங்கேயேயிருப்பது தகுதியோவென்று ஸ்ரீ வைகுண்டநாதனிடத்தில் விண்ணப்பஞ் செய்து, பின்னை அவன் அருளிச் செய்யுமது கேட்டுவந்து அதை எனக்கு அநவரதம் சொல்லிக்கொண்டிருந்து என்னை ஆச்வஸிப்பிக்க வேணுமென்கிறாள்.

"கார்த்திரள் மாமுகில்போல் விண்ணவர்கோனை" என்கிற சொற் சேர்த்தியழகை நோக்கி நம்பிள்ளையருளிச்செய்கிறார்—'விடாய்த்தாரிருக்க மீனுக்குத் தண்ணீர் வார்த்திருக்கிறவனை." என்று. வர்ஷிக்க வேண்டிய இடத்தை உபேக்ஷித்து வர்ஷிக்கவேண்டாத விடங்களிலே வர்ஷிப்பது மேகத்தின் இயல்வாகக் காணுமதொன்றாகையாலே ப்ரக்ருதத்தில் இது பொருத்தமான கருத்தாகும்.

மேகம் வர்ஷிக்க மறுத்தாலும் வாபீகூப தடாகங்களில் நின்று நீரைப்பாய்ச்சிப் பயிர்களுக்குப் பாங்கு செய்வதுண்டே, அப்படி நீதானும் முகாந்தரத்தாலே உய்யலாகாதோ வென்ன, பேர்த்து மற்றோர் களைகண் விளையாட்டியேன் நானொன்றிலேன் என்கிறாள். "விழிக்குங் கண்ணிலேன் நின்கண்மற்றல்லால் வேறொருவரோடென் மனம் பற்றாது" என்கிறாளாயிற்று.

நீர்த்திரைமேலுலவி யிரைதேரும்— எங்களைப் பரமபதத்திற்குப் போகச்சொல்லுகிறாயே, ஆவரண ஜலம் விரஜை முதலானவற்றைக்கடந்து செல்லவேண்டுமே; இது ஸாத்யமோ! என்று நீங்கள் இறாய்க்கவேண்டா: நிலத்திலே உலாவுமாபோலே நீரிலே உலாவுமவர்களன்றோ நீங்கள் என்றபடி. இரைதேரும் புதாவினங்காள்!—நான் உபவாஸத்தாலே மெலிந்துகிடக்க, நீங்கள் இரைதேடுவது தகுதியோ? என்னையுண்பித்தன்றோ நீங்களுண்ணவேணும் என்பது கருத்து.

இப்படிச் சொன்னவாறே அவை 'நாங்கள் செய்யவேண்டுவதை நியமிக்கலாகாதோ' வென்ன, பின்னடிகளில் நியமிக்கிறாள். வார்த்தைகள் கொண்டருளி என்று பொதுப்படச் சொல்லியிருக்கையாலே, அநுகூலமான வார்த்தையோ ப்ரதிகூலமான வார்த்தையோ எதுவாகிலும் அமையும்; அவ்விடத்திலிருந்து கிடைத்த வார்த்தையாக இருக்கவேண்டுமத்தனையே என்பது காட்டிற்றாகும். வருகிறேன் என்றோ, வரமாட்

டேன் என்றோ 'இனி அவனுக்கும் நமக்கும் பணியில்லை' என்றோ அவன் சொல்லும் வார்த்தை எதுவாகிலுமாம்; அந்த வார்த்தையை நீங்கள் பரமகிருபையோடு கேட்டுக்கொண்டு வந்து எப்போதும் என்னருகிலேயேயிருந்து அதைப் பன்னிப் பன்னிச் சொல்லிக்கொண்டிருப்பதே எனக்கு அபேக்ஷிதம் என்றாளாயிற்று.

அங்கிருந்து வருகிற வார்த்தை அநுகூலமாயிருக்குமாகில் இன்பமேயாகும்; ப்ரதிகூலமாயிருக்குமாகில் அதைக் கேட்டுக்கொண்டிருக்கலாகுமோ? என்று சங்கிக்க வேண்டா; ததீயத்வாகாரத்தாலே எதுவும் உத்தேச்யமே. அன்றிக்கே, 'வார்த்தைகள்' என்பதற்கு அபயப்ரதான வார்த்தைகள் என்றே பொருள் கொள்ளவுமாம். 9

வந்திருந்தும்முடைய மணிச்சேவலும்நீருமெல்லாம் *
அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையுமன்னங்காள்! *
என்திருமார்வற்கென்னை இன்னவாறிவள்காண்மினென்று *
மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர் மறுமாற்றங்களே. 10

| | | | |
|---|---|---|---|
| வந்திருந்து | (எத்தனையோ என் கண்ணெதிரில்) வந்திருந்து | என்னை | என்னைப்பற்றி ப்ரஸ்தாவித்து |
| உம்முடைய மணிச் சேவலும் நீரும் எல்லாம் | உங்களுடைய அழகிய சேவல்களும் (அவர்களுக்கு இனிய) நீங்களும் ஆக எல்லாம் | இவள் இன்னவாறு காண்மின் என்று | "இப்பராங்குச நாயகி இவ்வண்ணமாகும் காணும்" என்று |
| அந்தரம் ஒன்றும் இன்றி | இடைவீடு ஒன்றுமில்லாமல் | மந்திரத்து | அவனும் அவளுமான தனியிடத்திலே |
| அலர்மேல் அசையும் | பூக்களின் மீது உல்லாசமாக உலாவுகிற | ஒன்று உணர்த்தி | ஒரு பேச்சு அறிவித்து |
| அன்னங்காள் | அன்னப்பறவைகளே! | மறுமாற்றங்கள் உரையீர் | அதற்கு அவன் சொல்லும் மறுமொழிகளை என்னிடத்தே வந்து சொல்லுங்கோள். |
| என் திருமார்வற்கு | லக்ஷ்மீபதியான எம்பெருமானுக்கு | | |

***[வந்திருந்தும்முடைய.] மஹாகோஷ்டியிலே எழுந்தருளியிருக்கும் ஸமயத்தில் திருவுள்ளம் அந்யபரமாயிருக்குமாதலால் அப்போது சொல்லாதே, திருவோலக்கத்தில் நின்றுமெழுந்து திவ்யாந்தஃபுரத்திலே யெழுந்தருளினால் அங்கே பிராட்டியுடைய திவ்யஸந்நிதானத்திலே திருவுள்ளத்திற்படும்படி என் திறம் விண்ணப்பஞ்செய்து அவனுரைக்கும் மறுமாற்றங்கொண்டு என்னருகே வந்திருந்து சொல்லவேணுமென்று அன்னங்களைக் குறித்து வேண்டுகிறாள்.

மூந்துறமுன்னம் வந்திருந்து என்பது ஆனந்தமாகச் சொல்லுகிற வார்த்தை. 'தூது போவார் எங்கே கிடப்பர்' என்று நான் தேடவேண்டாதே என் ஆர்த்தியைப் பரிஹரிக்க நீங்களே முற்கோலி வந்திருக்கிறீர்களே!; ராஜ்யதாரங்களையிழந்து ஸுக்ரீவ மஹாராஜர் விஷண்ணராயிருந்தவிடத்தே வந்து பெருமாள் முகங்காட்டினாப்போலேயிருந்தது உங்களுடைய மஹோபகாரம் என்று உகந்து சொல்லுகிறபடி.

"உம்முடைய மணிச்சேவல்" என்று சொன்னவிதில் தன்னுடைய மணிச்சேவலை வ்யாவர்த்திக்கின்றதென்று நம்பிள்ளை காட்டியருளுகிறார்; "தன்னுடைய மணிச்சேவல் கடக்கவிருந்து இவளை உடம்பு வெளுப்பித்துத் தான் குறியழியாதேயிறேயிருக்கிறது" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. சேவல் என்று பொதுவாக நாயகனைச் சொன்னபடி. எல்லாம்— மற்றும் குடும்பங்களுமெல்லாம் என்றபடி.

"என் திருமார்வற்கு என்னை" என்ற சொற்சேர்த்தியால் திவ்ய தம்பதிகளிருவருமான சேர்த்தியிலே தான் அடிமை செய்ய ஆசைப்பட்டிருக்கிறமை விளங்கும். இன்னவாறிவள் காண்மினென்று— நான் இருக்கும்படியை உங்களுடைய உடம்பிலே எறிட்

டுக் காட்டவேணுமென்கிறாள் போலும். மந்திரத்து என்றது— மந்த்ராலோசனை செய்யுமிடமான ஏகாந்த ஸ்தலத்திலே என்றபடி. பெரிய ஸதஸ்ஸில் சொல்லவேண்டா: விரோதிகள் பலருமிருக்கவுங்கூடும்; பிராட்டியின் சொல்லே ஜீவிக்குமிடமான அந்தரங்க ஸ்தலத்திலே உணர்த்துங்கோளென்கிறாள். அன்றியே, "மந்திரத்து" என்றது ப்ரணவமாகிற மந்திரத்திலே என்றபடியாய், ஒன்று என்று அதில் நடுப்பதமான உகாரத்தைச் சொன்னபடியாய், அதிற் சொல்லுகிற அநந்யார்ஹத்வத்தை விண்ணப்பஞ்செய்புங்கோள் என்பதாகவும் அருளிச்செய்வர்கள். மறுமாற்றம் என்னுமல் மறு மாற்றங்கள்' என்றதனால், திருமார்விலிருக்கும் திரு சொல்லுகிற மாற்றமும் திருமார்வன் சொல்லுகிற மாற்றமும் ஆக இருவருடைய மறுமொழிகளும் கேட்க ஆசைப்பட்டமை தோன்றும். ... ... .... .... 10

மாற்றங்களாய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல் *
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தோற்றங்களாயிரத்துள் இவையுமோருபத்தும்வல்லார் *
ஊற்றின்கண்நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே. 11

| | | | |
|---|---|---|---|
| நாற்றம் கொள் பூம் பொழில் சூழ் குருகூர் சடகோபன் | பரிமளப்ரசுரமான பூஞ்சோலைகள் சூழ்ந்த திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | தோற்றங்கள் ஆயிரத்துள் | ஆவிர்ப்பாவரூபமான இந்த ஆயிரத்திலுள் |
| | | | இவை ஒரு பத்தும் வல்லார்: |
| மாற்றங்கள் ஆய்ந்துகொண்டு | சொற்களை ஆராய்ந்தெடுத்து | ஊற்றின் கண் நுண் மணல் போல் | ஊற்றினிடத்தேயுள்ள நுண்ணிய மணல்போலே |
| மதுசூதபிரான் அடி மேல் சொன்ன | எம்பெருமான் திருவடி விஷயமாக அருளிச்செய்த | நீர் ஆய் உருகா நிற்பர் | நீர்ப்பண்டமாக உருகப்பெறுவர்கள். |

***[மாற்றங்களாய்ந்து கொண்டு.] இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைக்கும் பாசுரமிது. இதில் விலக்ஷணமானதொரு பலன் கூறப்படுகின்றது. "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே" என்பது இங்குக் காணும் பயனுரை. இதுவொரு பலனோவென்று சங்கிக்கவேண்டா; கல்நெஞ்சராயிராமே ஈரநெஞ்சினராயிருந்து உருகப்பெறுவதென்பது ஒரு விலக்ஷணமான பலனன்றோ: ஆகவே இதுவும் பலச்ருதியேயாகும்.

"மாற்றங்களாய்ந்துகொண்டு சொன்ன ஆயிரம்" என்றதை முக்யமாகக்கொண்டு ஆசார்ய ஹ்ருதயத்தில் ஒரு சூர்ணிகை அருளிச்செய்கிறார்—["ராமாயணம் நாராயண கதையென்று தொடங்கி" இத்யாதி.] இதன் கருத்தாவது—வால்மீகி முனிவர் ராமகதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி கங்கையின் உற்பத்தி, ஸுப்ரஹ்மண்யனுடைய உற்பத்தி, புஷ்பகவர்ணநம் முதலானகதைகளைப் பரக்கப் பேசுவதால் அஸத்கீர்த்தநம் பண்ணி வாக்கில் அசுத்தி படைத்தார். வேதவ்யாஸர் 'நாராயண கதை' என்பதாகத் தொடங்கி ஸம்பவபர்வத்திலே பீஷ்மர் முதலான பற்பலருடைய உற்பத்திப்ரகாரங்களை விரிவாகப் பேசுகையாலும், 'பூசல் பட்டோலை' [யுத்தப் புஸ்தகம்] என்னும்படி பாரதப்போர் வகைகளையே பரக்க நின்று வருணித்தபடியாலும் அஸத் கீர்த்தனத்திலே மிகவும் பரந்து அசுத்தமான வாக்கை பகவத்கதைமொழியாகிற கங்கையாலே சுத்தமாக்குகிறேனென்று சொல்லிச் சுத்தி பண்ணிக்கொண்டார். ஆகவிப்படி, தொடங்கின படிக்குச் சேராமே அஸத்கீர்த்தனத்தைப் பண்ணி வாக்கை அசுத்தமாக்கிப் பின்பு அதற்கு சுத்திபண்ண வேண்டாதபடி "திருமாலவன் கவியாது கற்றேன்" என்று திருமால் விஷயமான கவியென்று அடியில் வாயோலையிட்டபடியே "மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல்" என்று, இதர விஷய சம்பந்தமுள்ள ஒரு சொல்லும் ஊடு கலசாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்துச் சொல்லப்பட்டதான நம்மாழ்வாரருளிச் செயலானது வேதங்களில் புருஷஸூக்தம் போலவும், தர்ம

சாஸ்த்ரங்களில் மநுஸ்ம்ருதி போலவும், மஹாபாரதத்தில் கீதை போலவும், புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணம் போலவும் திவ்யப்ரபந்தங்களுக்குள்ளே ஸாரமாயிருக்குமென்கை.

தோற்றங்களாயிரம்— தோற்றமாவது ப்ராதுர்ப்பாவம்; பகவானுடைய ப்ராதுர்ப்பாவம் போலவே திருவாய்மொழியினுடைய ப்ராதுர்ப்பாவமுமென்பர். அவன் மத்ஸ்ய கூர்மாதி ரூபேண தசாவதாரம் பண்ணினான்; திருவாய்மொழியும் பத்துப்பத்தாக அவதாரம் பண்ணிற்று. இதைப்பற்றின விசேஷார்த்தங்களை ஆசார்ய ஹ்ருதயத்தில் "சாதுசனம் நண்ணு மயர்வற மாசறுக்கும்" இத்யாதி சூர்ணையிலே காண்க.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி-ஆறாம்பத்து-ஒன்பதாந் திருவாய்மொழி.

## நீராய்நிலனாய்.

உரையவதாரிகை :—கீழ்த் திருவாய்மொழியில் சில பறவைகளை நோக்கித் தூது செல்லும்படி வேண்டினார். * மரங்களுமிரங்கும் வகை மணிவண்ணவோவென்று கூவுமால் * என்றபடியே ஆழ்வாருடைய ஆர்த்தத்வனிக்கு அசேதனங்களான மரங்களும் இரங்குமென்றால் சிறிது சைதந்யமுடைய பக்ஷிகள் இரங்கச் சொல்லவேணுமோ? [இரங்குவதாவது நெஞ்சு அழிகை.] அவை அவ்விடத்திலேயே நெஞ்சழிந்து தூது செல்லமாட்டாமே கிடந்தன. "அந்தோ! ஆழ்வாரை இப்படியும் துடிக்கவிட்டானே எம்பெருமான்" என்று நைந்து கிடந்தன. * ஊறறின் கண் நுண் மணல் போலுருகா நிற்பர் நீராயே * என்று கீழ்த் திருவாய்மொழிக்குக் கூறின பலசுருதி முந்துற முன்னம் அந்தப் பறவைகளினிடத்தே பலித்ததாயிற்று.

இனி என் செய்வதென்று பார்த்தாராழ்வார்; நம கையில் ப்ரஹ்மாஸ்த்ரமிருக்கப் பிறரிடத்தே பல் காட்ட வேணுமோ நாம்! என்று நினைத்தார். அதாவது—அவனெழுந்தருளியிருக்கிற பரமபதத்தளவும் சென்று கேட்கும்படியாகக் கூப்பிடுவோம்; அவன் சேதனனன்றோ; அதிலும் பரம சேதனனன்றோ; நாம் பெருமிடறு செய்து கூப்பிடும் ஆர்த்தத்வனியைக் கேட்டுங் கூடவா வந்து உதவாமற் போவான் என்று நினைத்துத் தம்மிடற்றோசையையிட்டு அழைத்துக் கொள்ளப் பார்க்கிறார். கலங்காப் பெருநகரமான ஸ்ரீவைகுண்டத்திலும் அவன் தரித்திருக்க மாட்டாது கால்குலைந்து வரும்படி பெருமிடறு செய்து கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில்.

தூது போவார்க்குக் காலாலேயாதல் சிறகாலேயாதல் போகவேண்டுகையாலே தடையுண்டு; இவருடைய மிடற்றோசைக்கு ஒரு தடையுமில்லையே; * உள்ளெலாமுருகிக் குரல்தழுத் தொழிந்தேன் * என்னும்படியான அவஸ்தையிலும் ஒரு அபிநிவேச விசேஷத்தாலே உரக்கக் கூப்பிடுகிறார். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின் ;—"பிராட்டி சிறையிருந்தது பராநுக்ரஹத்தாலேயானாப்போலே இவருடைய வ்யஸநமும் பராநுக்ரஹத்துக்கு உடலாயிருக்கிறபடி. அவள் சிறையிருந்தபடியை ஸ்ரீவால்மீகி பகவான் எழுதிவைத்து இன்று நாடெல்லாம் வாழ்கிறாப்போலே, அன்று இவர்தாம் வ்யஸ

னப்பட்டாரேயாகிலும் இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள் லோகத்துக்குத் தண்ணீர்ப் பந்தலாயிற்றது. திருக்குழலோசையாலே திருவாய்ப் பாடியிற் பெண்களெல்லாம் பட்டதைத் தம்மிடற்றோசையாலே அவன் படும்படி பண்ணுகிறார்."

ஆறாயிரப்படியவதாரிகை :—" இப்படி தூதப்ரேஷணம் பண்ணியும் எம்பெருமான் வரக்காணாமையாலே அவனைத் தம்முடைய பெரிய ஆர்த்தியோடே கூடத் திருநாட்டிலே கேட்கும்படி கூப்பிட்டழைக்கிறார்."

*

நீராய்நிலனாய்த் தீயாய்க்காலாய்நெடுவானாய் *
சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய் /*
கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால்
வாராய் * ஒருநாள் மண்ணும்விண்ணும்மகிழவே. 1

| | | | |
|---|---|---|---|
| நீர் ஆய் நிலன் ஆய் தீ ஆய் கால் ஆய் நெடு வான் ஆய் | பஞ்ச பூதஸ்வரூபியும் | கூர் ஆர் ஆழி வெண் சங்கு ஏந்தி | கூர்மைபொருந்திய திருவாழியையும் வெள்ளிய திருச்சங்கையும் திருக்கையில் தரித்துக்கொண்டு |
| சீர் ஆர் சுடர்கள் இரண்டு ஆய் | சந்திர ஸூர்யர்களாகிற சிறந்த தேஜ: பதார்த்தஸ்வரூபியும் | மண்ணும் விண்ணும் மகிழ | உபய விபூதியும் களிக்கும்படி |
| சிவன் ஆய் | சிவனுக்கு அந்தர்யாமியும் | கொடியேன் பால் | பாவியேனான என்பக்கலிலே |
| அயன் ஆனாய் | பிரமனுக்கு அந்தர்யாமியுமாயிருக்கும் எம்பெருமானே ! | ஒரு நாள் வாராய் | ஒருநாளாகிலும் வந்தருளவேணும். |

*** [நீராய் நிலனாய்,] ப்ரஹ்லாதாழ்வானுக்கு எப்பொருளும் எம்பெருமானுருவமாகவே தோன்றியவாறு போல, சிறந்த மா ஞானிகட்கு எதைக்கண்டாலும் பகவானாகவே தோற்றக் குறையில்லை ; ஆழ்வார்க்கும் அப்படியே தோற்றக் குறையில்லை ; ஆகவே தூதுவிட்டழைக்க வேண்டிய ஆயாஸம் எதற்காக? என்று சிலர் நினைக்கக்கூடும். எம்பெருமானும் இப்படியே நினைத்திருந்தானாகக் கொண்டு ஆழ்வார் இப்பாட்டில் தம் ருசியை விளங்க வெளியிடுகிறார் ; பிரானே ! நிலம் நீர் தீ கால் முதலான எப்பொருளுமாய் நீ நிற்கும்படியை நான் அறியாமையில்லை ; " சங்கும் சக்கரமும் சிரித்த முகமும் தொங்கும் பதக்கங்களும் " என்றாற்போலே அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹ வேஷத்தைக் கண்டு களிக்க ஆவல்கொண்டிருக்கு மடியேனுக்கு ஜகத்ஸ்வரூபனாயிருக்குமிருப்பு என்ன பயனளிக்கும்? நீர் நிலம் முதலானவையெல்லாம் உன் வடிவேயென்று அநுஸந்தித்துக்கொள்வதில் யாதொரு தடையுமில்லை ; அப்படி அநுஸந்திப்பதனால் அவற்றில் உனது அஸாதாரணத் திருமேனியைக்காண முடியுமோ? முடியாது : ஆகவே அஸாதாரண லக்ஷணங்களோடே வந்து ஒருநாளாகிலும் காட்சி தந்தருளவேணும் ; இதற்காகவே காண் நான் கதறுவது - என்கிறார்.

* மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூறவவதரித்த மங்கையர்கோன் பெரிய திருமொழியில் (4-9-5.) * தீயெம்பெருமான் நீரெம்பெருமான் திசையுமிருநிலனுமாய் எம்பெருமானாகி நின்றால் அடியோங் காணுமால், தாயெம்பெருமான் தந்தை தந்தையாவீர், அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீர்? * என்றருளிச் செய்த பாசுரமும் இக்கருத்தினாலே அமைந்ததென்க.

நீராய் என்று தொடங்கி முதலடியினால் பஞ்சபூதங்களுக்கும் எம்பெருமான் அந்தர்யாமியா யிருக்கிறபடி சொல்லிற்று. சீரார் சுடர்களிரண்டாய் என்று சந்திரஸூர்யர்களுக்கு அந்தர்யாமியா யிருக்கிறபடி சொல்லிற்று. சிவன் அயன் என்று இரண்டு தெய்வங்களைச் சொன்னது மற்றுமுள்ள தெய்வங்களுக்கும் உபலக்ஷணமாகக்கடவது. ஸகல தேவதைகளுக்கும் அந்தர்யாமியா யிராநின்றாய் என்றபடி: இவையெல்லாம் எனக்குத் தெரியாமை

யில்லை ; இந்த அந்தராத்மதையிலே நான் த்ருப்தி பெறுவேனல்லேன், அஸாதாரண லக்ஷணத்தோடு காணக்கருதுகின்றேனென்கிறார் மேல். விச்வரூபங்கண்ட அர்ஜுநன் “இந்த ரூபத்தை எனக்குக் காட்டினது போதும் ; அஸாதாரணத் திருவுருவத்தை காட்டியருளவேணும்” என்று அபேக்ஷித்தமை இங்கு ஒப்பிடத்தக்கது. ... 1

மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி *
மண்ணும்விண்ணும்கொண்ட மாயவம்மானே ! *
நண்ணியுனைநான் கண்டுகந்துகூத்தாட *
நண்ணிஒருநாள் ஞாலத்தூடேநடவாயே. 2

| | | | |
|---|---|---|---|
| மண்ணும் விண்ணும் மகிழ | உபய விபூதியும் (அழகு கண்டு) உகக்கும்படி | உனை நான் நண்ணி | உன்னை நான் கிட்டி |
| குறள் ஆய் | வாமனமூர்த்தியாய் (மாவலியிடம் சென்று) | கண்டு உகந்து கூத்து ஆட | கண்ணாரக்கண்டு மகிழ்ந்து பரவசனாய் நர்த்தனம் பண்ணும்படியாக |
| வலம் காட்டி | தன்னுடையசக்தியைக்காட்டி | நண்ணி ஒரு நாள் | இங்கே வந்து கிட்டி ஒருநாளாகிலும் |
| மண்ணும் விண்ணும் கொண்ட | மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் அளந்து கொண்ட | ஞாலத்தூடே நடவாய் | இந்நிலத்திலே நடையழகு காட்டியருளாய். |
| மாயம் அம்மானே | அற்புதனான ஸ்வாமியே ! | | |

* * * [மண்ணும் விண்ணும்.] கீழ்ப்பாட்டில் “கொடியேன்பால் ஒருநாள் வாராய்” என்றழைத்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் ஆழ்வீர் ! நீர் அழைக்குமிடத்தே நாம் வந்துவிட முடியுமோ? நாமிருக்குமிடத்தே உம்மையழைத்துக் காட்டுவதாகவன்றோ நாம் கருதியிருப்பது : அது ஒரு காலவிசேஷத்திலே யாகும் ; இப்போது நம்மை நீர் நிர்ப்பந்தித்து ப்ரக்ருதி மண்டலத்திலே நம்மைக் காண நினைப்பது பயன்பெறாது காணும்” என்று திருவுள்ளமாக, அதற்கு ஆழ்வார் அருளிச் செய்கிறார். ‘பிரானே ! இப்படியும் திருவுள்ளம் பற்றலாகுமோ? ஆஸுரப்ரக்ருதியான மாவலிபோல்வார்க்கு, அவ்வடிவு தன்னையே இங்கே கொண்டுவந்து இதரஸஜாதீயமாக்கிக் காட்டிற்றில்லையோ? என்னளவில்தானோ வஞ்சனை செய்வது?’ என்கிறார்.

முதலடியினால் வாமனாவதாரத்தையும், இரண்டாமடியினால் த்ரிவிக்ரமாவதாரத்தையும் அநுபவித்துப் பேசுகிறார். * கௌபீநம் கடிஸூத்ரஸீம்நி கடயந் மௌஞ்ஜீம பிவ்யஞ்ஜயந் க்ருத்திம் க்ருஷ்ணம்ருகஸ்ய வக்ஷஸிவஹந் ஆஷாடமம்ஸேர்ப்பயந், ஸ்வாத்யாயஸ்வரஸம்பதா பரிஷதாம் ப்ரீதிம் ஸமுத்பாதயந் யாச்ஞாயை பலியஜ்ஞவாடநிகடம் ப்ராப்தோ வடு: பாது வ: * என்னும்படியான வழகுபொலிய “என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் மன்னா ! தருக” என்று சொல்லிக்கொண்டு வாமனமூர்த்தி மாவலி வேள்விக்கண் எழுந்தருளின காலத்து மாவலியின் மனைவி கண்டு வியந்து உவந்து “இவ்வழகிய பிள்ளை ஏது கேட்டாலும் கொடுங்கள்” என்று கணவனுக்குக் கூறினளாம் ; அதனைப் பெரியாழ்வார் “மன்னன்றன் தேவிமார் கண்டு மகிழ்வெய்த” என்கிற பாசுரத்தினாலருளிச் செய்தார். ஆஸுரப்ரக்ருதியான அவள் மகிழ்ந்தது மண்ணும் விண்ணும் மகிழ்ந்த தொக்குமென்று கருதி இவர் “மண்ணும் விண்ணும் மகிழ” என்கிறார். வாமன மூர்த்தியாயெழுந்தருளிக் காரியஞ் செய்யாதொழியில் மண்ணுளாரும் விண்ணுளாரும் அழிந்தனராக நேருமாதலால் அப்படி நேராமற் செய்தபடியாலே மகிழ என்றதாகவும்.

வலங்காட்டி—இங்கேஈடு ;—“ ஔதார்யமென்றொரு குணலேசம் கிடக்கையாலே ராவணாதிகளைப்போலே அம்பாலே அழிக்கப்போகாதே ; அழகாகிற பலத்தைக்காட்டி வாய்மாளப்பண்ணினபடி. சுக்ராதிகளுடைய நிரோதம் உண்டாயிருக்கச் செய்தேயிறே அழகுக்குத் தோற்றுக் கொடுத்துக் கொண்டு நின்றபடி.”

மண்ணும் விண்ணுங்கொண்ட மாயவம்மானே !—உலகங்களையளக்கிற காலத்தி லுண்டான மாயங்களை நினைக்கிறது. * மிக்க பெரும்புகழ் மாவலிவேள்வியில் தக்கதி தன்றென்று தாவம் விலக்கிய சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறியதும், * என்னிது மாயம் என்னப்பனறிந்திலன் முன்னைய வண்ணமே கொண்டளவாயென்ற மன்னு நமு சியை வானிற்சுழற்றியதும் முதலான மாயங்கள்.

கண்ணியுனை நான் கண்டு உகந்து கூத்தாட—அக்காலத்தில் மாவலி இழவோடே ஒழிந்து போனான் ; இந்திரன் முதலானார் நம்பேறு பெற்றோமென்று களித்துப்போனார் கள் ; அப்போதையவன் வடிவழகைக் கண்டு உகந்து கூத்தாடப் பெற்றார் ஒருவருமில் லாமையாலே அந்தக்குறைதீர, நண்ணியொருநாள் ஞாலத்தூடே நடவாய்—நானிருந்த விடத்தே நீ வந்து கிட்டி உன் நடையழகுகண்டு அதிலே யீடுபடவல்ல என்முன்னே ஒருநாள் நடந்தாலாகாதோ ? ... ... .... ... ... ௨

ஞாலத்தூடேநடந்து நின்றும் கிடந்திருந்தும் *
சாலப்பலநாள் உகந்தோறுயிர்கள் காப்பானே ! * .
கோலத்திருமாமகளோடு உன்னைக்கூடாதே *
சாலப்பலநாள் அடியேனின்னும் தளர்வேனோ ? ௩

| | | | |
|---|---|---|---|
| உகம் தோறு ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்து இருந்தும் | ஒவ்வொரு யுகத்திலும் பூமியிலே அவதரித்து நடப்பது நிற்பது கிடப்பது இருப்பதான செயல்களைச் செய்து | கோலம் திருமாமகளோடு | உன்னழகுக்கு ஏற்ற அழகுடையளான திருமாமகளுடனே (கூடியிருக்கிற) |
| சால பல நாள் | பல்வாயிரமாண்டளவும் | உன்னை கூடாதே | உன்னைக்கிட்டி யநுபவிக்கப் பெறாமல் |
| உயிர்கள் காப்பானே | பிராணிகளை ரக்ஷித்தருள்பவனே ! | சால பல நாள் | (மேலுள்ள)மிகப்பலகாலமெல்லாம் |
| | | இன்னும் அடியேன் தளர்வேனோ | உன்னுறவு பெற்று வைத்தும் அடியேன் இழந்து துடிப்பது தானோ? |

*** [ஞாலத்தூடே.] கீதையில் * பரித்ராணாய ஸாதூநாம்......ஸம்பவாமி யுகேயுகே * என்றதை நினைப்பூட்டி ' ஸமயவிசேஷங்களிலே எத்தனையோ விதமாக அவதாரங்கள் செய்தருளி ஸாதுபரித்ராணம் செய்யுமுனக்கு எனக்காக ஒரு திருவவதாரம் செய்கை தான் அரிதோவென்கிறார். ஞாலத்தூடே நடந்தும்—ஸ்ரீராமாவதாரத்தில் * ஸிம்ஹவிக்ராந்த காமிநம் * என்னும்படியாகக் காட்டிலே நடையழகு காட்டினாய் ; குருடர் முன்னே நடக்குமாபோலே யன்றோ ஆயிற்றது ; நடையழகு காண விரும்பியிருக்குமென் முன்னே ஒருகால் நடந்தாலாகாதோ ? என்பது உட்கருத்து.

இங்கே ஈட்டில் ஒரு ஐதிஹ்யம் காண்மின் :—" வடதேசத்தில் நின்றும் போரப் பாடவல்லராயிருப்பாரொருத்தர் பெருமாளைத் திருவடிதொழ வேணுமென்று வர, ஆழ் வார் திருவரங்கப் பெருமாளரையரோடு தீர்த்தத்தினன்று இராத் திருமாலையைப் பாடிச் சமைந்து பெருமாளை ஒரு மத்தகஜத்தைக் கைவசப்படுத்துமாபோலே ஏத்தி வசமாக்கிக் கணிசங்கொண்டு ' நாயன்தே ! தேவரீர் திருவடிகளுக்குப் போர நல்லானொருவன் தேவரைத் திருவடித்தொழ நெடுந்தூரமுண்டு வந்திருக்கிறது, இவனையழைத்துக் கொண்டு ஸம்பாவனை பண்ணியருளவேணும் ' என்ன, அவரைப் பெருமாள் அருளப் பாடிட்டுத் திருப்புன்னைக் கீழில் நின்றும் அவர் நின்றவிடத்தேறத் திருக்கைத்தலத்தே யெழுந்தருளி விண்ணப்பஞ் செய்வார்களை யருளப்பாடிட்டு ' வாரீகோள் ! நாம் இவன் வந்த தூரத்துக்கெல்லாம் போருமோ செய்ததாம் ' என்று திருவுள்ளமானார்."

நின்றும்—நின்றருளுமிடங்கள் பல இருந்தாலும் வாலிவதமான பிறகு * அவஷ் டப்ய ச திஷ்டந்தம் * என்னும்படியாக நின்ற நிலை மிகவும் ஆகர்ஷகமாயிருக்கும் ; தாரை யானவள் அப்போது நின்ற நிலையிலே மிகவும் நெஞ்சு பறிகொடுத்தாள் ; தன் பர்த்தா வைக்கொன்ற பெருமாளை வாயார வைய்யவேண்டியிருக்க, " இவர்பால் குற்றமுண்டோ ?

தம்மை அடிபணிந்தாருடைய விரோதியைப் போக்கக் கடமைப்பட்டவர்களன்றோ பெரியார்; என் பர்த்தாவும் அநுகூலித்திருந்தானாகில் ரக்ஷித்திருக்கமாட்டாரோ? தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே தலைகீழாக விழுந்து சாவாரைப்போலே தன் குற்றத்தாலே கெட்டானத்தனையன்றோ என்றான்; இங்ஙனே அவன் சொல்லிற்று நிலையாக நின்றவபூமியிலே விடுபட்டன்றோ.

கிடந்து—கிடந்த கிடைகள் பலவுமுண்டாகிலும் *பாஹும் புஜகபோகாபம் உபதாயாரிஸம்த்ரம, அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே: * என்னும் படியாகக் கடற்கரையிலே கிடந்த கிடையிலே மிகவும் ஈடுபடுவர்களாயிற்று ஒரு கடல் ஒரு கடலோடே ஸ்பர்த்தை பண்ணிக்கொண்டு கிடக்குமாபோலே கடல்வண்ணனை தான் கடலை நோக்கிக் கிடந்தகிடைக்கு வயிறு பிடிக்கவேண்டியன்றோ விருப்பது. ப்ரதிசயந பூமிகா பூஷித பயோதி புளிந!'' என்ற ரகுவீரகத்ய ஸ்ரீஸூக்தியும் இங்கேயிணைப்பது.

இருந்தும்—பர்ணசாலைகளிலே வீற்றிருந்த இருப்பு. ஆகவிப்படி நடத்தல் நிற்றல் கிடத்தல் இருத்தல்களாலே அநாதிகாலமாக உயிர்களைக் காத்தருள்பவனல்லையோ நீ; இப்படிப்பட்டவுன்னைக் கோலத்திருமாமகளோடு நான் கூடியநுபவிக்க வேணுமென்று ஆசைப்பட்டால் இது எனக்கு அருமைப்படவேணுமோ? இதுவரை நான் தட்டித் தளர்ந்தது போதாதோ? இன்னமும் எத்தனை நாளைக்குத் தளர்வேணும்படி திருவுள்ளமோ? சொல்லியருள வேணுமென்றாராயிற்று. ... ... 3

தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரருடல்வேறு *
பிளந்துவீயத் திருக்காலாண்ட பெருமானே! *
கிளர்ந்துபிரமன்சிவன் இந்திரன்விண்ணவர்சூழ *
விளங்கவொருநாள் காணவாராய்விண்மீதே. 4

| | | | |
|---|---|---|---|
| சகடம் அசுரர் உடல் | சகடாசுரனுடைய உடலானது | பிரமன் சிவன் இந்திரன் விண்ணவர் | பிரமன் முதலான தேவர்களெல்லாம் |
| தளர்ந்தும் முறிந்தும் | சின்ன பின்னமாகி | கிளர்ந்து சூழ | உத்ஸாஹத்தோடே வந்து சூழ்ந்து சேவிக்க |
| வேறு ஆ பிளந்து வீய | இருபிளவாகி உருமாய்ந் தொழியும்படியாக | விளங்க | அதனாலே ஒரு விளக்கம் உண்டாகும் படியாக |
| திரு கால் ஆண்ட பெருமானே | திருவடிகளைக் கொண்டு காரியம் கொண்ட ஸ்வாமியே! | ஒரு நாள் விண் மீது காண வாராய் | ஒருநாளாகிலும் ஆகாசத்தின்மேலே கண்ணுக்குத் தோற்ற எழுந்தருளாய். |

* * * [தளர்ந்தும் முறிந்தும்] * கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடுகைக்கு விரோதிகள் கனத்திருந்தாலும் சகடாஸுரனை நீயே அநாயாஸமாக நிரஸித்தாப்போலே அந்த விரோதிகளையும் நீயே நிச்சேஷமாக நிரஸித்தருளி எனக்குக் காட்சி தருவதற்கென்றே ஒருநாள் விண்மீதே யெழுந்தருளவேணும்; அப்போது பிரமன் சிவனிந்திரன் முதலான விண்ணவர்கள் உன்னைச் சூழ்ந்து வரவேணும் என்று அபேக்ஷிக்கிறார்.

இப்பாசுரத்தில் திருக்காலாண்ட பெருமானே! என்பது உயிராயிருக்கும்; எம்பெருமானுடைய திருவடிகள் நமக்கு மாத்திரம் ரக்ஷகமன்று; அவன்றனக்கு நேரும் ஆபத்தையும் அவன் திருவடியே போக்கித் தருமென்கிறது. சகடாஸுரன் கட்டுக் குலைந்து முறிந்து உடல் வேறாகப் பிளந்துவீயும்படி திருவடியாலே செய்தருளின பெருமானே! என்று இப்போது இந்த விருத்தாந்தத்தைச் சொன்னது—நீ மனம் வைத்தால் ஒரு கொடிப்பொழுதில் என்னுடைய ப்ராப்திவிரோதிகளைப் போக்கமுடியாதோ? என்கைக்காக. சகடவசுரன் என்ன வேண்டுமிடத்து, அசுரர் என்று பன்மையாகச் சொன்னது ஒருவனே பலராகத் தோற்றின பயங்கரத்வத்தாலே; பால்வழுவமைதி.

தம்மிடத்திற்கு எம்பெருமானெழுந்தருள வேண்டும்படியைப் பின்னடிகளாலே பேசுகிறார். பிரமன் முதலான ஸகல தேவர்களும் புடைசூழவும், * குழுமித்தேவர்

குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு * என்னும்படியான விளக்கம் காணவும் விண்மீதே ஒருநாள் வந்து தோற்றவேணு மென்றாராயிற்று. ஆனைக்கு உதவவந்து தோற்றினாப்போலே தோற்றவேணு மென்கை. 4

விண்மீதிருப்பாய்மலைமேல்நிற்பாய் கடற்சேர்ப்பாய் ! *
மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும்மறைந்துறைவாய் ! *
எண்மீதியன்றபுறவண்டத்தாய் எனதாவி ! *
உண்மீதாடி உருக்காட்டாதேயொளிப்பாயோ ? 5

| | | | |
|---|---|---|---|
| * விண் மீது இருப்பாய் | பரமபதத்தில் வீற்றிருப்பவனே! | எண் மீது இயன்ற புறம் அண்டத்தாய் | எண்ணிக்கைக்கு மேலே போகக்கடவதான [எண்ணிறந்த] பதிநாண்டங்களிலுமுள்ளவனே !, (நீ), |
| மலை மேல் நிற்பாய் | (அர்ச்சாரூபியாய்) திருமலையிலே நிற்குமவனே ! | எனது ஆவியுள் மீதாடி | என்னுடைய நெஞ்சுக்குள்ளே மிகவும் நடையாடிவிட்டு |
| கடல் சேர்ப்பாய் | திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளுமவனே ! | உரு காட்டாதே | வடிவைக் கண்ணுக்குக் காட்டாமல் |
| மண் மீது உழல்வாய் | (ராமக்ருஷ்ணாதி விபவரூபத்தாலே அவதரித்து) பூமியின்மேல் ஸஞ்சரிப்பவனே | ஒளிப்பாயோ | ஒளிக்கின்றாயே ! இது தகுதியோ ? |
| இவற்றுள் எங்கும் மறைந்து உறைவாய் | இந்த ஜகத்தில் ஸகலபதார்த்தங்களிலும் அந்தர்யாமியாய் மறைந்து வர்த்திப்பவனே ! | | |

* * * [விண்மீதிருப்பாய்,] பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரமென்கிற ஐந்து ப்ரகாரங்களைக்கொண்டு அடியார்களை உகப்பித்தருளாநின்ற நீ எனது நெஞ்சிலும் எழுந்தருளியிருந்து வைத்து என்கண்ணுக்குத் தோற்றாதேயிருந்தால் தளரமாட்டேனோ வென்கிறார்.

*வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ * என்கிறபடியே பரமபதத்திலே * ஒண்டொடியாள் திருமகளும் தானுமாய் நித்யமுக்தர் ஸேவிக்க ஓலக்கமிருக்கிறபடியை விண்மீதிருப்பாய் என்றார் ; பாற்கடல் யோகநித்திரை செய்து சேதநரக்ஷணோபாயங்களைச் சிந்திக்கும் வ்யூஹ நிலைமையைக் கடல்சேர்ப்பாய் என்றார். துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனார்த்தமாக ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதார ரூபேண வந்தவதரித்துக் கண் காண நின்று ஞாலத்தூடே நடந்த படியை மண்மீதுழல்வாய் என்றார். * யம் ஆத்மா ந வேத * என்கிறபடியே வ்யாப்யபதார்த்தங்களுக்குத் தெரியாதபடி அந்தர்யாமியாயிருக்கும்படியை இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் என்றார். விபவாவதாரங்களில் விரோதி நிரஸந ச்ரமமாறப் பரம போக்யங்களான ஆராமஞ் சூழ்ந்த கோயில் திருமலை முதலான திவ்யதேசங்களிலே ரஸோத்தரமாக வஸிக்கையான அர்ச்சாவதாரத்தை மலைமேல் நிற்பாய் என்றார். * பின்னானார்வணங்குஞ்சோதி திருமூழிக்களத்தானாய் * என்றவிடத்துத் திருமூழிக்களமொன்றைச் சொன்னது உபலக்ஷணமாய் ஸகலதிவ்ய தேசங்களையுங் காட்டுமாபோலே இங்கும் * மலைமேல் நிற்பாயென்று திருமலையொன்றைச் சொன்னது மற்றுமுள்ள ஸகல திவ்ய தேசங்களுக்கும் உபலக்ஷணமாகும்.

எண்மீதியன்ற புறவண்டத்தாய்—எண்மீதியலுகையாவது எண்ணுக்குமேலே வர்த்திக்கை ; எண்ணமுடியாமையைச் சொன்னபடி ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் * அண்டாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச, ஈத்ருசாநாம் ததா தத்ர கோடி கோடி சதாநி ச * என்றது காண்க.

எனதாவியுண்மீதாடி என்றதற்கு இரண்டுபடியாக நிர்வஹிப்பர்கள் ; 'உள்மீது' என்பதை ஒரு சொல்வடிவமாகக் கொண்டு என் ஹ்ருதயத்தினுள்ளே ஸஞ்சரித்து என்கை ; அன்றிக்கே, உள், மீது என்று இரண்டாக்கி என் ஆத்மாவுக்குள்ளும் புறம்பும் ஸஞ்சரித்து என்னவுமாம்.

உருக்காட்டாதே யொளிப்பாயோ? குறைனுபவத்தாலேயே தரிப்பார் சிலருண்டு; அவர்கள் கோஷ்டியிலே நான் சேர்ந்தவனல்லேன்; வடிவு காணப்பெற வேணுமென்கிற ஆசையுடையேனாதலால் என்னை வஞ்சிக்கலாமோ வென்கிறார். ... 5

பாயோரடிவைத்ததன்கீழ்ப் பரவைநிலமெல்லாம்
தாய் * ஓரடியால் எல்லாவுலகும்தடவந்த
மாயோன்! * உன்னைக்காண்பான் வருந்தியெனைநாளும் *
தீயோடுடன்சேர்மெழுகாய் உலகில்திரிவேனோ? 6

| | | | |
|---|---|---|---|
| ஓர் அடி | ஒரு திருவடியை | மாயோன் | ஆச்சர்யசேஷ்டிதனே! |
| பாய் வைத்து | பரப்பிவைத்து | உன்னை காண்பான் | உன்னைக் காணவேண்டி |
| பரவை நிலம் எல்லாம் | கடல் சூழ்ந்த ஸகல பூமியும் | வருந்தி | ப்ரயாஸப்பட்டு |
| அதன் கீழ் | அந்தத் திருவடியின் கீழே யாம்படி | தீயோடு உடன் சேர் மெழுகு ஆய் | நெருப்போடு சேர்ந்த மெழுகின் தன்மையை யுடையேனாய் |
| தாய் | தாவியளந்து, | உலகில் | இவ்வுலகத்தில் |
| ஓர் அடியால் | மற்றொரு திருவடியாலே | எனை நாளும் திரிவேனோ | எத்தனைநாளும் தட்டித்திரிவதேயோ என்கதி? |
| உலகு எல்லாம் | மேலுலக மெல்லாவற்றையும் | | |
| தடவந்த | ஆக்ரமித்த | | |

* * * [பாயோரடி வைத்த] ஆழ்வீர்! நீர் அபேக்ஷிக்கிறபடியே உமக்கு நாம் வடிவு காட்டக்கடவோம், அதில் ஒரு குறையில்லை: ஆனால் பேறு உம்மதான பின்பு நீரும் சிறிது முயற்சி செய்ய வேண்டாவோவென்று எம்பெருமான் திருவுள்ளமாக, அப்படியா? இப்படியொரு வரம்பு கட்டிக்கொண்டது எத்தனை நாளாகவோ? த்ரிவிக்ரமாவதாரத்திற்குப்பின்போ? அல்லது அதற்கு முன்பும் இந்த வரம்புண்டோ வென்று கேட்கிறபடியாய் இப்பாசுரம் செல்லுகிறது. அன்றியே, வடிவு காண்கைக்குத் தாம் அயோக்யரென்று உபேக்ஷித்தானாக நினைத்து, யோக்யதாயோக்யதை பாராமல் எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்தவுனக்கு என்னளவில் தானோ யோக்யதை பார்ப்பது என்கிறாராகவுமாம். பாய் என்றது பரவியென்றபடி. பரவுதலாவது பரப்புதல். ஓரடி பாய் வைத்து—ஓரடியைப் பரப்பி வைத்து என்கை. நீ சேதநர் தலையிலே திருவடியை வைப்பதற்காக ஸாதநாநுஷ்டானம் பண்ணினார் ஆரேனுமுண்டோ? வஸிஷ்ட சண்டாள விபாகம் பாராதே வெறும் உன் க்ருபையாலே செய்தருளினையத்தனையன்றோ; அது எனக்காகாதோ வென்கை. அதன்கீழ்ப் பரவைநிலமெல்லாம் தாய்—அத்திருவடியின் கீழே கடல் சூழ்ந்த பூமிப் பரப்படங்கலும் தாவியளந்து. ஓரடியால் எல்லாவுலகுந்தடவந்த மாயோன்—மற்றைத் திருவடியாலே ப்ரஹ்மலோகத்தளவுஞ் சென்று ஸ்பர்சித்த மாயவனே!. மூன்னடிகளின் கருத்தை ஆறாயிரப்படியில் பிள்ளான் அருளிச்செய்கிறபடி பாரீர்:—"என்னை உன் திருவடிகளிலே சேர்க்கவேணுமென்று லோக விக்ரமணவ்யாஜத்தாலே, விலையில்லாததொரு ரத்னம் கெடுத்துத் தேடுவாரைப் போலே பெரிய வருத்தத்தோடே உன் திருவடியாலே என்னைத் தேடிக்கொண்டு திரிந்தவுன்னை".

என்னை நீ தேடித்திரிந்த காலத்திலே உனக்கு நான் அகப்பட்டேனில்லை; உன்னை நான் தேடித்திரியுமிக்காலத்திலே எனக்கு நீ அகப்படுகிறாயல்லை என்கிறார் போலுமாழ்வார். இப்போதைய தம்முடைய படிக்குத் தீயோடுடன் சேர் மெழுகை த்ருஷ்டாந்தமாகப் பேசுகிறார். அக்நியிலே புக்குக் கரிந்து போகவும் பெறாதே தூரத்திலிருந்து அழியாதிருக்கவும் பெறாதே உருகுவது வலிப்பதாகிறபடி. ஜீவிக்கவும் பெறாதே முடியவும் பெறாதே இப்படி யெத்தனை காலம் திரிவேனோ! என்றாராயிற்று. ... 6

உலகில்திரியும்கருமகதியாய் உலகமாய் *, உலகுக்கேயோருயிருமானாய்! புறவண்டத்து * அலகில்பொலிந்த திசைபத்தாயவருவேயோ! * அலகில்பொலிந்த அறிவிலேனுக்கருளாயே.

உலகில் திரியும் கருமம் கதி ஆய் } லோகத்தில் வ்யாபரிக்கிற ஸாதன கர்மஸ்வரூபியாயும்
உலகம் ஆய் } அந்தக் கருமங்களை யநுஷ்டிப்பவர்கள் ஸ்வரூபியாயும்
உலகுக்கே ஓர் உயிரும் ஆனாய் } ஸர்வலோகங்களுக்கும் ஏகாத்மாவாயும் நிற்பவனே!
புறம் அண்டத்து } அண்டங்களுக்கு வெளிப்பட்டிருப்பவர்களாய்
அலகு இல் பொலிந்த } எண்ணிக்கையில்லாதபடி விளங்குபவர்களாய்
திசை பத்து ஆய } பத்துத்திசைகளிலும் ஞானத்தாலே வியாப்தராயிருக்கின்ற
அருவேயோ } முக்தாத்மாக்களை வடிவாகவுடையவனே!
அலகு இல் பொலிந்த அறிவிலேனுக்கு } எண்ணிக்கையில்லாதபடி விளக்குகின்ற அஜ்ஞானத்தையுடையேனான என் விஷயத்தில்
அருளாய் கிருபை பண்ணவேணும்.

* * * [உலகில் திரியும்] பிரானே! எல்லாம் உன்னுடைய ஸங்கல்பாயத்தமாயிருக்க, எனக்கு அருள் செய்வதுதானோ மிகை என்கிறார். உலகில் திரியும் கருமகதியாய் என்றது உலகத்தில் காண்கிற ஸாதநரூப கருமங்களெல்லாம் நீயிட்ட வழக்கு என்றபடி. இதன் கருத்தாவது—எந்த ஸாதனம் அனுஷ்டித்தாலும் பலன் தருவது நீயேயன்றோ; அசேதநமான அவை பலனளிக்கமாட்டாவே. பலமளிப்பவன் நீயேயானபின்பு அருள்செய்யத் தட்டென்? என்பதாம். * फलमत उपपत्तेः * பலமத உபபத்தே: என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பாஷ்யத்திலே "स एव हि सर्वज्ञः सर्वशक्तिर्महोदारः....ऐहिकामुष्मिकभोगजातं स्वस्वरूपावाप्तिरूपमपवर्गं च दातुमीष्टे ; नहि अचेतनं कर्म क्षणध्वंसि कालान्तरभाविफलसाधनं भवितुमर्हति" "ஸ ஏவஹி ஸர்வஜ்ஞ: ஸர்வஶக்திர் மஹோதார:...ஐஹிகாமுஷ்மிகபோகஜாதம் ஸ்வஸ்வரூபாவாப்தி ரூபமபவர்க்கஞ்ச தாதுமீஷ்டே; நஹி அசேதநம் கர்ம க்ஷணத்வம்ஸி காலாந்தர பாவிபலஸாதநம் பவிதுமர்ஹதி" என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். இந்த ஸ்ரீ பாஷ்யஸூக்தியின் கருத்தாவது—ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் மஹோதாரனான அப்பெருமானே இஹலோக பரலோக போகங்களை யளித்தருள வல்லவன்; அசேதநமாய் ஒருகொடிப் பொழுதில் அழிந்துபோகக் கூடியதான கருமமானது என்றைக்கோ விளையக்கூடிய பலனுக்கு ஸாதனமாக மாட்டாதன்றோ என்கை.

உலகமாய் என்றது அக்கருமங்களை அனுஷ்டிப்பவர்களும் நீயிட்ட வழக்கென்றபடி. அதாவது—சிலர் சில கருமங்களை யனுஷ்டிக்கிறார்களென்று நாம் காணாநின்றோமும் எம்பெருமான் கொடுத்த கரணகளேபரங்களைக்கொண்டும் இசைவைக்கொண்டுமே அனுஷ்டிக்கின்றார்களாதலால் அனுஷ்டிப்பவர்களும் எம்பெருமானிட்ட வழக்கென்கிறது.

உலகுக்கே ஒருயிருமானாய்—ஒரு சரீரத்தை ஒரு ஆத்மா அதிஷ்டித்துக்கொண்டு அபிமானித்திருந்து நோக்குமா போலே, ஒன்றொழியாத ஸகல பதார்த்தங்களுக்கும் எம்பெருமானொருவனே ஆத்மாவாயிருந்து நோக்குபவனென்றபடி. உடலான வென்னை நோக்க வேண்டுவது உயிரானவுனக்குக் கடமையன்றோ வென்று காட்டினபடி.

புறவண்டத்து அலகிற்பொலிந்த திசைப்பத்தாய வருவேயோ—அண்டத்துக்கு வெளியேயிருப்பாராய், எண்ணிறந்தவர்களாய், ஞானத்தாலே எங்கும் வியாபித்திருப்பவர்களாய், ருபித்ரவ்யம்போலே கண்ணுக்கு விஷயமன்றிக்கே அருபியாயிருக்கிற ஆத்மாக்களுக்கு நிர்வாஹகனானவனே! என்றபடி. முக்தாத்மாக்களுக்கும் கடவனே! என்கை.

அலகிற்பொலிந்த அறிவிலேனுக்கு—அலகில்லாமையாவது எண்ணிக்கையில்லாமை; இதற்கு அறிவில்லாமையிலே அந்வயம். எண்ணிறந்த அறிவு கேட்டையுடையேன் என்றபடி. 'அறிவிலேன்' என்று மூலத்திலுள்ளதேயன்றி 'அறிவில்லாமை' என்கிற

சொல் இல்லையே; ஆகவே அந்வயிப்பது எப்படி? என்று சங்கிக்க நேரும். சொல்வடிவில் இல்லையானாலும், பொருள்வடிவில் உண்டு; அறிவிலேன் என்பதற்கு அறிவில்லாமையையுடையேன் என்று பொருளாகையாலே அதில் ஏகதேசமான அறிவில்லாமையிலே 'அலகில்' என்பது அந்வயிப்பதாகக் கொள்க. .... ... 7

அறிவிலேனுக்கருளாய் அறிவாருயிரானாய்! *
வெறிகொள்சோதிமூர்த்தி அடியேன்நெடுமாலே *
கிறிசெய்தென்னைப்புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ*
பிறிதொன்றறியாவடியேன்ஆவிதிகைக்கவே. 8

| | | | |
|---|---|---|---|
| அறிவார் உயிர் ஆனாய் | ஞானிகளை ஆத்மாவாகவுடையவனே! | பிறிது ஒன்று அறியா அடியேன் ஆவி திகைக்க | வேறொரு புகலறியாத அடியேனுடைய நெஞ்சு கலங்கும்படியாக. |
| வெறி கொள் சோதி மூர்த்தி | ஸௌகந்தமயமாய் தேஜோமயமாயிருக்கின்ற திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவனே! | கிறி செய்து | ஏதோ சூதுபண்ணி |
| அடியேன் நெடுமாலே | அடியேனிடத்தில் அளவு கடந்த வியாமோஹமுடையவனே! | என்னை புறத்து இட்டு | என்னைப் புறம்புண்டான பதார்த்தங்களிலே அகப்படுத்தி |
| அறிவு இலேனுக்கு அருளாய் | அறிவில்லாத என் விஷயத்திலே அருள் செய்யவேணும்; | இன்னம் கெடுப்பாயோ | இன்னமும் கெடுக்க நினைக்கிறாயோ? |

* * * [அறிவிலேனுக்கு.] கீழ்ப்பாட்டில் "அறிவிலேனுக்கருளாயே" என்றவாறே எம்பெருமான் அருள் செய்து கொண்டு வந்து நிற்கவேணுமே; அப்படி நிற்கக் கண்டிலர் ஆழ்வார்; பிரானே! உன் திருவடிகளல்லது மற்றொரு உபாயமும் உபேயமுமில்லையென்று கொண்டிருக்கிற இந்த அத்யவஸாயமுங்கூடக் கலங்கும்படி உன்னைக் காட்டாதே என்னை வஞ்சித்து சப்தாதிவிஷயங்களைக்காட்டி என்னை இன்னமுங் கெடுக்கவோ பார்த்தருளிற்று? என்கிறார்.

"தனமில்லாதவெனக்கு அருளாய்" என்று சொன்னால் தனத்தை யருளவேணுமென்று பொருள்படுவதுபோல 'அறிவிலேனுக்கு அருளாய்' என்றால் அறிவையருளவேணும் என்று பொருள்படும்; ஆழ்வார்க்கு இப்போது புதிதாக அறிவை அருளவேணுமோ? முதலடியிலேயே* மயர்வறமதிநலமருளினன்* என்னும்படி பரிபூர்ணமான அறிவை அருளியாயிற்றே யென்னில்; ஆம்; இப்போது புதிதாக அறிவையருளச் சொல்லுகிறாரல்லர்; கொடுத்தவறிவு குலையாதபடி நோக்கியருளவேணுமென்கிறார். உன் திருமேனியை எனக்குப் பரம கிருபையினாலே காட்டாதொழிந்தால் 'உன் திருவடிகளே உபாயோபேயம்' என்று நான் கொண்டிருக்கிற அறிவு குலைந்திடுமோ என்றஞ்சுகிறேன்; அது குலையாதபடி காத்தருளவேணுமென்கிறார் காண்மின்.

அறிவாருயிரானாய்!—இதற்கு இரண்டுபடியாக நிர்வஹிப்பர்; ஞானிகளுக்கு உயிரானவனே! என்னுதல், ஞானிகளை உயிராகவுடையவனே! என்னுதல். ஆசார்யஹ்ருதயத்தில் "என்னதுன்னதாவியிலே அறிவாராத்மாவென்று அவன் மதம் தோன்றும்" என்றருளிச்செய்தபடி ஞானிகளை உயிராகவுடையவனே யென்கிற நிர்வாஹமே முக்கியமாகும். அவன்தானே கீதையில் ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் என்றருளிச்செய்து வைக்கையாலே "ஜ்ஞாநியானவன் எனக்கு உயிராகவே என்னுடைய மதம்" என்ற அவனது திருவுள்ளத்திற்குச் சேர்ந்த பொருள் இதுவே.

வெறிகொள் சோதிமூர்த்தீ—நீ அருளா தொழிந்தாலும் விடவொண்ணாதபடியன்றோ உன்றன் வடிவழகிருப்பது; வெறி என்று பரிமளம். *ஸர்வகந்த:* என்று உபநிஷத்து ஓதினபடியே பரிமளமே வடிவெடுத்ததாய் சோதிமயமான திருமேனியை

யுடையவனே! என்றபடி. அடியேன் நெடுமாலே! இப்போது எனக்கு எட்டாதிருக்கிறவனே! (அல்லது) வடிவைக்காட்டி எனக்கு வியாமோஹத்தை விளைத்தவனே! என்றதாகவுமாம். பிராட்டியை அசோகவனத்திலே வைத்தாப்போலே, உன்னுடைய குணங்கள் நடையாடாதே சப்தாதி விஷயங்கள் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே பொகட்டு இன்னமும் கெடுக்கவேணுமென்று திருவுள்ளமோ? முன்பிழந்தது போராதோ? அநந்யகதியாய் அநந்யபரனாயிருக்கிற வென்னுடைய மநஸ்ஸு கலங்கும்படி இப்படி செய்தருளவேண்டா என்றாராயிற்று. ... ... .... 8

ஆவி திகைக்க ஐவர்குமைக்குஞ்சிற்றின்பம் *
பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ? *
தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே *
கூவிக்கொள்ளுங்காலம் இன்னங்குறுகாதோ? 9

| | | | |
|---|---|---|---|
| ஆவி திகைக்க | நெஞ்சு கலங்கும்படியாக | வையம் தாவி கொண்ட | பூமி முழுவதையும் அளந்து ஸ்வாதீனமாக்கிக் கொண்ட |
| ஐவர் குமைக்கும் | பஞ்சேந்திரியங்களும் பிடிக்கும்படியான | தட தாமரை கட்கே | பெரிய திருவடித் தாமரைகளிலேதான் அந்வயிக்கும்படி |
| சிற்றின்பம் பல | அற்பஸாரங்களான விஷயங்கள் பலவற்றை | கூவிக் கொள்ளும் காலம் | என்னை யழைத்துக் கொள்ளும் காலம் |
| பாவியேனை நீ காட்டி படுப்பாயோ | பாவியேன் கண்ணிலே நீ காண்பித்து முடிக்க நினைக்கிறாயோ? | இன்னம் குறுகாதோ | இன்னமும் ஸமீபித்ததாக ஆகக் கூடாதோ? |

* * * [ஆவி திகைக்க.] விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற நிலத்திலே வைத்து என்னை முடிக்கப் பார்த்தது போதும் பிரானே!; கடுக உன் திருவடிகளிலே யழைத்துக் கொள்ளலாகாதோ வென்கிறார். இப்பாட்டுக்கு ஈட்டின் அவதாரிகை காண்மின்;—"உம்மை இங்குக் கெடுத்ததென்? என்ன; கண்டகாட்சியிலே இழுத்துக் கொள்ளக் கடவதான விஷயங்கள் பரிமாறுகிற விடத்தே வைத்தாயாகில் இனிக்கெடுக்கையென்று ஒன்றுண்டோ வென்கிறார்; என்னையிங்கே வைத்தபோதே குழியைக்கல்லி மண்ணையிட்டு அமுக்கப் பார்த்தாயன்றோ வென்கிறார்."

நெஞ்சு கலங்கும்படியாகப் பஞ்சேந்திரியங்கள் குமைக்கும்படியான சிற்றின்பங்களாவன கண்காட்சிகளான நாடகங்கள், செவியுணவான வீண் பாட்டுக்கள், நாவுணவான தின்பண்டங்கள், மூக்குணவான சுகந்தங்கள், உடலுணவான அங்கநா பரிஷ்வங்காதிகள் ஆகிய இவற்றாலுண்டாகும் சுகங்கள். ஒவ்வொரு இந்திரியமும் 'என் விஷயத்தைக் காட்டு, என் விஷயத்தைக் காட்டு' என்று நலியுமாதலால் 'ஐவர் குமைக்கும்' என்றது. அஃறிணையான இந்திரியங்களை 'ஐந்து' என்ன வேண்டுமிடத்து 'ஐவர்' என்று உயர்திணையாகச் சொன்னது—சேதனர் நலியுமாபோலே நலியும் வன்மையைப்பற்றி யென்க. "பலநீ காட்டிப் படுப்பாயோ" என்னும்படியாக விஷயாந்தரங்களைக் கண்ட மாத்திரத்திலேயே முடியும்படியாகுமோ? இது அதிசயோக்தியோ? என்று நினைக்கவேண்டா; இவ்விஷயமாக ஸ்ரீ வசந பூஷணத்தில் அருளிச்செய்வது பாரீர்;—"அசுணமா முடியுமாபோலே, பகவதநுபவைக பரனாய் ம்ருதுப்ரக்ருதியா யிருக்குமவன் விஷய தர்சனத்தாலே முடியும்படி" என்று. இங்கே மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—"அசுணமா என்கிற பக்ஷி அதிமதுரமான கான ச்ரவணத்தாலே நெஞ்சு நீர்ப்பண்டமாய் இளகின தசையிலே அதிகடினமான பறையையடிக்கக் கேட்டுப் பட்டுக் கிடக்குமா போலே யாயிற்று பகவதநுபவ மொன்றிலுமே தத்பரனாய் தத்குண ரஸத்திலே நைந்து இதர விஷயங்களின் பேர் கேட்கிலும் மாளும்படி ம்ருது ப்ரக்ருதியாயிருக்குமவன் பகவதேக போகஸ்வரூப ஸ்வரூப நாசகங்களான விஷயங்களைக் கண்ட மாத்திரத்திலே ஏங்கி முடியும்படி." அவ்விடத்திற்கு இப்பாசுரமே மேற்கோளாகவும் காட்டப்பட்டுள்ளது.

அடியேனைத் திருவடி சேர்த்துக்கொள்வதாக தேவரீர் ஸங்கல்பித்திருக்குமதில் குறையில்லை ; ஏதோ வொருநாளில் திருவடி சேர்த்துக்கொள்வதாகத் திருவுள்ளம்பற்றி யிருக்குமே ; அந்நாள் இன்று நாளையாம்படி ஸமீபிக்கலாகாதோ வென்கிறார் பின்னடிகளில். இங்கே ஒரு ஐதிஹ்யம் காட்டிலுள்ளது :—“ பிள்ளானுடைய அந்திம தசையிலே நஞ்சீயர் நோவறியப் புக்கிருக்க, ‘கூவிக்கொள்ளுங் காலமின்னங் குறுகாதோ?’ என்று பலகால் சொல்ல, இத்தைக்கேட்டு ஜீயர் அழ, ‘ஜீயரே ! நீர் இடந்தழுகிறதென் ? அங்குப் போய்ப் பெறப் புகுகிற பேறு இதிலும் தண்ணிதென்று தோற்றியிருந்ததோ ?’ என்று பணித்தான்.”

தாமரைபோன்ற திருவடிகட்கே என்ன வேண்டுமிடத்து ‘ தாமரைகட்கே ’ என்றது உவமையாகு பெயர். ... ... 9

குறுகாநீளா இறுதிகூடாவெனையூழி *
சிறுகா பெருகாஅளவிலின்பம்சேர்ந்தாலும் *
மறுகாலின்றிமாயோன் ! உனக்கேயாளாகும் *
சிறுகாலத்தையுறுமோ ? அந்தோதெரியிலே. * 10

| | |
|---|---|
| மாயோன் | ஆச்சரியமானவனே ! |
| குறுகா நீளா | ஸ்வரூபத்தில் ஸங்கோச விகாஸ மில்லாமலும் |
| இறுதி கூடா | முடிவுமில்லாமலும் |
| எனை ஊழி | எக்காலத்திலும் |
| சிறுகா பெருகா | க்ஷய வ்ருத்திகளில்லாமலும் |
| அளவு இல் | பரிச்சேதமற்றதாயு மிருக்கிற |
| இன்பம் | கைவல்யாநுபவஸுகமானது |
| சேர்ந்தாலும் | வந்து கூடினாலும் |

| | |
|---|---|
| தெரியில் | நிரூபித்துப்பார்க்கில் |
| மறுகால் இன்றி | பின்னையொருகாலும் இல்லாதபடியாக [மிகவும் அற்ப காலமாக] |
| உனக்கே ஆள் ஆகும் சிறு காலத்தை | உனக்கே அடிமைப்படும்படியான ஸ்வல்பகாலத்தை |
| உறுமோ | ஒத்திருக்குமோ ? |
| அந்தோ | ஐயோ. ! |

* * * [குறுகாநீளா.] கீழ்ப்பாட்டில் சிற்றின்பங்களை வெறுத்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் ‘ ஆழ்வீர்! விஷயஸுகம் அல்பமாய் அஸ்திரமாயிருக்குமென்று வெறுத்தீராகில் அநல்பமாய் ஸ்திரமாயிருக்குமதான கைவல்ய மோக்ஷ ஸுகத்தைக் கொள்ளுகிறீரா ?’ என்றுகேட்க, அதற்கு உத்தரமருளிச் செய்கிறார் இப் பாட்டில். கைவல்ய மோக்ஷம் ஆத்மாவுள்ளதனையும் அநுபவிக்குமதாயிருந்தாலும் உன்னுடைய கைங்கர்ய ஸுகம் அடுத்தக்ஷணத்தி லின்றிக்கே ஒருக்ஷணமே யாவதானாலும் இத்தைக் கைவிட்டு அத்தைப் பற்றுகை உறும் என்றிருப்பாரோ அறிவுடையார் ? சிற்றின்பம் அல்பமும் அஸ்திரமுமாயிருக்குமென்று அதினுடைய தோஷத்தை அடியேன் எடுத்துரைத்தது அதன் ஸ்வரூபத்தைச் சொன்னபடியே யொழிய வேண்டாமைக்கு ஹேதுவாகச் சொன்னபடியன்று. உன் கைங்கர்யமாயிருக்குமது எதுவோ அதுவே எனக்கு வேண்டுவது : அங்ஙனல்லாதது எனக்கு வேண்டாதது. உன் கைங்கர்யமானது அல்பமும் அஸ்திரமுமாக இருந்தாலுங்கூட உன் கைங்கரியமென்கிற காரணத்தினால் இதுவே எனக்கு வேண்டுவது என்கிறார்.

குறுகாநீளா-குறுகுகையாவது இரண்டொருநாள் அநுபவிக்கும்படியா யிருத்தல் நீளுகையாவது பத்தெட்டு நாள் பத்தெட்டு மாதம் பத்தெட்டாண்டு அநுபவிக்கும்படியாயிருத்தல். இவையிரண்டுமில்லை கைவல்ய மோக்ஷத்திற்கு ; ஏனெனில், ஆத்மாவுள்ளளவும் அது உள்ளதாகையாலே. இறுதிகூடா என்பதனால் அது வ்யக்தமாக்கப்பட்டது.

எனையூழி சிறுகா பெருகா—எத்தனை கல்பமானாலும் சிறுப்பது பெருப்பதென்கிற ஸங்கோச விகாஸங்களில்லாமை ; என்றும் ஏகரூபமாயிருக்குமது என்றபடி. இப்படிப்பட்ட ‘ அளவிலின்பம் சேர்ந்தாலும் ’ — ஆத்மாநுபவஸுகத்தையடையப்பெற்றாலும்.

பகவத் கைங்கர்யரஸம் இதற்கு எதிரிடையாக இருக்குமதன்று. ஆனாலும் எதிரிடையா யிருந்தாலுங்கூட அதுவே யெனக்கு அபேக்ஷிதமென்கிறார் பின்னடிகளில்; அதாவது-கைவல்ய ஸுகம்போலே நிரந்தரமாக அநுபவிப்பதல்லாமல் ஒரு க்ஷண மாத்ரமே அநுபவிக்குமதாயிருந்தாலும் என்று அங்வாருஹ்யவாதம் செய்தபடி.

அந்தோ என்றது ஐயோவென்றபடி. என்ன பரிதாபமென்னில், நம்பிள்ளை யருளிச் செய்கிறார் — "பர்வதபரமாணுக்களுக்கிருந்த வைஷம்யம் சொல்லும்படி யூாவதே!" என்று. பர்வதத்திற்கும் பரமாணுவுக்குமுள்ள வாசியை ஒவ்வொருவரும் தாமே தெரிந்துகொள்ள வேண்டியிருக்க, அதையொருவர் எடுத்துரைக்க நேர்ந்தால் அது எப்படி பரிதாபாஸ்பதமோ அப்படியே கைங்கர்யரஸத்திற்கும் கைவல்ய ரஸத்திற்குமுள்ள வாசியை நானெடுத்துரைப்பதும் பரிதாபாஸ்பதமென்றவாறு. 10

தெரிதல் நினைதல் எண்ணலாகாத்திருமாலுக்கு *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும்
உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே. 11.

| | | | |
|---|---|---|---|
| தெரிதல் நினைதல் எண்ணல் ஆகா | சாஸ்த்ரஜ்ஞானத்தாலும் மனனத்தாலும் த்யானத்தாலும் பரிச்சேதிக்க முடியாத | தெரிய சொன்ன | விசதமாக அருளிச்செய்த |
| திருமாலுக்கு உரிய | ஸ்ரீமந்நாராயணனுக்கு அநந்யார்ஹ சேஷபூதர்களான | ஓர் ஆயிரத்துள் | விலக்ஷணமான ஆயிரத்திலுள்ளே |
| தொண்டர் தொண்டர் | பக்த பக்தர்களுக்கு | இ பத்தும் | இந்தத் திருவாய்மொழி (தன்னைக் கற்குமவர்களை) |
| தொண்டன் சடகோபன் | பக்தரான நம்மாழ்வார் | உலகம் உண்டாற்கு | உலகமுண்டவனான எம்பெருமான் விஷயத்திலே |
| | | உரிய தொண்டர் ஆக்கும் | அநந்யார்ஹ சேஷபூதராக்கும். |

* * *[தெரிதல்நினைதல்.] இத் திருவாய்மொழியானது தன்னோடு அங்வயமுடையாரை ஸர்வரக்ஷகனான எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷ பூதராக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். *நாயமாத்மா ச்ருதியின் தாற்பரியத்தை முதலடியாலே அருளிச் செய்கிறார். * नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन यमेवैष वृणुते तेन लभ्यः तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम्—நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயா ந பஹுநா ச்ருதேந யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்* என்பது கடோபநிஷத்து. எம்பெருமானைத் தெரிந்துகொள்வதோ அடைவதோ அவனுடைய திருவருளாலே நேரவேண்டுமேயன்றி இவனுடைய ப்ரவசந மேதா ச்ரவணங்களாலே நேரக்கூடியதன்று என்றபடி. அப்படிப்பட்ட எம்பெருமானுக்கு சரமாவதிதாஸபூதரான ஆழ்வாரருளிச் செய்த இப்பத்து தன்னை யதிகரித்தாரை ஸர்வேச்வரனுக்கு உரிய தொண்டராக்குமென்றாராயிற்று. * * *

உரியதொண்டர் என்றதற்கு நம்பிள்ளை அர்த்தமருளிச் செய்கிறார்—"ஸம்ஸாரம் நன்றுமாய் பகவத் விஷயம் தீதானாலும் அத்தை விடமாட்டாதவர்கள்" என்று. அதாவது குணங் கண்டு தொண்டு பூண்டிருக்கையன்றிக்கே ஸ்வரூப ப்ரயுக்தமாகவே தொண்டு பூண்டிருக்குமவர்கள் என்கை. * * * 11

நம்பிள்ளை திருவடிகளே சரணம். வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்து ஒன்பதாந்திருவாய்மொழி உரை முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி-ஆறும்பத்து-பத்தாந் திருவாய்மொழி.

## உலகமுண்ட பெருவாயா.

உரையவதாரிகை:—கீழ்த் திருவாய்மொழியில் அபரிமிதமான ஆர்த்தியோடே பரமபதத்தளவும் கேட்கும்படி கூப்பிட்டார். அங்ஙனே கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங்காட்டாமையாலே மிகவும் தளர்ந்து நோவுபட்ட ஆழ்வார், அப்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து நிலவுலகத்தே வந்து ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் பண்ணி அக்காலத்திலே பிறந்தார்க்கும் இழக்கவேண்டாமல் திருவேங்கடமலையிலே நித்யஸூரிகளோடு நித்யஸம்ஸாரிகளோடு திர்யக்குக்களோடு வாசியற எல்லாரும் வந்து ஒருமிடறாக ஆச்ரயிக்கலாம்படி நித்யஸந்நிதி பண்ணியிருக்கிறபடியை யநுஸந்தித்து அத்திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பஞ்செய்து சரணம்புகுகிறார்-இத்திருவாய்மொழியில்.

சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்குப் பல நியமங்கள் ஏற்பட்டிருக்கின்றன. புண்ணிய க்ஷேத்ரத்தில் செய்யவேணும், வேறிடத்தில் செய்யலாகாது என்கிற தேசநியமமும், வஸந்தாதிகாலங்களிலே செய்யவேணும், மற்றகாலங்களிலாகாது என்கிற காலநியமமும், ஸ்நாநம் பாதப்ரக்ஷாளநம் முதலியவற்றைச் செய்தபின் செய்யவேணும், வேறுபடியாகச் செய்யக்கூடாதென்கிற ப்ரகார நியமமும், த்ரைவர்ணிகராயிருக்கவேணும், அத்ரைவர்ணிகர் கூடாதென்கிற அதிகாரி நியமமும், இன்ன பலனைத்தான் இது தரும், மற்றபலனைத்தாராதென்கிற பல நியமமுமாகிற இந்த நியமங்களெல்லாம் ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்கு உள்ளனவேயன்றி சரணாகதிக்கு இந்த நியமங்களொன்றுமில்லை; இன்ன விஷயத்திலே செய்யவேணுமென்கிற விஷய நியமமொன்று மாத்திரமே இதற்குள்ளது. அதாவது-பரத்வம் முதலிய ஐந்திலுள்ளும் ஸௌலப்யாதி குணங்கள் பூர்ணமாயிருக்கப்பெற்ற இடமேவிஷயமாகை. ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான எம்பெருமான் தானே சொல்லப் புகுந்தாலும் சொல்லித் தலைக்கட்ட முடியாதபடி குணங்கள் பூர்த்தியாயிருப்பது அர்ச்சாவதாரத்திலேயாகையாலே ஆழ்வார் சரணாகதியை இப்போது அர்ச்சாவதாரத்தில் தலையான திருமலையிலே செய்தருளுகிறார்.

ஒன்பது பாட்டாலும சரண்யன்படி சொல்லி, பத்தாம் பாட்டிலே சரணம் புகுகிறார்

உலகமுண்டபெருவாயா! உலப்பில்கீர்த்தியம்மானே!
நிலவும்சுடர் சூழொளிமூர்த்தி நெடியாயடியேனாருயிரே! *
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே! *
குலதொல்லடியேனுனபாதம் கூடுமாறு கூறாயே. 1

| | | | |
|---|---|---|---|
| உலகம் உண்ட பெருவாயா | (பிரளய காலத்தில்) உலகத்தின் செல்வம் அமுது செய்த பெருவாயையுடையவனே! | உலகுக்கு திலதம் ஆய் நின்ற திருவேங்கடத்து | உலகுக்கெல்லாம் திலகம் போன்றதான திருமலையிலே விளங்குகின்ற |
| உலப்பு இல் சீர்த்தி அம்மானே | முடிவில்லாத புகழையுடைய பெருமானே! | எம்பெருமானே | அஸ்மத்ஸ்வாமியே! |
| நிலவும் சுடர் சூழ் ஒளி மூர்த்தி | அப்ராக்ருத தேஜோமயமான திவ்ய !க்ரஹத்தையுடையவனே | குலம் தொல் அடியேன் | குல பரம்பரையாக உனக்கு அடிமைப் பட்டிருப்பவனான அடியேன் |
| நெடியாய் | மிகப் பெரியோனே! | உன பாதம் | உனது திருவடிகளை |
| அடியேன் ஆர் உயிரே | அடியேனுக்குப் பரிபூர்ண ப்ராணபூதனே! | கூடும் ஆறு | வந்து சேரும்படியை |
| | | கூறாய் | அருளிச் செய்யவேணும். |

* * * [உலகமுண்டபெருவாயா] ஸகல ஜகத்தையும் ரக்ஷிக்குமியல்வை யுடையையாய்க்கொண்டு திருமலையிலே நித்யஸந்நிதி பண்ணியிருக்கிறவுன்னை நான் கிட்டியநுபவிக்கும் விரகு அருளிச்செய்ய வேணுமென்கிறார். உன்னுடைய திருவடியை நான் கிட்டப்பெறாமல் கிலேசிப்பது பிரளயாபத்தோடொக்கும்; இந்த ஆபத்தை நீ போக்கினாலல்லது பிரளயாபத்தைப் போக்கினாயென்கிற புகழ் உனக்கு நிலைநிற்கமாட்டாதென்கிற கருத்துப்பட 'உலகமுண்ட பெருவாயா' என்கிறார். ஆபத்து நேர்ந்தகாலத்தில் தனராதபடி ரக்ஷிக்கைக்காகவன்றோ நீ உலக முண்டது; அந்த ஆபத்ரக்ஷகத்வம் மெய்யானால் என்னையும் ஆபத்தில் நின்று மெடுத்தருளித் திருவடிகளில் சேர்த்துக் கொள்ள வேண்டாவோவென்றவாறு.

இங்கே பரமபோக்யமான ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்; — "ஒரு விபூதிக்காக ஆபத்து வரிலோ நோக்கலாவது; விபூதிக்காகவுண்டான ஆபத்து எனக்கொருவனுக்கு மூண்டானால் நோக்கலாகாதோ? ப்ரளயார்ணவத்திலே யழுந்துவாரையோ நோக்கலாவது, ஸம்ஸாரார்ணவத்தில் அழுந்துவாரை நோக்கலாகாதோ? அபேக்ஷியாதாரையோ நோக்கலாவது, அபேக்ஷித்தார்க்கு உதவலாகாதோ? சரீரத்துக்கு வரும் ஆபத்தோ நோக்கலாவது, ஆத்மாவுக்கு வருமாபத்து நோக்கலாகாதோ? ஜலப்ரளயத்தில் அகப்படிலோ நோக்கலாவது, விரஹப்ரளயத்துக்கு உதவலாகாதோ? பிறரால் வரும் ஆபத்தோ நோக்கலாவது, உன்னால் வருமாபத்து நோக்கலாகாதோ? சரணம் புகாதாரை ரக்ஷிக்கவேணுமென்றொரு நியதியுண்டோ, சரணம்புக்காரை ரக்ஷிக்கலாகாதோ?" இத்யாதி.

பெருவாயா! என்று இங்கே வாயின் பெருமை சொன்னது அவனுடைய பாரிப்பின் பெருமையைச் சொன்னபடி. எவ்வளவு ரக்ஷணங்கள் செய்தும் 'என்ன ரக்ஷித்தோம்' என்றே நெஞ்சில் குறைவாளனா யிருக்குமவனன்றோ எம்பெருமான் த்ரௌபதிக்காக எத்தனையோ காரியங்கள் செய்தும் [அதாவது:— ஸதஸ்ஸில் அவள் பட்ட மகாபரிபவத்தைப் போக்கியும் துரியோதனாதிகளை நிரஸித்தும் தருமபுத்திரன் தலையிலே முடியை வைத்தும் அவள் குழலை முடிப்பித்தும்] *ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி* என்று குறைவாளனாய், பரமபதத்துக்கு எழுந்தருளுகிறபோதும் *நாதிஸ்வஸ்தமநா யயௌ* என்னும்படி திருவுள்ளத்தில் புண்ணோடே யெழுந்தருளினானென்றால் அவனுடைய ரக்ஷணப்பாரிப்பு பேச்சுக்கு நிலமாகுமோ?

உலப்பில் கீர்த்தியம்மானே!—உலப்பாவது முடிவு; முடிவில்லாத புகழுடைமையாவது திருக்குணங்களைத் தனித்தனியாகவும் ஒரு ராசியாகவும் எண்ண முடியாமை. அல்லது சத்ருக்கள் கோஷ்டியிலும் ப்ரஸித்தமாயிருக்கை யென்னவுமாம். வைய வந்தவர்கள் வாயினாலும் வாழ்த்த வேண்டும்படியன்றோ எம்பெருமானுடைய திருக்குணங்களிருப்பது. ஸ்ரீராமாயணத்தில் சூர்ப்பணகை, தாரை, மந்தோதரி ஆகிய மூன்று கைம்பெண்டாட்டிகளும் நிந்திக்கவேண்டிய பிரகரணத்திலும் வாயாரவாழ்த்தினபடி கண்டால் பின்னை என்சொல்லவேணும்? காதும் மூக்கு மறுப்புண்டு கரதூடணர் பக்கலில் கதறிக்கொண்டு ஓடாநின்ற சூர்ப்பணகை நெஞ்சைப் பறிகொடுத்து *தருணௌ ரூபஸம்பந்நௌ* என்று தொடங்கி ஆச்சரியமாக வாழ்த்துகிறாள். இங்ஙனமே மற்றுங் காண்க.

நிலவுஞ் சுடர் சூழொளிமூர்த்தி — ரக்ஷிக்குமவனல்லனாயினும் குணமுடையவனல்லனாயினும் விடமுடியாத வடிவழகு படைத்தவனென்கிறது. நிலவும் என்றது எப்போதுமுள்ள தென்றபடி. ஒரு கருமமடியாக வருவதும் பிறகு கழிந்து போவதுமன்றிக்கே நித்யஸித்தமான சுடர்மிக்கதாய் ஒளிமயமான மூர்த்தியாயிருக்கை. ரஜஸ் தமோ குணங்கள் கலசாமல் சுத்தஸத்வமயமாய் நிரவதிக தேஜோ ரூபமாய் நெய்திணுங்கினாப்போலே உள்ளும் புறம்புமொக்க ஒளியேயாயிருக்கை.

நெடியாய்! — தொட்ட தொட்ட துறைதோறும் தரை காணவொண்ணாதபடி பெருகிச் செல்பவனே! என்கை. ச்ருதியானது* வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* என்று ஓதிற்று. அவ்வர்த்தமே நெடியானென்பது விளியுருபு ஏற்று நெடியாய்! என்றாகும்.

அடியேன் ஆருயிரே! — வடிவழகையும் திருக்குணங்களையும் காட்டிப் பிரிந்து பிழைக்க வொண்ணாதபடி என்னைப்பண்ணினவனே! என்றவாறு. "திருவேங்கடத் தெம்பெருமானே அடியேனாருயிரே!" என்று கூட்டுவது. திருமலையிலே நின்று என்னுடைய சேஷத்வ முறையை யறிவித்து உன்னையல்லது செல்லாதபடி பண்ணின வனே! என்கை.

அந்தத் திருமலைதான் எப்படிப்பட்ட தென்றால், திலகமுலகுக்காய் நின்ற திருவேங்கடம்; மாதர்கட்கு ஆபரணம் அழகு பெறுவிக்குமாபோலே பூமிப் பிராட்டிக்குத் திலகமென்னுமாபரணமாயிருந்து அழகு பெறுவிக்குமதென்கை. ஆக மூன்றடிகளாலே எம்பெருமான்படிகளைப் பரக்கச்சொல்லி மேலே குலதொலடியேன் என்று ஸ்வஸ்வரூபத தைச்சுருங்கச்சொல்லுகிறார். பிரானே! குலபரம்பரையாக நான் உனக்கே அடிமைப் பட் டவனன்றோ; வேறொருவர் கடைத்தலைபுகுந்து கிடந்துழல்பவனோ நான்; என்னை நீ நோக்காவிடில் வேறு நோக்குவாருண்டோ? என் ஸ்வரூபம் இதுவான பின்பு ஸ்வரூபாநு ரூபமான பேற்றைப் பெறும்படி பண்ணி யருளவேண்டுவது உன் கடமையன்றோ. அடியானுக்கு அடியோடேயன்றோ சேர்த்தி தகுவது; அடியைப் பிரிந்திருந்து அடியே னென்றால் தகுதியாமோ? அடியேன் உன்திருவடி சேரும் வகையைப்பற்றி ஒரு வார்த்தையருளிச் செய்யவேணும் என்றாயிற்று. 1

கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *
சீறாவெரியும்திருநேமிவலவா தெய்வக்கோமானே! *
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே! *
ஆறாவன்பிலடியேன் உன்னடிசேர்வண்ணமருளாயே. 2

| | | | |
|---|---|---|---|
| கொடு வல் அசுரர் குலம் எல்லாம் | மிகக் கொடிய அசுரர்களின் கூட்டமெல்லாம் | சேறு ஆர் சுனை தாமரை | சேறு நிரம்பிய சுனைகளிலே செந்தாமரை மலர்கள் |
| கூறு ஆய் | பல பல கண்டங்களாகி | செம் தீ மலரும் | சிவந்த தீப்போன்ற நிறத்தை யுடைத்தாய்க் கொண்டு மலரும்படியுள்ள |
| நீறு ஆய் | சாம்பலாகி | | |
| நிலன் ஆகி | தரைப்பட்டிருக்கச் செய்தே யும் | திருவேங்கடத் தானே | திருமலையிலே எழுந்தருளியிருப் பவனே! |
| சீறா | பின்னையும்சீறி | ஆறா அன்பின் அடியேன் | அளவுபடாத அன்பையுடையே னான நான் |
| எரியும் | ஜ்வலியா நிற்கிற | | |
| திரு நேமி வலவா | திருவாழியாழ்வானை வலவரு கிலே ஏந்தியிருப்பவனே! | உன் அடி சேர் வண்ணம் | உன் திருவடிகளைச் சேரும்படி |
| தெய்வம் கோமானே | நித்ய ஸூரிநாதனே! | அருளாய் | அருள்புரிய வேணும். |

**: [கூறாய் நீறாய்] விரோதிகளையெல்லாம் கிழங்கெடுக்கவல்ல திவ்யாயுதத்தினால் ஒளிபெற்றிருக்கிற நீ எனது விரோதிகளையும் போக்கி, நான் உன் திருவடிகளைச்சேரும் படி க்ருபைபண்ண வேணுமென்கிறார். "கொடுவல்லசுரர் குலமெல்லாம் கூறாய் நீறாய் நிலனாகி" என்று அன்வயிப்பது. சத்ருக்களை முதலில் இருதுண்டமாக்கிப் பிறகு நீறாக்கிப் பின்பு அதுவுங் காண வொண்ணாதபடி வெறுந்தரையாக்குமென்று திருவாழியாழ்வானு டைய விக்கிரமம் சொல்லுகிறது. மூலத்தில் ஆகி என்றிருந்தாலும் 'ஆக' என்று எச்சத் திரிபாகக் கொள்ளலாம். கூறாய் நீறாய் நிலனாம்படியாக வென்றபடி. 'ஆக்கி' என்று பிறவினையாகவுங் கொள்ளலாம். 'சீறா' என்பது செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம்; சீறியென்றபடி. வலவா — வல்லவன் என்ற சொல் வலவன் என்று

தொகுத்தலாய் வினியுருபு ஏற்றதாகக் கொண்டால் 'திருவாழியை அடக்கியாள வல்லவனே!' என்று பொருளாம்.

தெய்வக் கோமானே!—"யாம் கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீ யென்றால் அஃதுனக்கு வியப்பாமோ" (திருவரங்கக் கலம்பகம்—க.) என்று ஐயங்கார் பணித்தபடியே ஸகல தெய்வங்களுக்கும் மேற்பட்ட தெய்வம் நானே யென்பதைத் திருமலையில் விளங்கக் காட்டிக்கொண்டு நிற்பவனே! என்றபடி.

[சேறார் சுனைத்தாமரை மித்யாதி.] தாமரைக்குப் பங்கஜ மென்று பெயராதலால் சேறு நிரம்பிய சுனைகளிலே அவை சிவந்த தீப்போல தோன்றி மலர்கின்றனவாம் திருமலையில். இங்கே ஈட்டில் ரஸோக்தி காண்மின் ;—"எண்ணெயாலே எரியும் விளக்கொழிய நீராலே யெரியும் விளக்கு கண்டு அநுபவிக்கக்காணும் இவராசைப் படுகிறது ; நீரிலே நெருப்பெழுந்தாற் போலேயிறே யிருக்கிறது."

ஆருவன்பிலடியேன்—ஆழ்வார்க்கு இதுவொரு நிரூபகமான திருநாமம் போலும். "ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன்" என்றாப்போல ஆராதவன்பையே நிரூபகமாகவுடைய அடியேன் என்கிறார். கீழ் மூன்றாமடியில் சுனைகளைப்பற்றி ப்ரஸ்தாவம் செய்தாரே : அந்தச் சுனைகளில் நீர்வற்றினாலும் வற்றும், தம்முடைய அன்பு வற்றாதென்கிறார் போலும். இப்படிப்பட்ட அடியேன் உன் திருவடிகளிலே சேர்ந்து அடிமைசெய்யும்படி. என் பக்கலிலே க்ருபை பண்ணியருளவேணும் ; நீ திருமலையிலே நிற்கிறநிலைக்குப் பயன் பெறவேணும் ; எனது அன்புக்கு இரையிடவேணும் என்கிறாராயிற்று. 2

வண்ணமருள் கொளணிமேகவண்ணா மாயவம்மானே !*
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே இமையோரதிபதியே !*
தெண்ணலருவிமணிபொன் முத்தலைக்கும் திருவேங்கடத்தானே !*
அண்ணலே யுன்னடிசேர அடியேற்காவாவென்னாயே. 3

| | | | |
|---|---|---|---|
| வண்ணம் அருள் கொள் | அருளே வடிவெடுத்த வண்ணமாய் | மணி பொன் முத்து | மணிகளையும் பொன்களையும் முத்துக்களையும் |
| அணி மேகம் வண்ணா | அழகிய மேகம் போன்ற நிறத்தையுடையவனே! | அலைக்கும் | கொழிக்குமிடமான |
| மாயம் அம்மானே | ஆச்சரிய குணங்களையுடைய ஸ்வாமியே! | திருவேங்கடத்தானே | திருமலையிலே விளங்குபவனே! |
| எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே | நெஞ்சுக்குள்ளேபுகுந்து ரஸிக்கும் அமிருதமானவனே! | அண்ணலே | ஸ்வாமியே! |
| | | உன் அடி சேர | உன் திருவடிகளிலே வந்து சேரும்படி |
| இமையோர் அதிபதியே | தேவாதி தேவனே! | அடியேற்கு | அடியேன் விஷயத்திலே |
| தெண் நல் அருவி | தெளிர்ந்தழகிய அருவிகள் | ஆ ஆ என்னாய் | ஐயோவென்றிரங்கியருளவேணும். |

* * * [வண்ணமருள் கோள்.] கீழ்ப்பாட்டில் 'உன்னடிசேர் வண்ணமருளாய்' என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர்கேட்டபோதே நாம் அருள முடியுமோ? அதற்கு ஸமயமில்லையோ?' என்ன ; இதர விஷயங்களில் போகாதபடியான ஜ்ஞானலாபத்தைப் பண்ணித்தந்தவுனக்கு ப்ராப்தி பண்ணித்தருகை அரிய பெரிய காரியமோ வென்கிறார். வண்ணமருள்கோள் அணிமேகவண்ணா !—அருள் வண்ணங்கொள், அணிமேகவண்ணா என்று அந்வயிக்கலாம். அருள் வண்ணங்கொள்—அருள் தானே வடிவெடுத்த என்றபடி. அருளே திருவேங்கடமுடையானாக மூர்த்திகரித்த தென்றவாறு. அருள் என்னாமல் 'மருள்' என்றும் சொல் பிரிக்கலாம். வண்ணம்—வடிவானது, மருள் கொள்—கண்டார் நெஞ்சை இருளப்பண்ணக் கடவதாயிருக்கிற என்றபடி. மாயவம்மானே!—வெறும் வடிவழகு மாத்திரமேயல்லாமல் ஆச்சரியமான குண சேஷ்டிதங்களா

னும் பெரியனானவனே!. எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே-தேவர்களுடைய அம்ருதத்திற் காட்டில் விலக்ஷணமான அம்ருதமென்கிறது. அவ்வமுதத்தைப் புஜிக்க வேணுமானால் தேவயோநியிலே பிறக்க வேணும்; பிறந்தாலும் அமிருதத்தை புஜிக்குங்காலத்திலே ஸாதநாநுஷ்டாநங்களுக்கு யோக்யதையுண்டாம்படி ஆகாசகங்கையிலே ஸ்நானம் பண்ணி ஜபம் முதலியன செய்து வருந்தவேணும்; இவ்வமுதம் அப்படியன்றே; இன்னாரினையாரென்கிற அதிகாரி நியதியில்லை; சிந்திதமாத்திரத்திலே எண்ணம் புகுந்து 'ஆராவமுதாயடியேனுவியகமே தித்திப்பாய்'' என்று தித்திக்கும். *உளங்கனிந்திருக்கு மடியவர் தங்களுள்ளத்துளூறிய தேனுகையாலே எண்ணம்புகுந்து தித்திக்கச் சொல்ல வேணுமோ?

இமையோரதிபதியே!—மது தவிர வேறொன்றைக் கண்ணெடுத்தும் பாராத வண்டுக்கு 'மதுவ்ரத' மென்று பெயர்; அப்படியே எம்பெருமானை இமை கொட்டாமல் *ஸதாபச்யந்தி* என்கிறபடியே இடைவீடின்றி ஸேவித்துக்கொண்டிருக்கும் நித்ய முக்தாகளுக்கு இமையோரென்று பெயர்; அவர்களுக்கு அதிபதியே!.

அந்த இமையவர்களுக்குக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிற விருப்பு மீனுக்குத் தண்ணீர் வார்க்குமாபோலே யிருப்பதொன்று என்று கருதி எம்போலியர்க்குக் காட்சி தருதற்கென்றே வந்து நிற்கிற விடமன்றோ திருமலை. அவ்விடத்து அருவிகளுக்குள்ள ஔதார்யமும் உனக்கு அருமைப்படவேணுமோ? அவை மணிகளையும் பொன்களையும் ஸர்வஸ்வதானம் பண்ணுகிறபடி கண்டால் நாமும் அங்ஙனே ஸர்வஸ்வ தானம் பண்ணவேணுமென்றிருக்க வேண்டாவோ நீ? எனக்கு நீ ஒன்றும் கொடுக்க வேண்டா; திருவுள்ளத்திலே என்னைப்பற்றி ஐயோவென்று சிறிது இரங்கியருளவமையும் என்கிறார். ஹா ஹா என்கிற வடசொற்கள் ஆவாவெனத் திரியும்; இரக்கக் குறிப் 3 பிடைச்சொல்.

***

ஆவா வென்னுதுலகத்தையலைக்கும் அசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா திருமாமகள்கேள்வா
தேவா! * சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராயே. 4

| | | | |
|---|---|---|---|
| ஆ ஆ என்னாது உலகத்தை அலைக்கும் | இரக்கமில்லாமல் உலகத்தவர்களை ஹிம்ஸிப்பவர்களான | தேவா | தேவனே! |
| அசுரர் வாழ்நாள் மேல் | ஆஸுரப்ரக்ருதிகளினுடைய ஆயுளை முடிப்பதற்காக | சுரர்கள் முனி கணங்கள் விரும்பும் | தேவர்களும் முனிவர்களும் திரள் திரளாக ஆதரிக்கும்படியான |
| தீ வாய் வாளி | நெருப்பை உமிழ்கிற அம்புகளை | திரு வேங்கடத்தானே | திருமலையில் எழுந்தருளியிருப்பவனே! |
| மழை பொழிந்த சிலையா | மழைபோலேவர்ஷித்தசார்ங்க வில்லையுடையவனே! | பூ ஆர் கழல்கள் | (உனது) புஷ்பங்கள் நிறைந்த திருவடிகளை |
| திரு மா மகள் கேள்வா | திருமகள் கொழுநனே! | அரு வினையேன் பொருந்தும் ஆறு புணராய் | மஹாபாபியான நான் கிட்டும்படி கற்பித்தருளவேணும். |

* * * [ஆவா வென்னாது.] பிரானே! உன்னைப் பெறுகைக்கு உடலாக நீ சாஸ்த்ரங்களில் காட்டிக்கொடுத்த ஸாதனங்களொன்றும் எனக்கு உபயோகப்படவில்லை; ஆனபின்பு எனக்கென்று தனியேயொரு ஸாதனம் கண்டு தரவேணுமென்கிறார். இக் கருத்துக்கொண்ட அவதாரிகை நம்பிள்ளை இட்டருளுகிறார்: எனக்கென்று தனியேயொரு ஸாதனம் கண்டு தரவேணுமென்று பிரார்த்திக்கிறவிதற்குக் கருத்து என்ன? என்று ஆராயவேண்டும். "நான் பண்ணின பாவங்களுக்கு நீ ஸ்ருஷ்டித்திருக்கிற நரகங்கள் போராது; எனக்கென்ன ஒரு நரகம் கல்பிக்கவேணும்" என்று ஒருவர் சொன்னால், நரகம் கல்பிக்க வேணுமென்பது இங்கு விவக்ஷிதமன்றே; பரமதயாளுவாய்

சக்திமானான நீ அத்தைப் போக்கியருளவேணும் என்பதே கருத்தாகும்; அதுபோலே இங்கும் ஸித்தோபாயமான நீயே ரக்ஷித்தருள வேணுமென்பதுதான் தாத்பரியமாகத் தேறி நிற்கும்.

இந்த ப்ரஸங்கத்திலே ஈட்டில் ஒரு ஐதிஹ்யம் அருளிச் செய்யப்படுகிறது; "நம்பிள்ளை ஜீயரை ஒருநாள், பஞ்சமோபாயமென்றுகொண்டு ஒன்றுண்டு என்று சொல்லா நின்றார்கள், நாட்டிலேயும் அங்ஙனேயிருப்பதொன்றுண்டோ? என்று கேட்டருள, நான் அறிகிலேன்; இனி சதுர்த்தோபாயந்தான் பகவானேயாயிருக்க, வ்யோமாதீதம் சொல்லுவாரைப்போலே அவனுக்கு மவ்வருகே யொன்றுண்டு என்கையை நான் கேட்டறியேன் என்றருளிச் செய்தார்" என்று. இந்த ஸ்ரீஸூக்திகளைக் காணுமவர்களுக்கு ஒரு சங்கை தோன்றும்; ஆசார்யாபிமாநம் ஐந்தாவது உபாயமென்று ஸ்ரீவசநபூஷணாதிகளில் ப்ரஸித்தமாயிருக்க, அதற்கு மாறாக நஞ்சீயர் அருளிச் செய்தாப்போலே தெரியவருகின்றதே, இது என்ன? என்று. (இதற்கு ஸமாதானம்.) ஆசார்யாபிமாநம் ஸ்வதந்த்ரோபாயமானாலும் அது ஸித்தோபாயத்திற்குள்ளேயே அந்தர்ப்பூதமாக நினைக்கத்தக்கது. "ஈச்வரனைப் பற்றுகை கையைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி; ஆசார்யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்தியை நன்கு நோக்குமளவில் இவ்விஷயம் அவகாஹிக்கும். ஆகவே ஆசார்யாபிமாநமென்பது ஸித்தோபாயத்திலேயே சேருகிறிற்கும். இதை ஐந்தாவது உபாயமென்று சொல்லியிருந்தாலும் 'காரியஞ் செய்யும் விஷயத்தில் இது அமோகமானது' என்பதைத் தெரிவிப்பதிலேயே அது பர்யவஸித்து நிற்குமத்தனை.

மேலே சொன்னவிதமாக நஞ்சீயர் நம்பிள்ளைக்கு அருளிச் செய்தபோது பின்னையும் நம்பிள்ளை கேட்டாராம்—"இப்படியானால் * ஆவா வென்னுதென்கிற பாட்டு அருளிச் செய்யும்போது 'எனக்குத் தனியேயொரு ஸாதனங்கண்டு தரவேணுமென்கிறார்' என்று தேவரீர் அருளிச் செய்வதுண்டே, அது எங்ஙனம்?" என்று. அதற்கு நஞ்சீயர் உத்தரமருளிச் செய்ததாவது—நான் அங்ஙனே சொன்னதற்குத் தாத்பரியம் கேளாய், எம்பெருமானே! நீ இருக்கும்போது நான் இங்ஙனே இழக்கலாகுமோ? ஸித்தோபாயமும் தட்டுப்படலாகுமோ? என்று வெறுத்துச் சொல்வது மாத்திரமே தாத்பரியம்—என்று.

ஆவா வென்னாது உலகத்தையலைக்குமசுரர்—உலகில் யாரேனும் வருத்தப்படுவாருண்டாகில் அவர்களைக்கண்டு ஹா ஹா! [ஐயோ ஐயோ] என்று இரங்க ப்ராப்தம்; அதற்குமாறாக உலகத்தைக் கொடிதாக வதை செய்யுமவர்கள் ஆஸுரப்ரக்ருதிகள்; அப்படிப்பட்டவர்களுடைய வாழ்நாளைத் தொலைக்கவேண்டி நெருப்பை யுமிழ்கின்ற மிகக்கொடிய அம்புகளைப் பிரயோகித்த கோதண்டராமா! என்றவாறே ஆழ்வார்க்குக் கரதூஷணநிவத ப்ரகரணம் நினைவுக்கு வந்தது; அப்போதைய வெற்றியைக்கண்ட பிராட்டி * தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே * என்கிறபடியே அன்றுதான் பெருமானை பர்த்தாவாக நினைத்து அணைத்துக்கொண்டாள் என்கிற இதிஹாஸத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாக "திருமாமகள் கேள்வா!" என்று விளிக்கிறார். "தீவாய்வாளி மழை பொழிந்த சிலையா திருமாமகள் கேள்வா" என்கிற சேர்த்தியழகு மிகவும் ரஸிக்கத்தக்கது.

தேவா!—"திருமாமகள் கேள்வா தேவா!" என்கிற சேர்த்தியை நோக்குங்கால் * ச்ரத்தயா தேவோ தேவத்வமச்நுதே * என்கிற ச்ருதியின் பொருள் நன்கு பொருந்தும். ச்ரத்தா என்று பிராட்டியின் திருநாமம்; பிராட்டியோட்டைச் சேர்த்தியினால்தான் எம்பெருமான் தேவனாகிறானென்றபடி. இங்கே நம்பிள்ளையீடு;—"(தேவா!) இவளை அணைத்தபின்பு திருமேனியிற் பிறந்த புகர். அன்றியே, விரோதிகளைப் போக்குகையாலே வடிவிலே பிறந்த காந்தியைச் சொல்லவுமாம்." இதில் 'அன்றியே' என்கிற இரண்டாவது நிர்வாஹம் 'தீவாய்வாளி மழை பொழிந்த சிலையா தேவா' என்று யோஜித்து அருளிச்செய்தபடி.

[ஸுராகணித்யாதி.] பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்களும் ஸநக ஸநந்தநாதி மஹரிஷிகளும் இதுவே நமக்கு ப்ராப்யஸ்தானமென்று விரும்பி யிறைஞ்சியேத்துமிடமான திருமலைக்கு இறைவனே! கிட்டியநுபவிக்கப்பெறாத பாபத்தைப் பண்ணின நான் உன்னுடைய பூவார்கழல்களைப் பொருந்தும்படியான ஒரு உபாயத்தைக் கல்பித்தருள வேணுமென்றாராயிற்று. பூ ஆர் கழல் - புஷ்பங்கள் நிரம்பிய திருவடி; அல்லது பூப்போன்ற திருவடி.

திருவேங்கடமுடையானுடைய திருவடிக்குப் பூவார்கழல்களென்றும் அழகிய மணவாளனுடைய திருவடிக்குத் திருப்பொலிந்த சேவடியென்றும், கச்சிநகர்த் தேவப்பெருமாளுடைய திருவடிக்குத் துயரறுசுடரடியென்றும் ஸம்பிரதாயத் திருநாமமென வழங்குவர் பெரியோர். ... ... .... 4

புணராநின்றமரமேழ் அன்றெய்த வொருவில்வலவாவோ! *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோன முதல்வாவோ! *
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே! *
திணரார் சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேனெந்நாளே!. 5

| | | | |
|---|---|---|---|
| அன்று | ராமாவதாரத்திலே | திணர் ஆர் மேகம் என | திண்மை மிக்க மேகங்களென்னும்படி |
| புணரா நின்ற மரம் ஏழ் | ஒன்றோடொன்று பிணைந்திருந்த ஸப்தஸாலவ்ருக்ஷங்களை | களிறு சேரும் | யானைகள் சேருமிடமான |
| எய்த | துளைபடுத்தின | திருவேங்கடத்தானே | திருமலையிலெழுந்தருளியிருப்பவனே! |
| ஒருவில் வலவா ஓ | ஓ தனிவீரனே! | திணர் ஆர் சார்ங்கத்து | திண்மைமிக்க ஸ்ரீசார்ங்க வில்லையுடைய |
| புணர் எய் நின்ற மரம் இரண்டின் நடுவே | சேர்ந்து பொருந்தி நின்ற இரட்டை மருத மரங்களினிடையே | உன் பாதம் | உனது திருவடிகளை |
| போன | தவழ்ந்து சென்ற | அடியேன் சேர்வது எந்நாள் | அடியேன் அணுகப் பெறுவது என்றைக்கோ? |
| முதல்வா ஓ | ஓ மூலபுருஷனே! | | |

* * * [புணராநின்ற.] ஆழ்வீர்! நீர் இங்ஙனே கிடந்து துடிப்பதேன்? எப்படியும் உம்முடைய விருப்பம் செய்வதாகவே நினைத்திருக்கிறோமென்று திருவேங்கடமுடையான் திருவுள்ளமாக, அது என்றைக்குச் செய்வதாகத் திருவுள்ளம்? ஒரு நாளிட்டுத் தரலாகாதோவென்கிறார்.

ஸுக்ரீவன் இராமபிரானால் அபயப்ரதானம் செய்யப்பெற்ற பின்பும் மனம் தெளியாமல் வாலியின் பேராற்றலைப் பற்றிப் பலவாறு சொல்லி வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனை தூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக்கூறி இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்வது கூடுமோ? என்று சொல்ல, அதுகேட்ட லக்ஷ்மணன், உனக்கு நம்பிக்கை இல்லையாயின் இப்போது என்னசெய்ய வேண்டுவது? என்ன, ஸுக்ரீவன், இராமபிரான நீறுபூத்த நெருப்புப் போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது: ஏழு மராமரங்களைத் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விற்கடை தூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்பிக்கையுண்டாகும் என்று சொல்ல ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாகுமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்துயோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கியெறிந்தான்; இப்போது உலர்ந்துவிட்ட இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான ஒரு பாணத்தை ஏழு மரங்களின்மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையும் துளைத்துச்சென்று மீண்டு அம்பறாத் தூணியையடைந்தது என்கிற வரலாறு இப்பாட்டின் முதலடியில் அறியத்தக்கது. இந்தச் சரிதையை ஆழ்வார் இங்கு எடுத்

துக் கூறியது, உன்னுடைய ஆற்றலில் நம்புதலில்லாமல் அதிசங்கைகொண்ட குரூக்ரனுக்கு சங்கையைப் போக்கியும் காரியம் செய்த நீ, உன் பக்கலில் அதிசங்கை சிறிதுமின்றிக்கே உன் ஆற்றலை உள்ளபடியறிந்திருக்குமென் திறத்திலே காரியஞ் செய்யலாகாதோ? என்கைக்காக.

கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில் முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த குபேரபுத்ரரிருவரும் சாபம் தீர்ந்து சென்றனர் என்கிற வரலாறு இரண்டாமடியில் அநுஸந்திக்கத்தக்கது. இன்னாருடைய சாபத்தைத் தீர்ப்பது, இன்னாருடைய சாபத்தைத் தீர்க்கலாகாது என்று ஒரு நியதி வைத்துக்கொண்டிருக்கிறாய் போலும் என்று கேட்கிற பாவனை.

[திணரார்மேகமித்யாதி.] களிறெனை மேகஞ்சேரும், மேகமெனக் களிறுசேரும் என்று இரண்டுபடியும் அந்வயிக்கப் பொருந்தும். யானைபோன்ற மேகங்களும், மேகம் போன்ற யானைகளும் திருமலையிலே வர்த்திப்பது இயல்பு. * தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபால மதயானாய் * என்றும் • சோலை மழகளிறே * என்றும் யானை தானாகச் சொல்லலாம்படியும்* ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராலய காளமேகம் * என்று மேகந் தானாகச் சொல்லலாம்படியும் எம்பெருமானிருக்கிற இருப்புக்கு ஸ்மாரகமானபடி.

திணரார் சார்ங்கத்த உன = உன்கையில் வில் இருக்க நான் இழக்க வேண்டுவதில்லை; இழக்கமாட்டேன்; இனி உன்னைப்பெறும் நாளைச் சொல்லியருளினால் போதுமென்கிறார். ... ... ... 5

எந்நாளேநாம்மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கென்று! *
எந்நாளும் நின்றிமையோர்களேத்தி இறைஞ்சியினமினமாய்! *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே! *
மெய்ந்நானெய்தியெந்நாள் உன்னடிக்களடியேன்மேவுவதே. 6

| | |
|---|---|
| மண் அளந்த தாமரைகள் இணை | உலகளந்த உபயபாதங்களை |
| நாம் காண்பதற்கு எந்நாள் என்று | நாம் காண்பதற்குரிய நாள் எந்த நாளென்று |
| இமையோர்கள் | நித்யஸூரிகள் |
| எந்நாளும் நின்று ஏத்தி | நித்யமாக நின்று துதித்து |
| இறைஞ்சி | வணங்கி |
| இனம் இனம் ஆய் | திரள் திரளாக |
| மெய் நா மனத்தால் | த்ரிகரணங்களாலும் |
| வழிபாடு செய்யும் | ஆராதனை செய்யுமிடமான |
| திருவேங்கடத்தானே | திருமலையில் எழுந்தருளியிருப்பவனே! |
| அடியேன் நான் | அடியேனாகிய நான் |
| மெய் எய்தி | (கனவுபோலன்றிக்கே) மெய்யாகவே யடைந்து |
| உன் அடிக்கள் மேவுவது | உன் திருவடிகளிலே பொருந்துவது |
| எந்நாள் | என்றைக்கோ? |

* * * [எந்நாளே நாம்.] கீழ்ப்பாட்டில் “ உனபாதம் சேர்வதடியே னெந்நாளே ” என்றதற்கு உன் திருவடிகளை நான் சேரப்பெறும் நாள்கூட ஒன்று உண்டா? அது ஏது? என்று ஸந்தேகித்துச் சொல்வதாகவும் பொருளாகக்கூடுமே; எம்பெருமான் ‘ ஆழ்வீர்! எந்நாளே யென்று நீர் ஸந்தேஹிப்பதென்? அது ஒரு தேசவிசேஷத்திலே நியதமாயிருக்குமே ’ என்றருளிச் செய்ய, அங்குள்ளாரும் இங்கே வந்தன்றோ அநுபவிக்கிறது: அப்படியிருக்க எனக்கு மாத்திரம் தேச விசேஷமா? என்கிறார். இப்பாட்டின் இரண்டாமடியில் இமையோர்கள் என்றது நித்யஸூரிகளைச் சொல்லிற்றாகக் கொண்டால் இங்ஙனே ஸங்கதியாகக் கடவது. இனி, ஸ்வர்க்கலோகத்திலுள்ள

தேவர்களைச் சொல்லிற்றாகக் கொண்டால் ப்ரயோஜநாந்தரபரர்களானவர்களுங்கூட அநந்ய ப்ரயோஜநரைப்போலே வந்து ஆச்ரயிக்க நிற்கிறவிடத்தே நான் இழந்து போவதே! என்கிறாராகக் கொள்க.

பன்னீராயிரவுரைகாரர் 'எந்நாளேம்' என்று பதம் பிரித்து உரையிட்டார்; "எந்நாளேம் என்றது எந்நாளையுடையோமென்றபடி" என்பது உரையின் முடிவிலுள்ளது. எந்நாளேம்+நாம், எந்நாளேநாம் என்று சந்தியாகும். "மவ்வீறொற்றொழிந்து உயிரீறொப்பவும்" என்பது நன்னூல். மகரவீற்றதல்லாமல் 'எந்நாளே' என்றே சொல்வடிவமானாலும் அந்வயிக்கக் குறையில்லை; மண்ணளந்த இணைத்தாமரைகளை நாம் காண்பதற்காகும் நாள் எந்நாள் என்றதாகக் கொள்க.

இவ்விபூதியிலுள்ளார் அவ்விபூதியிலே சென்று அங்குள்ள பரத்வத்தைக்கண்டு உகந்து அங்கே அடிமைசெய்ய ஆசைப்படுமாபோலே அங்குள்ளாரும் இவ்விபூதியிலே வந்து ஸௌலப்ய ஸௌசீல்யாதிகளான நீர்மைக் குணங்களை அநுபவிக்கவேணுமென்று ஆசைப்படுவர்களாதலால் 'ஸர்வஸுலபமான திருவடிகளை நாம் காணப்பெறுவதென்றோ' என்ற பாரிப்போடே வந்து இவ்விடம் விட்டுப்பெயர்ந்து போகமாட்டாதே நியதமாக நிலை நின்றிருந்து திரள்திரளாய் மநோவாக் காயங்களினால் ஆச்ரயிக்கும்படியான திருமலையில் உறையும் பெருமானே!.

மெய் நா மனத்தால் வழிபாடு=மெய்யினால் செய்யும் வழிபாடு ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள்: நாவினால் செய்யும் வழிபாடு—தோத்திரம்; மனத்தால் செய்யும் வழிபாடு—சிந்தித்தல். மெய் என்பதை நாவிலும் மனத்திலும் அடைமொழியாகவும் கூட்டலாம்; மெய்யான நா, மெய்யான மனம் என்க. இங்கு மெய்ம்மை ப்ரயோஜநாந்தரத்தை விரும்பாமை.

ஈற்றடிக்கு ஈடு காண்மின்:—"குணாவிஷ்காரத்தாலே மாநஸாநுபவத்தைப் பண்ணுவித்துப் பகட்டவொண்ணாது; நான் உன் திருவடிகளைப் பத்தும் பத்தாகக் கிட்டிப் பின்னை விச்லேஷத்தோடே வ்யாப்தமாகாதபடி பொருந்தப் பெறுவது என்றோ வென்கிறார். ஓரடிவிடில் ஸத்தையற்றிறே இவர்க்கு இருக்கிறது."

முதலடியில் "இணைத்தாமரையடிகள்" என்ன வேண்டுமிடத்து 'இணைத்தாமரைகள்' என்றது முற்றுவமை, *தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே* என்றவிடத்திற்போல.

பவிஷ்யத் புராணத்தில் சரணாகதியநுஷ்டானத்தைக் காட்டுமிடத்தில் *லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ* என்று உலகளந்த திருவடிகளை ப்ரஸ்தாவித்து அந்தத் திருவடிகளிலே சரணாகதியநுஷ்டானம் செய்வதாகக் காட்டியிருந்தாலும், கத்யமுகத்தாலே சரணாகதி செய்தருளின எம்பெருமானார் தாமும் அந்த ச்லோகத்தை முன்னிட்டே உலகளந்த திருத்தாளிணையில் சரணாகதி செய்ததாகக் காட்டியிருக்கையாலும் சரணாகதி ப்ரகரணத்தில் உலகளந்த திருவடிக்கு ஒரு விசேஷமுண்டென்று தெரிகிறது. இங்கு மேலே *அகலகில்லேனென்கிற பாசுரம் சரணாகதியானமையாலே இவ்வாறாம்பத்து முழுவதும் சரணாகதிஸாரமாயிருக்குமென்று நம் முதலிகள் திருவுள்ளம் பற்றுவர்கள். அதற்கு ஏற்ப இவ்வாறாம்பத்தில் உலகளந்த திருவடி ப்ரஸ்தாவம் மலிந்திருக்கும்; *மின்கொள்சேர் புரிநூல் குறளாயகன் ஞாலங்கொண்ட வன்கள்வன்* காண்மின்களுலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்த தாளிணையன் *அகல்கொள் வையமளந்த மாயனென்னப்பன் *திசைஞாலம் தாவியளந்ததும் *மாணுக்கு வையமளந்த மணாளற்கு *மண்ணும் விண்ணுங்கொண்ட மாயவம்மான் *ஓரடியாலெல்லாவுலகுந் தட வந்த மாயோன் *தாவி வையங்கொண்ட தடந்தாமரைகள்* (இங்கு) *மண்ணளந்த இணைத்தாமரைகள்,

இதனால், ஆழ்வாருடைய சரணாகதிக்கு இலக்கான திருவேங்கடமுடையானது திருவடிகள் உலகமளந்த திருவடிகளேயென்று காட்டப்பட்டதாயிற்று. அதாவது, அத்திகைய ஸௌலப்ய ஸௌசீல்யம் வாய்ந்தவை என்கை. ... 6

அடியேன்மேவியமர்கின்றவமுதே இமையோரதிபதியே ! *
கொடியாவடுபுள்ளுடையானே கோலக்கனிவாய்ப்பெருமானே ! *
செடியார்வினைகள்தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே ! *
நொடியார் பொழுதுமுனபாதம் காணநோலாதாற்றேனே. 7

| | |
|---|---|
| அடியேன் மேவி அமர்கின்ற அமுதே | அடியேன் கிட்டி யநுபவிக்கும் படியான அமிருதமே ! |
| இமையோர் அதிபதியே | தேவாதி தேவனே ! |
| அடு புள் கொடி ஆ உடையானே | (பகைவரைப்) போக்கவல்ல கருடனைக் கொடியாக வுடையவனே ! |
| கோலம் கனிவாய் பெருமானே | அழகிய கனிபோன்ற அதரத்தையுடைய பெருமானே ! |
| செடி ஆர் வினைகள் தீர் மருந்தே | செடிபோலே செழித்த பாபங்களைத் தீர்க்கும் மருந்தானவனே |

திருவேங்கடத்து எம்பெருமானே !—.

| | |
|---|---|
| உன பாதம் காண | உனது திருவடிகளைக் காண்கைக்கு |
| நோலாது | நான் ஒரு நோன்பும் அநுஷ்டியாமலிருந்தும் (நோற்றவர்கள் பலன் தாழ்ந்தால் படுமாபோலே) |
| நொடி ஆர் பொழுதும் | ஒரு க்ஷண மாத்திரமும் |
| ஆற்றேன் | தரித்திருக்கமாட்டாமல் துடிக்கின்றேன். |

* * *[அடியேன் மேவி.] பெறுதப்பாதென்று துணிந்திருத்தல் ஸ்வரூபமாயினும் அத்தலையில் போக்யதை நெஞ்சுக்கு விஷயமாக ஆக, தரித்திருக்க முடியாதபடி பதறவேண்டியிருக்குமே; அந்த பதற்றத்தை யருளிச்செய்கிறாரிப்பாட்டில். அடியேன் மேவியமர்கின்ற அமுதே !—எம்பெருமானுக்கு இவர் சாத்தும் ஒரு திருநாமம்போலேயிராநின்றது இது. தேவ ஜாதிகள் உப்புச்சாற்றைப் பருகிக் களிப்பர்கள்; அதுவோ இது? இங்குள்ள மற்றையோர்கள் அநுபவிக்கும் போலேயா நான் அநுபவிப்பது? அடியேனுடைய அநுபவம் அஸாதாரண மன்றோ வென்கிறார். உடனே இமையோரதிபதியே! என்றது—அங்குத் திருநாட்டிலே நித்யஸூரிகள் உன்னை எப்படி யநுபவிக்கிறார்களோ அப்படி இங்கு அடியேன் அநுபவிப்பவனல்லேனோ? என்று காட்டினபடி.

ஆழ்வீர்! திருமலைக்கு வந்து நீர் ஸேவித்துப் போகலாகாதோ? இங்ஙனே கிடந்து துடிப்பானேன்? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, கொடியாவடு புள்ளுடையானே! என்கிறார். * ஆகர்ஷந் த்விஜராஜமப்யதிஜவாத் * என்று பெரிய திருவடியையும் கக்ஷத்திலே யிடுக்கிக் கொண்டு விரைந்தோடி வந்து அருள்செய்வதென்பது சிலர்க்கேயோ? அவ்வருளுக்கு அடியேன் தகுந்தவனல்லேனோ? அந்தப் புள்ளரையனை என்னளவிலே சிறிது செலுத்தினலாகாதோ? என்கிறார் போலும்.

கோலக்கனிவாய்ப் பெருமானே!—அழகியதாய்க் கனிந்திருந்துள்ள திருவதரத்தின் பழுப்பைக்காட்டி என்னையடிமை கொண்டவனுக்கு மீண்டும் அத்திருவதரத்தைக் காட்டுதல் அரிதாயிற்றோ! என்று திருவுள்ளம் நொந்து சொல்லுகிறபடி. "கோலக்கனிவாய்ப் பெருமானே கொடியாவடு புள்ளுடையானே" என்று சேர்த்து அந்வயித்து "ஆச்ரிதரை இவ்வழகை அநுபவிப்பிக்கைக்குக் கொடி கட்டிக் கொண்டிருக்கிறவனே! என்றருளிச் செய்வர் நம்பிள்ளை.

செடியார்வினைகள் தீர்மருந்தே!—நிலத்தில் விளையும் மருந்தைக் காட்டிலும் மலையில் விளையும் மருந்து மிகச் சிறக்குமே; திருமலைமருந்து காணும். * ஆர்மருந்தினியாகுவார் * என்கிற இவ்வாழ்வார்க்கு அசேதநமான மருந்து பிடிக்காதே. எது மருந்து

என்னுதே 'ஆர்மருந்து' என்பவராகையாலே இவருடைய மருந்து சேதநமாகவே யிருக்க வேணுமே. நோய்களைத் தீர்க்கும் மருந்து உலகில் இருந்தாலும் நோய்கட்கு மூலகாரணமான வினைகளைத் தீர்க்கும் மருந்து இல்லையே : மருத்துவனும் மருந்தாயு முள்ளவன் மலையப்பனே காணும். "அடியேன் மேவி யமர்கின்றவமுதே மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே" என்று சேர்த்து அந்வயித்து "அவ்வம்ருதம் புஜிப் பார்க்கு மலைமேல் மருந்திறே; அவ்வம்ருதம் புஜிப்பார்க்குச் சாய்கரகம்போலே உயரத் திலே அணித்தாக நிற்கிறபடி" என்றருளிச் செய்வர் நம்பிள்ளை.

[நோடியார் பொழுதுமித்யாதி.] உனபாதம் காண நொடியார் பொழுதும் நோலாது ஆற்றேனே; என்றுவது, உனபாதம் காணநோலாது நொடியார்பொழுதும் ஆற்றேனே என்றுவது அந்வயிக்கலாம். உன் திருவடிகளைக் காண்கைக்கு உறுப்பாக ஸ்வல்ப ஸாத னமும் நான் அநுஷ்டித்திலேன் : அப்படியிருந்தும், விசேஷமாக ஸாதநாநுஷ்டானம் பண்ணினவர்கள் பலன் தாமதித்தால் துடிக்குமாபோலே நான் துடிக்கின்றேனே யென்கிறார். இங்கே நம்பிள்ளையீடு :—"ஸாதனத்தைக் கண்ணழிவற வநுஷ்டித்துப் பலன் தாழ்ப்பாரைப் போலே படாநின்றேன்..........தனியே ஒரு ஸாதனமநுஷ்டிக்கு மவனுக்கு அது தலைக்கட்டினவாறே பெறுகிறோமென்றுதல், அதிலே சில வைகல்யம் பிறக்கப்பட்டிறே பலன் தாழ்த்தது என்றுதல் ஆறியிருக்கலாம்; அவனே ஸாதனமான விவர்க்கு விளம்பித்தால் அவன் க்ருபையும் ஏறிப்பாயாதபடியானேனோ! என்னும் பய மிறே அநுவர்த்திப்பது."

திருவாராதனத்தில் பெருமாளுக்கு அமுது செய்தருளப் பண்ணும்போது * அடி யேன் மேவியமர்கின்றவமுதே யென்கிறவிப்பாசுரத்தை யநுஸந்திப்பதென்று பட்டர் நியமனம். ... .... ... 7

கோலாதாற்றேனுனபாதம் காணவேன்றநுண்ணுணர்வின் *
நீலார்கண்டத்தம்மானும்நிறைநான்முகனுமிந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே ! *
மாலாய்மயக்கியடியேன்பால் வந்தாய்போலேவாராயே. 8

| | | | |
|---|---|---|---|
| நுண் உணர்வின் | (ஸர்வஜ்ஞனாகையாலே) நுட்பமான உணர்வையுடையனான | சேல் எய் கண்ணார் பலர் சூழ | கயல் கண்ணிகளான தங்கள் மனைவிமார்கள் பலரோடும் கூடிவந்து |
| நீலார் கண்டத்து அம்மானும் | சிவபிரானும் | விரும்பும் | விரும்பிப்பணியுமிடமான |
| நிறை நான்முகனும் | (ஞான சக்திகளால்) நிறைந்த பிரமனும் | | திருவேங்கடத்தானே திருமலையில் வாழ்பவனே! |
| இந்திரனும் | தேவேந்திரனும் | | |
| உன பாதம் காண நோலாது ஆற்றேன் என்று | "உன் திருவடிகளைக் காண்கைக்கு ஸாதநாநுஷ்டானம் பண்ணாதேயிருந்து ஆற்ற மாட்டுகின்றிலேன்" என்று சொல்லிக்கொண்டு | மால் ஆய் மயக்கி வந்தாய் போலே | மயக்கிக்கொண்டு வந்தாப் போலே |
| | | அடியேன் பால் வாராய் | அடியேன் இறந்தும் வந்து தோற்றவேணும். |

*** [நோலாதாற்றேன்.] ஸாதநாநுஷ்டானம் என்பக்கலில் ஒன்றுமில்லையென்று சொல்லிக்கொண்டே ஆசைப்பட்டு நாக்கு நீட்டினால் கிடைக்குமோ? என்று எம்பெரு மான் திருவுள்ளமாக, ஜ்ஞாந சக்திகளால் குறையற்றவர்களான நீலகண்ட சதுர்முக ஸஹஸ்ராக்ஷ ப்ரப்ருதிகளுங்கூடத் தங்களுடைய உபாய தாரித்ரியத்தைச் சொல்லிக் கொண்டன்றோ வந்து உன்னைக் காணப் பெறுகிறது என்கிறார். "நோலாதாற்றேனுன பாதங்காண" என்பது—நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனு மிந்திரனும் சொல்லும் பாசுரமாயிற்று. 'பிரானே! உன் திருவடிகளைக் காண்கைக்கு ஸாதநா நுஷ்டானம் பண்ணாதேயிருந்து வைத்து உன்னை யொழிய ஆற்றமாட்டேன்' என்ப தாம் அந்தத் தேவர்களின் வார்த்தை. இங்கே நம்பிள்ளை ஆச்சரியமாக அருளிச்

செய்கிறார் '—" ஒரு பாணாஸுர யுத்தத்திலே தோற்றுப் போக்கடியற்றவாறேஇங்ஙனே வந்து விழுவர்கள்; ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது 'ஈச்வரோஹம்' என்றிருப்பர்கள். முட்டினவாறே * க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம் * என்று ஸ்தோத்ரம் பண்ணத் தொடங்குவர்கள்."

நுண்ணுணர்வின் = * ஈசாநாத் ஜ்ஞாநமந்விச்சேத் * என்று சாஸ்த்ரம் சொன்னபடி பிறர்க்கு ஞானமளிக்க வல்லனும்படி ஸூக்ஷ்மஜ்ஞானம் நிரம்பியவனும் நீலகண்டன். நீலார்கண்டத்தம்மான்—விஷத்தைக் கண்டத்திலே தரித்த சக்தியை யுடையனும் அத்தாலே உலகுக்குத் தலைவனாகத் தன்னை யபிமானித்திருக்குமவனென்கை. இங்கே ப்ராஸங்கிகமாக ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின் ;—

" அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிலே இவர்களுடைய வாக்யங்களை ப்ரமாணமாகக் கொண்டு போராநின்றோமே யென்னில்; ஸத்வம் தலையெடுத்தபோது சொல்லுமவை யெல்லாம் கொள்ளக்கடவோம். இவை கைக்கொண்டோமென்று இவர்கள் தாங்கள் உத்தேச்யராகார்கள்; * காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர் என்றுண்டே—என்று பட்டரருளிச் செய்வர்."

சேலேய்கண்ணார் பலர் சூழவிரும்பும்—கயல்போன்ற கண்களையுடையவர்களென்று ஸ்த்ரீகளைச் சொல்லுகிறது; ப்ரக்ருதத்தில் அவரவர்களுடைய பத்நிகளைச் சொல்லுகிறது; தேவர்கள் வந்து சரணம் புகும்போது தாங்கள் தனித்து வருகையன்றிக்கே மணாட்டிமார்களோடு கூடி வருவர்களாம். ஈடு :—" ஆபத்து வந்தவாறே மணாட்டிமார் கழுத்திலும் தங்கள் கழுத்திலும் கப்படங் கட்டிக்கொண்டு வந்துவிழத் தொடங்குவர்கள்."

மாலாய் மயக்கி அடியேன்பால் வந்தாய்போலே வாராய்—மாலாய் மயக்கி வந்தாப்போலே அடியேன்பால் வாராய் என்று அந்வயிப்பது. மால் என்று கண்ணபிரானைச் சொல்லுகிறது. கண்ணபிரானாய்ப் பிறந்து வ்யாமோஹ சேஷ்டிதங்களைச் செய்து வஸுதேவாதிகள் முன்னே வந்து நின்றாப்போலே என்முன்னே வந்து நிற்கவேணுமென்று ப்ரார்த்தித்தபடி. (ஈடு) " க்ருஷ்ணனாய்க்கொண்டு உன் குண சேஷ்டிதங்களாலே அவ்வவதாரத்திலுள்ளாரைப் பிச்சேற்றிக்கொண்டு வந்தாப்போலே எனக்காகவும் ஒரு வரத்து வரவேணும்." ... ... 8

வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே! *
செந்தாமரைக்கண்செங்கனிவாய் நால்தோளமுதே! யெனதுயிரே! *
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே!
அந்தோவடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே. 9

| | | | |
|---|---|---|---|
| வந்தாய் போலே வாராதாய் | கைக்கு எட்டினாற்போலேயிருந்து எட்டாதவனே! | எனது உயிரே | எனக்கு உயிரானவனே! |
| வாராதாய் போல் வருவானே | எட்டாதவன் போலிருந்து எட்டி நிற்பவனே! | சிந்தாமணிகள் பகர் | சிறந்த ரத்னங்களின் ஒளியானது |
| செந் தாமரைக் கண் | செந்தாமரைபோன்ற திருக்கண்களையும் | அல்லை பகல் செய் | இரவையும்பகலாக்குமிடமான |
| | | திருவேங்கடத்தானே | திருமலையில்வாழ்பவனே! |
| | | அந்தோ | ஐயோ! |
| செம் கனி வாய் | செங்கனிபோன்ற திருப்பவளத்தையும் | உன பாதம் | உனது திருவடிகளை |
| | | அடியேன் | அடிமைச்சுவடறிந்த நான் |
| நால் தோள் | நான்கு திருத்தோள்களையு முடைய | இறையும் அகலகில்லேன் | ஒரு க்ஷணகாலமும் பிரிந்திருக்க வல்லேனல்லேன். |
| அமுதே | பரமபோக்யனே! | | |

* * * [வந்தாய்போலே.] தம்முடைய விச்லேஷ வ்யஸநத்தைக் கணக்க அருளிச் செய்கிறார். வந்தாய்போலே வாராதாய்—மாநஸாநுபவம் கரைபுரண்டு போகும்போது நோக்கினால் பாஹ்ய ஸம்ச்லேஷமும் பெற்றோம் என்றெண்ணி த்ருப்தி பிறக்கும்படியா

யிருக்குமே; அத்தை மெய்யென்றெண்ணி அணைக்கைக்குக் கைநீட்டினால் கைக்கு எட்டாதபடியன்றோ இருப்பது; அதைச் சொல்லுகிறது இங்கு. வாராதாய்போல் வருவானே!—வந்து தோற்றுகைக்கு ப்ரஸக்தியில்லையென்று நிச்சயித்து ஆசையற்றுக் கிடக்குங்கால், கேட்பாரற்ற ஸ்வாதந்த்ரியத்தாலும் அப்ரதிஹத ஸங்கல்பத்தாலும் ஆகஸ்மிகமாக வந்து நிற்பதுமுண்டே பகவானிடத்தில்; அதைச்சொல்லுகிறது. வேறுவகையாகவும் நிர்வஹிக்கலாம்; இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"அன்றிக்கே அநாச்ரித விஷயத்தில், கைபுகுந்தானென்று தோற்றியிருக்கச் செய்தே புறம்பாய், ஆச்ரிதர்க்கு இவன் கிட்டவரியன் என்றிருக்கச் செய்தே கைபுகுந்திருக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம்." (இதன் கருத்தாவது—) விபவாவதாரங்களிலே சத்ருக்களாகவுள்ளவர்கள் இதோ இவனைக் கைப்படுத்திவிட்டோமென்று திண்ணமாக எண்ணியிருக்குமளவிலும் அவர்களுக்குக் கைப்படாதே யிருப்பன்; அடியவர்களாயிருப்பார் இவனுடைய பரத்வத்தை யெண்ணி இவன் நமக்கு எளியனாகப் போகிறானோ என்றிருக்கவும் அவர்களிடத்தே தனது ஸௌலப்யத்தைக் காட்டிக்கொண்டு வந்து நிற்பன் என்கை.

செந்தாமரைக்கண் செங்கனிவாய் நால்தோளமுதே—கண்டாருடைய ஸகல தாபங்களும் ஆறும்படி குளிர்ந்த திருக்கண்களை யுடையையாய், சிவந்து கனிந்திருந்துள்ள திருவதரத்தையு முடையையாய், கற்பகத்தரு பணைத்தாற்போலே யிருக்கிற நான்கு திருத்தோள்களை யுடையையாய் எனக்குப் பரம போக்யனாயிருப்பவனே!.

இங்ஙனே வடிவழகின் மிகுதியைப் பேசினவுடனே எனதுயிரே! என்றது—இப்படி விலக்ஷணமான வடிவழகை நான் அநுபவிக்கும்படி பண்ணி, பிரிவில் நான் உளனாகாதபடி பண்ணினவனே! என்றவாறு.

[சிந்தாமணிகள் இத்யாதி.] நெஞ்சால் நினைத்தவாறே எதையும் அளிக்கவல்ல ரத்னத்திற்குச் சிந்தாமணி யென்று பெயர். அதுபோற் சிறந்த ரத்னங்களை இங்குச் சிந்தாமணிகளென்கிறது. திருமலையிலுள்ள ரத்னங்களைச் சொன்னதாகவுமாம்; திருவேங்கடமுடையானுடைய திருமேனியிலணிந்துள்ள ரத்னங்களைச் சொன்னதாகவுமாம். அவற்றினுடைய பகர்—ஒளியானது; அல்லைப் பகல் செய்யாநின்றதாம்; எப்போதும் பகலாகவே காண்கிறதாயிற்று. * படியிடை மாடத்தடியிடைத் தூணில் பதித்த பன்மணிகளின்னொளியால், விடிபகலிரவென்றறிவரிதாய திருவெள்ளியங்குடியதுவே * என்ற திருமங்கையாழ்வாரருளிச்செயல் இங்கு நினைக்கத்தக்கது.

பரமபதம் போலே எப்போதும் பகலேயாயிருக்கின்ற திருமலையிலே யெழுந்தருளி யிருப்பவனே! என்று சொன்னவுடனே அந்தோ! என்றதன் கருத்தை நம்பிள்ளை யெடுத்துக் காட்டுகின்றார் காண்மின்;—"[அந்தோ] போக்யமும் குறைவற்று அவன் தானும் ஸந்நிஹிதனாய் எனக்கு ஆசையும் மிகுந்திருக்கக் கிட்டி யநுபவிக்கப்பெறுதொழ்வதே! என்கிறார்."

அடியேன் உனபாதம் இறையும் அகலகில்லேன்—திருவடிகளை விட்டு நீங்காதவன் என்கிற காரணத்தினாலன்றோ அடியேனென்று பேர் பெற்றது; ஆகவே அடியேனாயிருந்துவைத்து உன் திருவடிகளை விட்டு அகல்வேனோ நான்! இங்கு இறையும் என்றதற்கு அந்தரங்கமான கருத்தை நம்பிள்ளை வெளியிடுகிறார்—"தர்சியாநிற்கச்செய்தே அதுக்கு வர்த்தகமாகக் கண்ணை மாற வைக்கிலும் பொறுக்கமாட்டேன்" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. அகன்றிராமே கலந்திருக்கச்செய்தே அக்கலவிக்கு உத்தேஜகமாக அங்கு பரத்வம் காட்டுவதுண்டு; அதுவும் பொறுக்க முடியாதது என்றவாறு. 9

அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா! *
நிகரில்புகழாயுலகம்மூன்றுடையாய்! என்னையாள்வானே! *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே. 10

| | |
|---|---|
| அலர் மேல் மங்கை | பூவில் வாழ்மகளான பெரிய பிராட்டியார் |
| இறையும் அகலகில்லேன் என்று | ஒரு க்ஷணமும் பிரிந்திருக்க மாட்டேனென்று சொல்லிக்கொண்டு |
| உறை மார்பா | நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருமார்பை யுடையவனே! |
| நிகர் இல் புகழாய் | ஒப்பற்றதான புகழை யுடையவனே! |
| உலகம் மூன்று உடையாய் | சேதநாசேதநர்களுக்கும் ஸ்வாமியே |
| என்னை ஆள்வானே | நீசனான என்னையுமடிமை கொள்பவனே |
| நிகர் இல் | ஒப்பற்றவர்களான |
| அமரர் | தேவர்களும் |
| முனி கணங்கள் | மஹர்ஷி ஸமூஹங்களும் |
| விரும்பும் | விரும்பிவந்து பணியுமிடமான |
| திருவேங்கடத்தானே | திருமலையில் வாழ்பவனே |
| புகல் ஒன்று இல்லா அடியேன் | அநந்யகதியான நான் |
| உன் அடி கீழ் | உனது திருவடி வாரத்திலே |
| அமர்ந்து புகுந்தேன் | மிகப் பொருந்தியாக அங்கமைந்து விட்டேன். |

***[ அகலகில்லேன்.] கீழ் ஒன்பது பாட்டாலும் சரண்யனான ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபத்தையும் தம்முடைய ஆற்றாமையையும் சொன்னார்; இப்பாட்டில், தம்முடைய அபேக்ஷிதம் சடக்கென ஸித்திக்கைக்காகப் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக் கொண்டு தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும் அநந்யகதித்வத்தையும் தெரிவித்துக்கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம் புகுகிறார்.

எம்பெருமானுடைய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகின்ற பெரிய பிராட்டியார் ' இறையும் அகலகில்லேன், இறையும் அகலகில்லேன் ' [ஒரு கணப்பொழுதும் பிரிந்திருக்கமாட்டேன்] என்று இதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறாளாம். ஒரு நிமிஷமும் பிரியாதே நித்ய ஸம்ச்லேஷத்துடனிருக்கும்போது அகலுகைக்கு ப்ரஸக்திதானுமில்லையாயிருக்க இந்த வார்த்தை எதற்காகச் சொல்லவேணுமென்னில் போக்யதையின் கனத்தைப் பார்த்தவாறே ஐயோ! அகல நேர்ந்துவிடுமோ என்னவோ வென்று அதிசங்கை யுண்டாகக்கூடியது; அவ்வதிசங்கை சொல்லுவிக்கச் சொல்லுகிறபடியென்க.

அலர்மேல் மங்கை—புஷ்பத்தின் பரிமளந் தானே ஒரு வடிவு கொண்டாப்போலே தோன்றினவளான ஸ்ரீ மஹாலக்ஷ்மி அந்தப் பூவில் வஸிக்க ருசியாதே அதைவிட்டுத் திருமார்பிலே வந்து சேர்ந்தது அப்பூவிற் காட்டிலும் ஸௌகுமார்யாதிசயமுள்ளவிடம் இத்திருமார்பே யென்று. அவ்வளவு சிறந்ததான ஸ்தானம் கிடைத்தும் இது நமக்கு நிலைக்குமோ நிலைக்காதோ வென்று அதிசங்கை தோன்றுவது விஷய வைலக்ஷண்யப்ரயுக்தம்.

உறை மார்பா!—அப்படிப்பட்ட பெரிய பிராட்டியார் நித்யவாஸம் பண்ணும்படியான திருமார்பையுடையவனே! என்றபடி. எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டுதன்மைகளுண்டானாப்போலே பிராட்டிக்குப்புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டுதன்மைகளுண்டு; புருஷகாரத்வமென்கிற தன்மையை நினைத்து இப்போது இங்குப் பிராட்டியின்புரஸ்காரமென்று அறியக்கடவது. எம்பெருமானுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கும்போது இவளைப்புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? என்னில்; குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே ஸர்வபூத ஸுஹ்ருத்தான அவன் திருவுள்ளத்திலே, சேதநன் அளவுகடந்து பண்ணும் அபராதமடியாகச்சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனேசீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காக வென்க. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தையாற்றி தயையை ஜனிப்பிக்குமவள் பிராட்டி. ஆகையாலே சம்பந்த வுணர்ச்சியுள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகார புரஸ்கரணம் அவசியமேயாகும்.

பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோவென்னில் * அகில ஜகந்மாதரம் * என்கிறபடியே சேதநர்க்கு இவள் மாதாவாய் அந்த ஸம்பந்தமடியாக இவர்

களது வருத்தங் கண்டு பொறுத்திருக்கமாட்டாதே யிருக்கிற வொரு தன்மையும் எம்பெருமானுக்குப் பத்னியாய் * பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு * என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமத விஷயமாயிருக்கிற வொரு தன்மையும் உடையளாகையாலே இவளுடைய புருஷகாரம் ஒரு வகையாலும் விபலமாகமாட்டது.

உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்க வேண்டியது ஒன்று; யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றி பெற்றே தீரும்படியான வால்லப்யமிருக்க வேண்டியது மற்றொன்று இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்று சொல்லிற்றாயிற்று.

இதெல்லாம் உண்மையே; ஈச்வரனோ கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத் தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டி தான் என்ன செய்யமுடியும்? என்னில்; இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் ஸீதையாகப் பிறந்து சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்துமாதம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை முன்னம் மரத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அனுமான் 'பெருமாள் வெற்றிப்பெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக் கொள்வோம்' என்று ஆறியிருந்து ராவணவதமான பின்பு ஓடிவந்து 'இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டுச் சித்திரவதம் பண்ண நினைத்திருக்குமெனக்கு இடமளிக்க வேணும்' என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்லிருங்களுன அவ்வனுமானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தம். அப்படிப்பட்ட விவள் * அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான் * என்கிறபடியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய் * நின்னன்பின் வழிநின்று சிலை பிடித்தெம்பிரானேக * என்கிறபடியே 'மாயா மிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறியாதே அதின் பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிகனாயிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது பற்றிக் கேட்கவேணுமோ?

உறைமார்பா என்பதனால் புருஷகாரபூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடையவும் சேர்த்தியானது எப்போதுமுண்டென்று காட்டப்பட்டதாகும். ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி எம்பெருமானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர ஸத்பாவமென்று கொள்க. சேதனர்களின் அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்கவல்லவனான எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தையும் சேதநர் செய்யும் குற்றங்களின் மிகுதியையுங் கண்டு 'ஐயோ! என்னாகுமோ!' என்கிற பயத்தாலே எம்பெருமானை விட்டு ஒரு நொடிப் பொழுதும் அகலமாட்டாள். இப்படி இவளிருந்து நோக்குகையாலே ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்ச வேண்டிய ப்ரஸக்தியில்லை.

அன்றியும், பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியே யிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில் எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாமென்பது தேறி நிற்கும். 'புருஷகாரம் செய்பவள் அருகே யிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமயப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்கவேணுமென்கிற ருசி பிறக்க வேண்டுவதத்தனையே.

பிராட்டியின் புருஷகாரம் அவசியம் வேண்டியதென்பதை விபவாவதார காலத்துச் செய்தியாலும் தெரிந்துகொள்ளலாம். ராமாவதாரத்தில் அளவு கடந்த அபராதத்தைச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு இலக்காய் தலையறுப்புண்ண வேண்டிய காகம் க்ருபைக்கு இலக்காய்த் தலைபெற்றுப்போனது பிராட்டி அருகிருந்ததனாலேயாம். அவ்வளவு

அபராதியல்லாத ராவணன் ராமசரத்துக்கு இலக்காய் முடிந்துபோனது இவனுடைய ஸந்நிதியில்லாமையினாலேயாம்.

இவ்வர்த்த விசேஷங்களெல்லாம் ஈட்டில் மிக அழகாக அருளிச் செய்யப்பட்டவை: "ஒரு நாள் பட்டர் பிள்ளை யழகிய மணவாள அரையர்க்கு த்வய மருளிச்செய்கைக்காக 'எல்லாரும் போங்கோள்' என்ன, நஞ்சீயருமெழுந்திருந்துபோய் நம்மை இராய் என்று அருளிச் செய்திலர் என்று வெறுத்திருக்க, அப்போதே ஜீயர் எங்குற்றார்? என்று கேட்டருளித் தேடி யழைத்துக் கூட வைத்துக்கொண்டிருந்து த்வயத்தை யருளிச்செய்யா நிற்கச்செய்தே அப்போதருளிச்செய்த வார்த்தை" என்று தொடங்கி ஈட்டு ஸ்ரீஸூக்திகள் ஸேவிக்க.

நிகரில் புகழாய்! இத்யாதி. கீழ் முதலடியில் புருஷகாரவரணம் பண்ணினவாறே அந்த புருஷகார பலத்தாலே எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியமானது தலைமடிந்து தலையெடுக்கும் குணங்கள் சிலவுண்டு; அந்த குணங்களை ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களென்றும் ஆச்ரிதகார்யாபாதகங்களென்றும் இரண்டு வகுப்பாயிருக்கும். அஞ்சாமல் கூசாமல் நாம் ஆச்ரயிக்கும்படி அநுகூலப்படுத்துகின்ற குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களெனப்படும். ஆச்ரயித்த பிறகு காரியம் தலைக்கட்டும்படி செய்யுங் குணங்கள் ஆச்ரித கார்யாபாதகங்களெனப்படும். வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம் ஸௌலப்யம் என்கிற குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யா பாதகங்களாம். ஆச்ரயணோந்முகனான இச்சேதநன் தன் தோஷங்களைப் பார்த்து அஞ்சும்போது தோஷபோக்யத்வரூபமான வாத்ஸல்யத்தை நினைத்து அந்த அச்சம் தீரலாம். நம் காரியம் செய்வனோ செய்யானோ என்கிற சங்கை யுண்டாகுமளவில் இழவு பேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வத்தை நினைத்து அந்த சங்கை தீரலாம். உபயவிபூதிக்கும் கடவனாயிருக்கும் பெருமைக்கு ப்ரகாசமான ஸ்வாமித்வத்தைக்கண்டு தன்னுடைய தண்மையை யநுஸந்தித்து அகல நினைக்க நேருமளவில், தாழ நின்றவர்களோடே புரையறக் கலக்கும் ஸ்வபாவமான ஸௌசீல்யத்தை நினைத்துத் தெளிவுபெறலாம். இந்திரியங்களுக்கு எட்டாதவனான அவனை நாம் எப்படி ஆச்ரயிப்பதென்று பிற்காலிக்க நினைக்குமளவில், தன வடிவை சக்ஷுர்விஷயமாக்குகையாகிற ஸௌலப்யத்தை நினைத்துத் தெளியலாம். ஆக இந்த நான்கு குணங்களும் ஆச்ரயண ஸௌகர்யா பாதகங்களாகையாலே இவை இங்கு வரிசையாக அநுஸந்திக்கப்படுகின்றன. எங்ஙனே யென்னில்:

1. நிகரில் புகழாய் என்று வாத்ஸல்யத்தைச் சொன்னபடி. 2. உலகம் மூன்றுடையாய் என்று ஸ்வாமித்வத்தைச் சொன்னபடி. 3. என்னை யாள்வானே என்று ஸௌசீல்யத்தைச் சொன்னபடி. 4. நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்புந் திருவேங்கடத்தானே என்று ஸௌலப்யத்தைச் சொன்னபடி.

பக்தர்களில் கைங்கர்ய நிஷ்டர்கள் என்றும் குணாநுபவ நிஷ்டர்கள் என்றும் இரண்டு வகுப்புண்டு. எங்கும் அப்பாகுபாட்டைத் திருவுள்ளம் பற்றியே "அமரர் முனிக்கணங்கள்" என்றதென்று அருளிச்செய்வர். * வைகுந்தத்தமரரும் முனிவரும் வியந்தனர் * என்று பரமபதத்திலும் இங்ஙனே பாகுபாடு உள்ளதாகச் சொல்லிற்று.

புகலொன்றில்லாவடியேன்—ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமும் ப்ரபத்திக்கு அதிகாரமாகையாலே அவையிரண்டையும் சொல்லுகிறதிங்கு. கர்மஜ்ஞாந பக்திகளிலும் அவற்றுக்கு ஹேதுவான ஆத்ம குணங்களிலும் அந்வயமின்றிக்கே அவற்றுக்கு விபரீதங்களானவற்றிலே தான் பரிபூர்ணனாயிருக்கிற விருப்பையும், தன்னுடைய ஸ்வரூபம் ஸர்வப்ரகாரத்தாலும் ஈச்வரனுக்கு அத்யந்த பரதந்த்ரமாயிருக்கிற விருப்பையும் அநுஸந்தித்து நம் கார்யத்துக்கு நாம் கடவோமல்லோமென்றிருக்கை = ஆகிஞ்சந்யம். மாதா பிதாக்கள் புத்ரர்கள் ப்ராதாக்கள் ப்ரஹ்மருத்ராதிகள் யாரும் ரக்ஷகர்களல்லர்; ஸர்வேச்வரனே ரக்ஷகன் என்றிருக்கை — அநந்யகதித்வம். இவையிரண்டுமுடைமை சொல்லிற்று 'புகலொன்றில்லாவடியே'னென்பதனால்.

உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேன்—ஆக இவ்வளவாலும் த்வயத்தில் பூர்வகண்டம் அநுஸந்திக்கப்பட்டதாயிற்று. ப்ரபத்தியானது வாசிகமாகவும் காயிகமாகவும் மாநஸிகமாகவும் உண்டு. 'என்னை நீ ரக்ஷிக்கவேணும்' என்று வாயினால் ப்ரார்த்திக்கை வாசிகமாகும். * அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ * என்றபடியே பகவத் ப்ரஸாத ஹேதுபூதமான அஞ்ஜலியை ப்ரயோகித்தல், காகாசுரன் முதலானோரைப் போலே ரக்ஷகவஸ்து இருந்தவிடத்தே வருதல் செய்கை காயிகமாகும். திண்ணிய அத்யவஸாயங் கொள்ளுதல் மாநஸிகமாகும். * ஜ்ஞாநாந்மோக்ஷ மென்று சொல்லுகையாலே மாநஸிகமே சிறந்ததாகும். அதுவே இங்கு உற்றது. அஸ்மதாதிகளுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஆழ்வார் பாசுரமிட்டு அருளிச்செய்த வித்தனை ; இதனால் ஆழ்வாருடைய ப்ரபத்தி வாசிகமென்று கொள்ளக்கடவதன்று. 10

* அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர் ! வாழ்மினென்றென்றருள்கொடுக்கும் *
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே. 11

| | | | |
|---|---|---|---|
| அடியீர் | அடியவர்களே ! | முடிப்பான் சொன்ன | ஸம்ஸாரத்தை முடிப்பதற்காக அருளிச்செய்த |
| அடி கீழ் அமர்ந்து புகுந்து வாழ்மின் என்று என்று | 'நம்முடைய திருவடிகளின் கீழே புகுந்திருந்து உஜ்ஜீவித்துப் போருங்கள்' என்று அபயஹஸ்தமும் காட்டிக் கொடுத்து. | ஆயிரத்து | ஆயிரத்தினுள்ளும் |
| அருள் கொடுக்கும் | க்ருபை பண்ணுகிறவனும் | திருவேங்கடத்துக்கு இவை பத்தும் | திருவேங்கடமலை விஷயமான இத்திருவாய்மொழியை |
| படி கேழ் இல்லா பெருமானை | ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்தவனுமான ஸர்வேச்வரனைக் குறித்து | பிடித்தார் பிடித்தார் | ஸாக்ஷாத்தாகவும் பரம்பரையாகவும் அவலம்பித்தவர்கள் |
| பழனம் குருகூர் சடகோபன் | நீர் நிலங்களையுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | பெரிய வானுள் | பரமாகாசமென்கிற பரமபதத்திலே |
| | | வீற்றிருந்து நிலாவுவர் | நிலைநின்று வீற்றிருப்பர்கள். |

* * * [அடிக்கீழமர்ந்து.] இத்திருவாய்மொழியைப் பற்றினவர்கள் திருநாட்டிலே நித்யாநுபவம் பண்ணப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றார். எம்பெருமானுடைய திருக்கையானது திருவடியை நோக்குமாபோலே யிருப்பதுண்டே ; அதற்கொரு கருத்துக் காணலாம் ; " அடியவர்களே ! உங்களுக்கு இந்தத் திருவடியே தஞ்சம் ; இதன்கீழே அமர்ந்து புகுந்து வாழ்ந்து போங்கள் " என்று தெரிவிப்பதாகக் கருத்துக்கொள்ளலாம் ; அதனை இங்கு முதலடியில் காட்டியருளுகிறார். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * ஸ்ரீடம் ஸ்ரீரங்கே சயிது: * என்கிற ச்லோகத்தில், * நிஹீநாநாம் முக்யம் சரணமிதி பாஹுஸ் தநிகர : ஸ்புடம் ப்ரூதே பாதாம்புஜயுகளம் ஆஜாநு நிஹித : * என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.

படிக் கேழ் இல்லாப் பெருமானை=படியென்று ஒப்பு ; கேழ் என்று உயர்வு ; ஒப்புமுயர்வு மில்லாத பெருமான். *நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே *நிஸ்ஸமாப்யதிகமப்யதந்தயம் தேவ மௌபநிஷதீ ஸரஸ்வதீ * ஒத்தார் மிக்காரையிலையாய மாமாயா * என்கிற ப்ரமாணங்கள் காண்க. அன்றிக்கே, " அருள் கொடுக்கும்படிக்கு, கேழ் இல்லாப்பெருமானை " என்றுங் கொள்ளலாம் ; " ஆச்ரித விஷயத்தில் அருள்கொடுக்கும் ஸ்வபாவத்துக்கு ஒப்பில்லாத ஸர்வேச்வரனை " என்பது சாரம்.

முடிப்பான் சொன்னவாயிரம்—தம்முடைய மநோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக அருளிச்செய்த ஆயிரமென்று உரைத்தார்கள் சில ஆசாரியர்கள் ; " * பல நீ காட்டிப் படுப்பாயோ என்கிற ஸம்ஸார விரோதத்தை முடிக்கையிலே திருவுள்ளத்தாலே அருளிச் செய்தவாயிரம் " என்பர் நம்பிள்ளை.

திருவேங்கடத்துக்கு இவைபத்தும்—* வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண் புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் * என்ற திருவாய்மொழித் தனியன்படியே ஆயிரமும் ஸ்ரீ ரங்கநாதன் விஷயமாக ஸங்கல்பிக்கப்பட்டு அதில் இத்திருவாய்மொழி திருவேங்கடத்துக்குப் பகுத்துக் கொடுக்கப்பட்டதென்பது நன்கு அறியக்கிடக்கின்றது.

இப்பாட்டின் ஈற்றடியின் சுவைக்கு ஏற்ப ஈட்டில் நம்பிள்ளை யருளிச் செய்த ஸ்ரீஸூக்திகள் காண்மின் :—“ இவர் பண்ணின ப்ரபத்தியே நமக்குமெல்லாம். தனித்து வேண்டா, இப்பாசுரத்தைச் சொல்லிப் பலத்திலே அந்வயிக்குமத்தனை. நற்கன்றுக்கு இரங்கினது தோல் கன்றுக்கு இரங்குமாபோலே இவரை நினைத்து இப்பத்தும் கற்றார் பக்கலிலும் ஈச்வரன் ப்ரஸந்நனும். ஸ்ரீ விபீஷணாழ்வானோடு வந்த நால்வர்க்கும் அவன் பண்ணின ப்ரபத்தியே அமைந்ததிறே. ‘இவனுடையவன்’ என்று எதிர்த்தலைக்குத் தோற்றவிருக்கு மத்தனையே வேண்டுவது.”

“பிடித்தார் பிடித்தார்” என்ற இரட்டிப்புக்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர்; (1) சொல்லைப் பற்றினவர்கள். (2) பொருளைப் பற்றினவர்கள் என்று ஒரு நிர்வாஹம். பிடித்தாரைப் பிடித்தவர்கள் என்றபடியாய் ஸம்பந்தி ஸம்பந்திகளைச் சொன்னதாக மற்றொரு நிர்வாஹம். 11

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
திருவாய்மொழி திவ்யார்த்ததீபிகையில்
ஆறாம்பத்து முற்றிற்று.